ஸ்ரீ

# ரமண ஞான போதம்

## நான்காம் பாகம்

# அநுபவ விளக்கம்

## (இரண்டாம் பிரிவு)

ஸ்ரீ முருகனர்

ஓம்

நமோ பகவதே ஸ்ரீ அருணாசல ரமணாய

# ஸ்ரீ
# ரமண ஞான போதம்

## நான்காம் பாகம்

## அநுபவ விளக்கம்

(இரண்டாம் பிரிவு)


இயற்றியவர்

ஸ்ரீ முருகனார்



பதிப்பாளர்

ஸ்ரீ ரமண கேந்திரம்—புது தில்லி

1984

கிடைக்குமிடம் :—

**ஸ்ரீ ரமணாச்ரமம் புத்தக சாலை**
திருவண்ணாமலை-606 603
தமிழ் நாடு.

Ramana Kendra,
8, Institutional Area,
Lodi Road, New Delhi-110 003.

Sri Sadhu Om,
Tiruvannamalai-606 603
Tamil Nadu.

Ramana Kendra,
No. 1, C. P. Ramaswami Iyer Road,
Madras-600 018.

Ramana Maharshi Centre for Learning,
40/41, II-Cross, Lower Palace Orchards,
Bangalore-560 003.

**விலை ரூ. 10**

மத்திய அரசின் உதவி பெற்று இந்நூல் வெளியிடப்படுகிறது.

Published with the Financial Assistance from the Government of India, Ministry of Education & Social Welfare (Dept. of Education.)

This book has been published on the paper supplied by the Government of India at concessional rates.

அச்சிட்டோர் :
விநாயக ஃபைன் ஆர்ட் பிரிண்டர்ஸ்,
163, வெள்ளாளத் தெரு, சென்னை-600 084.

# பதிப்புரை

ஸ்ரீ முருகனார் அருளிய பாடல் ஒவ்வொன்றும் செம்மணி யாய்த் திகழும் சிறப்புடையது. இத்தகைய மணிகள் பல்லா யிரக் கணக்கில் மலைமலையாய்க் குவிந்து கிடந்தன. "ஸ்ரீ ரமண ஞான போதம்" என்ற நூல் வரிசையில் இவற்றை உருவும் பொருளும் சுருதி வகைப்படுத்தி, அழகழகாக வரிசைப் படுததி, சின்னஞ்சிறு மாலைகளாகக் கோத்து வெளி யிட ஆர்வமும் தகுதியுமுள்ள பதிப்பாசிரியர் ஒருவரை கவியே நமக்குக் காட்டித் தந்துள்ளார். அவர்தான் தமிழ்ப் புலவரும், ஸ்ரீ ரமண பக்தரும், ஸ்ரீ முருகனாருக்கு நீண்ட கால, நெருங்கிய நண்பருமாகிய தவத்திரு சாது ஓம் சுவாமிகள் அவர்கள். இவரது பெருந்தொண்டுக்குத் துணைபுரிந்து நூல் வரிசையின் நான்காம் பாகமாகிய இந்த "அநுபவ விளக்கம்— இரண்டாம் பிரிவு" என்ற நூலை வெளியிடுவதில் புதுதில்லி, ரமண கேந்திரம் பெருமிதம் கொள்வதோடு, இந்த முயற்சி வெற்றியோடு முடிவுற நல்லன்பர் உதவியை நாடி நிற்கிறது.

**கி. சுவாமிநாதன்**

ரமண கேந்திரம்,

புதுதில்லி,

12—9—84

ஓம்

நமோ பகவதே ஸ்ரீ அருணாசல ரமணாய

# முன்னுரை

**'ஸ்ரீ ரமண ஞான போத'**த்தின் நான்காம் பாகமாக வெளி வருவது ஸ்ரீ முருகனாரது **ஆன்மாநுபவ விளக்கத்தின்** இரண்டாம் பிரிவு ஆகும். ஸ்ரீ ரமண பகவானைக் குருவாக அடுத்ததால் ஸ்ரீ முருகனார் பெற்ற ஞானாநுபவங்களை சுமார் 8000 பாடல்களால் அவர் விளக்கி யுள்ளார் என்பது சென்ற பிரிவின் முன்னுரையிற் கூறப்பட்டது. அவை அநுபவ விளக்கம் I, II, III, IV, என்று நான்கு புத்தகங்களாக வெளி யிடப்படுகின்றன. அவற்றுள் 'அநுபவ விளக்கம்—இரண்டாம் பிரிவு' ஆகிய இந்நூலில், ஆன்மீக நெறியிலேயே முற்ற முடிந்த நிலையாகிய பிரம்மாநுபூதியைத் தாம் அடைந்து அனு பவித்த பேரானந்த லஹரியில் ஸ்ரீ முருகனார் அதை எத்தனை யெத்தனை விதமாக வர்ணிக்க முடியுமோ அத்தனை விதமாக வும் தமது அருள் ஞானக் கவி வாணியாற் புலப்படுத்து கின்றார்!

'ஸ்ரீ ரமண பிரம்மாஸ்திரம்' எனப்படும் 'நான் யார்?' என்னும் ஆன்மவிசார நெறியால் தானடைந்த ஆத்ம சாக்ஷாத்கார அநுபவத்தை ஸ்ரீ முருகனார்,

> "நேராக நின்றேனை நீயா ரெனக்கேட்ட
> கூரான, சுத்தவருட் கோமா னெதிரிலெனக்
> 'காரேநா' னென்றவிசா ரத்தா லகந்தைமயல்
> பேர்வா லகத்திற் பிறங்கியதென் னுண்மையே'
>
> —பாடல் 1266

> "சொல்லுவ தெல்லாஞ் சுருதிப் பொருளாகப்
> புல்லுவதாம் போதவருட் பூரணன்பால்—தொல்லியல்சேர்
> நானா ரெனவகத்து நாடி யதன்மூலட்
> டானமாந் தன்மைதலைத் தேன்"
>
> —பாடல் 1169

"உள்ள வுணர்வொளியே யுள்ளமாத் தேற்றினன்
உள்ளலற்ற சுத்த வுளத்திலே—கள்ளமற்ற
மோனக் கருத்தாலே முற்றமுழுப் பூரணமாய்
நானற்ற நானுனேன் நான்".

—பாடல் 1345

என்றும்,

தானடைந்த பரப்பிரம்மபத நிலையை

"யானுக வென்னை யுடையா னியற்பதமெய்ஞ்
ஞானுறு பூதிவளர் நாட்டத்தால் - ஆனு
வறிவான நானே யகிலமாத் தேர்ந்து
பிறிவில் பிரம்மமா னேன்."

—பாடல் 1355.

என்றும்,

ஸ்ரீ பகவான் தன்னைப் பரம புத்தனுக்கிய அருட்சிறப்பை,

"மத்தனு மென்னை மலர்ந்தகடைக் கண்ணெளியாற்
புத்தனு வாழப் பொலிவித்தான்—சித்தமலங்
கெட்டடியே னுண்மைக் கிளரொளியாந் தன்பதத்திற்
கட்டறவாழ் கின்றேன் கலந்து."

—பாடல் 1365

என்றும்,

இவ் வுலகம் எவ்வளவு தெளிவாகக் கண்முன் காணப்படுகிறதோ அதைவிடத் தெளிவாகவும், அண்மையிலும் 'கடவுட்பரம்' தனக்கு அனுபவமாகிறது என்பதை,

"பணித்தென்னை யாண்ட பரஞ்சோதி தன்பால்
அணித்தா வடைந்தேற் கருள்விலா சத்தால்
நணித்தா விளங்கிற்று ஞாலத் தினுந்தான்
கணிக்கலரு முண்மைக் **கடவுட் பரமே"**

—பாடல் 1275

"போதவருட் பூரணமும் புண்ணியன்முன் னண்ணியதும்
பேதவகப் பேய்க்கலக்கம் பேர்தலால்—மேதகுசச்
சிற்பரமா மோன சிவானந்த வாழ்க்கையெனக்
கற்புதமா வுற்ற தகத்து"

—பாடல் 1283

என்றும்,

ஸ்ரீ பகவானிடம் ஸ்ரீ முருகனுர் தம் மனம், வாக்கு, காயம் மூன்ருலும் சம்பூரணமாகச் சரணுகதி செய்துவிட்ட நிலையை வெகு ஹாஸ்யமாக,

"இனறுமுத லாக நான் என்றென்று முன்னடிமை
என்றெழுதி யென்ற னிதயமே—மன்றவோ
ராவணமா* வொப்பினே னுகக்கை யொப்பமிட
யாவலைவற் காண்கிலேன் யான்."

—பாடல் 1392

என்றும்,

இதுவரை தாம் அடைந்த பெரும் பேறுகளை உலகத்தவரை நோக்கிக் கூறிவந்த ஸ்ரீ முருகனுர், "ஆண்டவன் முன்னிலைக் கூற்று" என்ற தலைப்பில், ஸ்ரீ பகவானு லடைந்த மேன்மைகளை யெல்லாம் ஸ்ரீ பகவானது திருமுன்பே (சந்நிதியிலேயே) கூறிவர ஆரம்பித்து விடுகின்ருர்! அதனுல் இது, நம்பிக்கை யற்ற மக்களுக்கும் நம்பிக்கை ஏற்பட ஒரு பெரும் உத்தரவாத மாக அமைந்துவிடுகிறது. "ஆண்டவா, நான் கூறுவது முகத் துதியல்ல; முற்றுண்மை" என்ற பாங்கில் அவை விளங்கு கின்றன. அவற்றுட் சில:

"முகத்துதியா வொன்றும் மொழிகிலேன் மோன
சுகத்தியல்பா நின்ற சொரூபா—நிகழ்த்துந்
தரமன் றெனக்குநீ தந்தபே ரின்பப்
பரமான சாந்திப் பதம்."

—பாடல் 1585

என்றும்,

ஆண்டவன் வேறு, தான் வேறு என்றிருந்த துவிதக் கருத்து அற்றெழிய ஏற்பட்ட அத்வைதானுபவத்தால் தான் பேரமைதி யுற்ற நிலையை.

"ஆவேச மான வகந்தைமுனைப் பற்றெழிந்து
தேவேச னுனநின் சிற்பதத்தே—நீ வேறு
நான்வே றெனுங்கருத்து நட்டமாய் மோனமுற்று
நான்வே சறவுதீர்ந் தேன்."

—பாடல் 1489.

என்றும்,

*ஆவணம் - எழுதப்படும் பத்திரம்.

அகந்தை யற்றதால் இரண்டற்ற பெருநிலையான 'பூமா' வின் அனுபவம் தனக்குக் கிடைத்ததை,

"என்ருதை யான விறைவா நா னுன்னியைபாற்
பொன்ருத சுத்தவருட் பூமாவில் வாழ்கின்றேன்
தொன்ருன ஞான சொரூபானு பூதியால்
இன்ரு வொழிந்ததுநா னென்னு மகந்தையே"

—பாடல் 1543

என்றும் பாடுகின்ருர்.

முடிவாக இப் பிறப்பின் பெரும் பயனுகத் தாம்பெற்ற பேரானந்த லஹரியை,

"உள்ளத் தொளியா வொளிர்சொருபன் சன்னிதியிற்
கள்ளமனங் காணுக் கரந்தொழியப் பெற்றதால்
எள்ளத் தனையு மிடர்ப்பா டிலாதசுக
வெள்ளத் தமிழ்ந்து விளையாடு கின்றேனே."

—பாடல் 1296

என்றும்,

தான்பெற்ற பேற்றுக்குக் கைமாறு யாது செய்யமுடியும் என்ற வியப்பை,

'அம்மையப்ப ஞக வகத்தே யமர்ந்தருளித்
தன்மயமா மோனவருட் சத்திநிபா தத்தெளிவாற்
செம்மைசேர் சுத்த சிவாத்துவிதச் சிற்பரவாழ்
விம்மையே நல்கினுய்க் கியானென் கடவேனே."

—பாடல் 1808.

இத்தகைய பெறற்கரும் பேற்றைத் தமக்கருளிய ஸ்ரீ ரமண பகவானின் அருட்பெருங் கருணையை நம் போன்ற மற்றெவ் வுயிர்க்கும் பறைசாற்றி ஊர்ஜிதம் செய்வாராய்,

'என்னையே போன்ற விழிசினர்வே ருருமில்லா
வுன்னடியே னுன்னையே யுள்ளியுள்ளி யுள்ளத்திற்
பின்னமற்ற சுத்தப் பிரம்மானு பூதிபெற்றேன்;
உன்னை யடைந்தா ரொருவரும்வீண் போகாரே."

—பாடல் 1541.

என்றும் கூறித் தேற்றுகின்ருர் ஸ்ரீ முருகஞர்.

அடைதற்கரிய மானிடப் பிறவி பெற்ற கோடிக்கணக்கான ஜீவர்களுள் மிகச் சிலர்க்கே எய்தற்குரியதும் உயர்வற வுயர்ந் ததுமான, மேற்கண்ட இந்தப் பிரம்பாநு பூதிச் செல்வத்தை ஸ்ரீ ரமண கருணையினுல் ஸ்ரீ ரமண சற் சீடரான ஸ்ரீ முருகனுர் அடைந்தார்; தாமடைந்த மெய்ப்பேற்றை உலகத்தவர்க்கும் எடுத்துரைத்துள்ளார். இதை ரமண பக்தர்களுள்ளும் மிகச் சிலரே அறிவர். அரிய அனுபவப் பேற்றைத் தாமடைந்தும் ஒன்றுமறியாத சாமானியர் போலவே நம்முடன் எளிமையாய் வாழ்ந்துவந்த ஸ்ரீ முருகனுரை, "இவ்வுத்தம அருட்சாம்பிராச் சியத்தைத் தாங்கள் அடைந்தது எப்போது?" என்று வினவு வார்க்கு, அவர் இந்நூலின் 1691 ஆவது பாடலில்,

"குருவடிவா வுற்றவருட் கோமானுன் செல்வத்
திருவடியை யென்றுநான் சேவித்தே னன்றே
மருவு பிறப்பிறப்பு மாற்றியே சொந்தப்
*பெருவமவா முத்திநலப் பேறுபெற்றுய்ந் தேனே."

என்றும்,

1707 ஆவது பாடலில்,

"நன்ரே பிழைகளோ நண்ணு வதீதசிவந்
தென்றுமோர் பெற்றித்தா மென்னியல்யான் காண்குறுவால்
என்றேநா னுன்னைத் தரிசித்தே னெம்பெருமான்
அன்றே பிறவிப் பெரும்பயன்யா னுர்ந்தேனே."

என்றும் கூறுகின்ருர் ஸ்ரீ முருகனுர்.

சரி, இதை நாம் எப்படி நம்புவது? தொட்டதற்கெல்லாம் சான்றுரையும் கைச்சாற்றுங் கொண்டுதான் நம்ப முடியும் என்றவாறு சந்தேக புத்தி தடித்துப் போன தற்காலத்தவர்க்கு, ஸ்ரீ முருகனுரை ஆட்கொண்டு ஞானுநுபவம் அருளிய அவரது சற்குரு ஸ்ரீ ரமண பகவானது கைச்சாற்றே மக்களை நம்பும் படிச் சந்தேக நிவர்த்தி செய்ய இயலு மல்லவா? அதைக் காட்டும் ஒரு சிறு நிகழ்ச்சி:

---

* பெருவடிவு - பிரம்ம சொரூபம்.

ஸ்ரீ முருகனார் தன் சற்குரு ரமணபிரானை முதன்முதல் சந்தித்தது 1923ல் அவர் பாடிய 'ஸ்ரீ ரமண சந்நிதி முறை, என்னும் சிறப்பு மிக்க தோத்திர நூல் அச்சாகி வெளி வந்தது 1933ல். அவ்வமயம் அந்த நூலின் சிறப்பைக் கண்ட டாக்டர் உ. வே. சுவாமிநாதய்யர், வித்வான் மு. இராகவையங்கார், தணிகைமணி வ. சு. செங்கல்வராய பிள்ளை, ஸ்ரீ நடனானந்த சுவாமிகள் முதலிய பெருந் தமிழ்ப் புலவோர் பலர் அந் நூலுக்குச் சிறப்புப் பாயிரச் செய்யுட்களை யாத்தனர். அவை யாவுமே ஓர் சிறு தனிப் புத்தக அளவிற்கு நிறைந்து விட்டன. அவ்வமயம் அவற்றையெல்லாம் ஸ்ரீ ரமண பகவானது சந்நிதியிற் பலரும் வாசித்து வருகையில், அங்கு அமர்ந்திருந்த ரமண பக்தர், பாரத்வாஜ விசுவநாத சர்மா என்பவர் அச் செய்யுட்களின் தமிழினிமையால் உந்தப்பட்ட உளத்தினராய், "முகவாபுரி முருகன்" என்று வாய்விட்டு ஒரு சொற்றொடரை இசைத்தார். அது கேட்ட ஸ்ரீ பகவான் அவரை நோக்கி, "அச் சொற்றொடரை உபயோகித்து நீரும் ஒரு சிறப்புக் கவி இயற்றுமே" என்று பணித்தார். திரு விசுவநாதன் பலமுறை முயன்று பார்த்தும் மேலொரு சொல்லும் தமக்கு உதிக்காததால், ஸ்ரீ பகவானிடமே அச்சொற்றொடரைச் சமர்ப்பித்து, "பகவானே அதை ஒரு பாடலாக முடித்தருள வேண்டும்; என்னால் முடியவில்லை" என்று பிரார்த்தித்தார். எனவே ஸ்ரீ பகவான்,

"அகத்தாமரை மலர்மீதுறை யருணாசல ரமணன்
நகைத்தானுற விழித்தானறச் செகுத்தானென துயிரை
மிகத்தானருள் சுரந்தானென முகவாபுரி முருகன்
செகத்தாருய வகுத்தான்முறை திருவாசக நிகரே."

என்று, 'முகவாபுரி முருகன்' என்ற சீர்கள் எத்தொடையில் அமைந்திருந்தனவோ அதே தொடையில், தம் அருள்வாக்காலேயே தன் அடியவரான ஸ்ரீ முருகனரது சிறப்பை இச் செய்யுளில் பாடிவிட்டனர்!

"அகத்தாமரை மலர்மீதுறை யருணாசல ரமணன்..." என்ற கூற்றால் "**அருணாசலரமணன்**" என்பதே தனது முழுத் திருநாமம் என்ற உண்மையை நிரூபித்ததோடு, அத்தகையதாமே ஸ்ரீ முருகனரது இதயகமல மலரில் எழுந்தருளிவிட்டதையும் வெளிப்படுத்தி விடுகின்றார்! அதுமட்டுமல்ல. "நகைத்தான்,

உற விழித்தான்” என்ற பதங்களால், தமது திருவருட் கண்ணோக்கத்தாலும் (சட்சுதீக்ஷையாலும்) மோனப் புன் முறுவலாலுமே (மோனச் சின்முத்திரையாலுமே) புரியும் தமது ஞானக் கொடை முறைமையையும் கூறிவிடுகின்றார் ஸ்ரீ பகவான்! மேலும் “உயிரை அறச் செகுத்தான், மிகத்தான் அருள் சுரந்தான்” என்ற பதங்களால், முருகனார் என்னும் பக்குவ ஜீவனை அறக் கொன்றுண்டு, அழித்து, ஜீவன் முத்தி யாகிய திருவருளை தாம் மிகமிகச் சொரிந்ததையும் ஸ்ரீ பகவான் வெளிப்படுத்திவிடுகின்றார். பின்னும் சிறப்பாக, “முகவாபுரி முருகன் செகத்தார் உய்ய,(சந்நிதி) முறை வகுத்தான்” என்ற பதங்களால், ஸ்ரீ முருகனா ரருளிய ‘சந்நிதி முறை’ என்னும் தெய்வத் திருநூல் உலகத்தாரை உய்விக்கும் என்று அந் நூற் பயனையுங் கூறிவிடுகின்றார் ஸ்ரீ பகவான்! கடைசிப் பதங்க ளாகிற “திருவாசகம் நிகரே” என்றது, ஸ்ரீ முருகனாரது தமிழ் வாசகம் வாதவூரரின் மணிவாசகத்துக்கு நிகரானதே என்று, அருணசல சிவமே தானான ஸ்ரீ பகவானாலேயே அங்கீகரிக்கப் பட்டதைக் காட்டுவதாகிறது. அத்துடன், ஸ்ரீ முருகனார் பண்டைப் பெருஞ் சிவனடியார்களான நால்வருடன் ஒருவராய் உயர்பதவி பெற்றுவிட்டார் என்றே ஸ்ரீ பகவான் ஆமோதிப் பதையும் இது காட்டுகின்றதல்லவா?

இங்ஙனம் ஸ்ரீ முருகனாரது அகத்தாமரை மலர் மேல் அருணசல ரமணன் தானே வந்தமர்ந்ததாக ஒப்புக்கொண்ட பின் அதன் பிறகு எழுதப்பட்ட குருவாசகக் கோவையையும், இந்நூலாகிய ஸ்ரீ ரமண ஞானபோதத்தையும் யார் எழுதி யிருக்க முடியும்? ‘உயிர் அறச் செகுத்தான்’ என்று கூறப் பட்டபின் இவைகளை எழுத ‘முருகனார்’ என்று ஒரு வியக்தி எங்கிருக்கும்? இப்போது இந்நூலின் பாயிரத்தை நோக்கு வோம்.

“என்பரமன் றுதலா விந்த வனுபூதி
தன்பரமாத் தானேதான் சாற்றுகின்றன்—என்பா
விரண்டிலா மோன வியல்வெளியா மொன்றுத்
திரண்டொளிர் சற் போத சிவன்.”

— பாடல் 6

"வண்மைசே ருண்மையொளி வாக்கிற் கலத்தவா
லுண்மையனு பூதி நிலை யோதுவேன்—உண்மயல்போக்
காண்டா னருளா லதா நிகழக் காண்டலாற்
றீண்டாது ஜவச் செயல்"!

—பாடல் 7

ஜீவ வியக்தித்துவம் திருவருளால் அற்றுப்போன மகா புருஷர்கள் பிறகு '**நான்**' என்றோ 'இன்னதை அடைந்தேன்' என்றோ கூடக் கூறவியலாமல் பரமௌனத்தி லாழ்ந்திருப்பர் என்பது உண்மையே யாயினும் தமது அருட்பிரபாவத்தை வெளிப்படுத்தத் தக்க கருவியாக மணிவாசகரைத் தேர்ந்தெடுத்து அவர் பாடிய திருவாசகத்தை உலகில் இனிவரும் முமுக்ஷுக்களின் நன்மையைக்கருதி அம்பலக் கூத்தன் தாமே தம் திருக்கரங்களால் எழுதி வைத்ததைப் போலவே, தமது பேரருட் கொடைத் திறனை உலகுக்கு வெளிப்படுத்த ஸ்ரீ ரமண பிரானே ஸ்ரீ முருகனாரைக் கருவியாகக் கொண்டு, இனிவரும் முமுக்ஷுக்களின் உள்ளத்தில் பெரு நம்பிக்கையை யூட்டவுந் திருவுளங் கொண்டவராய் அவரைப் பாட்டுவித்ததால் தான் திருவருளின் கையில் வெறுங் கருவியாக மட்டும் நின்ற ஸ்ரீ முருகனாரால் இந்த ஸ்ரீ ரமண ஞான போதம் எழுதப் பட்டது என்றே நாம் கொள்ள வேண்டும்.

"சந்நிதி முறை வகுத்தான் திருவாசகம் நிகரே" என்று ஸ்ரீ பகவான் சுட்டிக் காட்டுவதிலிருந்து ஸ்ரீ முருகனாரும் மணிவாசகர் நிகரே என்ற உண்மை வெளிப்பட்டது. ஏனெனில் மணிவாசக ரடைந்த ஆன்மாநுபூதிச் செல்வம் அடையப்பட்டிருந்தாலன்றி முருகனாரது வாசகம் மட்டும் எவ்வாறு திருவாசகம் நிகர்க்கும்? எனவே ஸ்ரீ முருகனாரது ஞானாநுபூதியும் ஸ்ரீ பகவானால், இப்பாடலால், எடுத்துக் காட்டப்பட்டதாகிறது.

உத்தம முமுக்ஷுக்களுள் ஒரு சிலர் தமக்கு எவ்வளவு தான் தெய்வ பக்தியோ, குரு பக்தியோ, விடாமுயற்சியோ, திட சித்தமோ விருந்தாலும், அனிர்வசனீய மாயை தன் அற்புத சக்தியால் புலனலைகளைப் புயலலைகளாக எழுப்பும்போது அதனை எதிர்த்து ஒன்றுஞ் செய்ய வியலாதவர்களாய், மீகாமனில்லாமல் மாகாற் றலைகலமாகப் பீதியுற்று, குருவருளாகிய மீகாமனின் பேருதவியை எதிர்பார்த்து ஏங்கி நிற்பது ஸஹஜம்! அத்தகைய உத்தமப் பக்குவிகளுக்கு மிகப் பெரிய

தோர் ஆறுதலாகவும், நன்னம்பிக்கை முனையாகவும் தோன்றி, "அஞ்சாதீர்! இதோ ஸ்ரீ ரமண குருவருளுதவி சித்தமாக விருக்கின்றது; என்னையுங் காத்தது; உம்மையுங் கரையேற்றும்" என்று மார்தட்டிச் சத்திய மொழி புகன்று, ஸ்ரீ ரமண பகவான் பால் **ஆற்றுப்படுத்தும்** அபய வாக்குகளாக அமைந்ததே ஸ்ரீ முருகனாரது இந்நூல் என்ற உண்மையை பாடல் 1541 ஆல் அறிந்து, மோக்ஷார்த்திகள் வீறுகொண்டெழுந்து வீடடைந் தின்புறுவராக.

திருவருணை **ஸ்ரீ சாதுஓம்.**

12—9—84

# உள்ளுறை

பக்கம்



## 11. ஆண்டவன்பால் அநுபவம்

ஓம்
நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

# ஸ்ரீ ரமண ஞான போதம்

## நான்காம் பாகம்

# அநுபவ விளக்கம்-II

—o—

### பாயிரம்

### க. குரு வணக்கம்

(வெண்பா)

1. மாட்சிசேர் பேரின்ப வண்பதத்தை நீங்கிவறும்
பாழ்ச்செய் வளாவிமனம் பாழ்த்தவுயிர்—மீட்சியுற
வந்துதடுத் தாண்டகுரு மாமணிக்கே நாமணக்கச்
சிந்தை மகிழ்தோத் திரம்.

(கொச்சகக் கலிப்பா)

2. அருள்சே ரறவாழி யந்தணனு வாண்டான்
இருள்சே ரிருவினையை யெற்றியகத் துண்மைத்
தெருள்சேர் சொரூப சிவத்துவம்பா லிக்கும்
பொருள்சேர் புகழ்மனத்தாற் போற்றித் துதிப்பாம்.

### உ. அவையடக்கம்

(வெண்பா)

3. உள்ளலற்ற சுத்த வுளத்திலே மோனமா
வள்ளலுற்று விள்ளுமணி வார்த்தையே—தள்ளலற்றுக்
கற்றோர்கைக் கொள்ளக் கடவதா நட்புரிமைப்
பற்றாலே சொற்றேன் பரிந்து.

(கொச்சகக் கலிப்பா)

4. கழுமலன்பு பொங்கக் கனிந்தகவி யல்லேன்,
இழுமெனுமென் சொல்லா லிறைவனையே போற்றித்
தொழுதெழுமெய் யன்பர்தந் தோழமையால், அன்னூர்
வழியொழுக லூற்று வழுத்துகின் றேனே.

5. நீடலுற்ற சுத்தசிவ நேயத்தா லுள்ளத்து
நாடலுற்றே னுக்குமெய்ஞ் ஞான சொரூபமாக்
கூடலுற்ற சுத்தவருட் கோமான் குணச்சீர்மை
பாடலுற்றேன் பாட்டிற் பரிசயமில் பேதையே.

## ௩. அவனே கர்த்தா

(வெண்பா)

6. என்பரமன் றுதலா லிந்த வனுபூதி
தன்பரமாத் தானேதான் சாற்றுகின்றான் — என்பா
லிரண்டிலா மோன வியல்வெளியா மொன்றாத்
திரண்டொளிர்சற் போத சிவன்.

குறிப்பு: அனுபூதி (இசைத்தல்) என்பரமன்று என்றவாறு

7. வண்மைசே ருண்மையொளி வாக்கிற் கலத்தலா
லுண்மையனு பூதிநிலை யோதுவேன் — உண்மையல்போக்
காண்டா னருளா லதாநிகழக் காண்டலாற்
றீண்டாது ஜீவச் செயல்.

## ௪. நூற் பயன்

(கொச்சகக் கலிப்பா)

8. வாரா வரத்தாக வந்தகத்துத் தங்கலுற்ற
வாரா வமுத வருட்பிரா னுக்கடியேன்
ஆரா தனையாக வாக்கியநற் றேத்திரப்பா
வோராநின் றூர்பா லுவந்துறைவா னெம்மானே.

### ௯. காப்பு

(வெண்பா)

9. தொடர்ந்து விளங்கு சொரூபவருட் சோதி
படர்ந்தியல் சிற்றம் பலத்தே—மடந்தருபொய்
யாணவக்கூத் தோய வடியேன்பே ரின்பநடங்
காணவியற் றுண்டவன்றுள் காப்பு.

குறிப்பு: அடியேன் காண அம்பலத்தே நடமியற்று கின்ற ஆண்டவன் தாள்.

### ௧௦. மங்கலம்

(வெண்பா)

10. உள்ளநிலை யுள்ளபடி யுள்ளமுற வூன்றுவித்த
வள்ளலருட் பாதவொளி மங்கலமா—உள்ளத்தே
யுள்ளதுணர் மோன வுணர்வின் மலர்ச்சியே
கள்ளமறக் காண்மங் கலம்.

### 2. பிரார்த்தனை விண்ணப்பம்

(குறள்)

11. உன்னுண்மை யென்னறிவா லுய்த்துணரொண் ணுமை
உன்னருளா லுன்மெய் யுணர்த்து. [யால்

12. நீயே சொரூபமா நீடுமென் னுண்மைநிலை
நீயே துலக்கா யெனக்கு.

13. உன்னையே வேண்டுகின்றே னுன்னிடத்தென் னுண்டவா
வுன்னையலால் யாதே யுளது.

14. உன்னருளே யல்லான்மற் றென்றுமே வேண்டுகிலே
னென்னுடையாய் நானுன் னிடத்து.

(வெண்பா)

15. அஞ்சியே பேதவுல காரவா ரங்கண்டு
தஞ்சமே னுன்னைச் சரணடைந்தேன்—நெஞ்சிலொளிர்
உண்மைநிலை முற்ற வுரம்பெறநின் னத்துவிதத்
திண்மைசேர் மோனந் திருத்து.

16. இன்றுதொட்டே யன்றுன் னிணையடிக்கே யேழ்பிறப்பாத்
தொன்றுதொட்டே நானடிமைத் தொண்டுபட்டேன்
—[ஒன்றுபட்ட
மோனவுணர் வாலே முழுமுதலா முன்சொரூப
ஞான விபூதிபெற நல்கு

17. இம்மணியே போலு மெதிர்மணியொன் றில்லையெனு
மம்மணியோர் பாற்சே ரருண்மணியே—செம்மணியாஞ்
சிந்தா மணியேயென் சீவச் செழுமணியே
சொந்த சொரூபந் துலக்கு.

18. உடல்வா தனைமுற் றொழிந்ததில்லை ஞானந்
திடமா யுளந்திறந்த தில்லை—சுடர்மாப்
பதமே கதியாகப் பற்றினே னெந்தாய்
சதமாக வாள்வாய் சரண்.

(கொச்சகக் கலிப்பா)

19. உள்ளத் துணர்வா வுளதை யயர்த்தொழிந்து
கள்ள மயக்கக் கருத்தாற் சடவுடலாத்
துள்ளி யெழுந்துலகச் சூதா முருவெளிப்பா
முள்ளழுந்த லுற்றேன் உடையாய்க்கே யோலமே.

குறிப்பு : உள்ளத் துணர்வா வு(ள்)ளது-(பிரஞ்ஞானப் பிரம்மத்திற் பிறித்ன்றக) உள்ளத்துறைகின்ற உணர்வுருவான சுத்தான்ம சொரூபம்; உரு வெளி-உருவெளித்தோற்றம். கைவல்ய நிலை யுணர்த்திக் காத்தருள் என்னும் பொருள் எஞ்சி நின்றது. அழுங்கலுற்றேன் எனவும் பாடம்.

20. அன்னையினு மிக்க வருளுடை நல் லாண்டவா
நின்னருளென் மாட்டு நிகழ்த்தாய் அடியேனுன்
பொன்னடிஞா னத்தாற் புலமனைத்து முன்சொருப
சன்னிதியே யாகத் தழைத்தொளிரக் காணவே.

21. ஆருயிருக் குற்றதுணை யாகிற்பா ரிவ்வுலகில்
யாரையுமற் றேரே னெனையாண்ட வுன்னையல்லால்
வீரியமிக் கான்றவருள் வித்தகா வுன்னொடெனக்
கோரியல்பிற் றனவவ் வுண்மைநிலை தேற்றுதியே.

22. சீரியபே ரின்பவருட் செல்வப் பெருவளத்தால்
ஏரிநிறைந் தன்ன வியல்புடைய வெம்பெருமான்!
வாரிநா னுன்னருளை வாய்மடுக்க வுன்னையன்றி
யாரையும்வே றில்லா வெளியேற் கருளுதியே.

23. பழுதற்ற மெய்ப்புகழ்சேர் பாதமே பாவித்
தழுதுதொழு கின்றூர்க் கரணுக வுள்ளாய்
தொழுதழுகின் றேனைத் துயருரு தாள்வாய்
முழுமுதலா மோனகுரு மூர்த்திப் பிரானே.

24. என்னைநீ யுன்னடிக்கே யின்னினிதா வாண்டுகொண்
[டாங்
குன்னடியே யுண்மை யுயிர்த்துணையாப் பற்றலுற்றேன்;
மன்னியபே ரின்பவருள் வாழ்வெனக்கு மல்கவகத்
தன்னியமின் றுக வலர்த்தாய் சொரூபமே.

25. பதகனென் றென்னைப் பழிப்பதற்கே யன்றி
யுதவுவதற் குன்னையன்றி யாருமெனக் கில்லை
பதநிலையா முண்மைப் பரகதியிற் கூட்டி
யிதவருட்கண் ணேக்கா லிரட்சித் திடாயே.

26. தன்னினும்வே றுகத் தனக்கோர் தலைவனறத்
துன்னியமெய்ஞ் ஞான சொரூப சுயஞ்சோதி!
உன்னடியே னுள்ளத் துணர்வுருவாத் தேற்றிடாய்
அன்னியமல் லாதவவ் வான்ம சொரூபமே.

27. எம்பிரா னுன வியற்பரா! முற்றமுற்ற
நம்பிநா னுன்னடியே நாளும் பரவுகின்றேன்;
உம்பரா ராலு முணர்வரிய சொச்சொருபச்
செம்பதமென் னுள்ளத்துத் தேற்று யொளிபெறவே.

28. பேத மனத்தாற் பிழைபட் டொழிந்தேன்சற்
போத சொரூபவருட் புண்ணியா! நானெனும்பா
ழேத வகந்தையைச்செற் றேசகல்சுத் தாத்துவித
நீதமா ருண்மையென் னெஞ்சத் துணர்த்தாயே.

29. ஆன்றவதிட் டான மறியாது கற்பனையாத்
தோன்றுபல பேதத் தொகையிற் கலங்கலுற்றேன்
ஏன்றுநீ யென்னை யிதயத் தறிவொளியா
மான்றவகங் கார மயக்கமறத் தேற்றுதியே.

30. அற்பனே னுன்னியல்சற் றுய்ந்தறிய வொண்ணுமோ
தற்பரமா முற்றமுழுத் தத்துவா! பேதமனக்
கற்பனைசேர் மோகவகங் காரமுனைப் பற்றொழியச்
சிற்பரமா மோனநிலை தேற்று யடியேற்கே.

31. எங்கு முளாயைநா னிங்கங்கென் றெங்கெங்கோ
பங்க மனக்கற் பனையாற் பரிச்சேதித்
தெங்குமுழன் றெண்ணி யிரண்டுபட வென்றென்றும்
மற்கலுற்ற வென்மதியை மாற்றியுன்மெய் தேற்றுயே.

32. எம்மா லறுதியா வெய்தற் குரியதுமெய்ப்
பெம்மானே யுன்சொருபப் பேறன்றி வேறில்லை;
பொய்ம்மா லகன்றொழியப் பொங்குசிவ போதமா
வம்மாண் பொருளெம் மகந்துலங்கத் தேற்றுயே.

33. பொய்ம்மா லுலகப் புரட்டிலுழல் யானெனும்பொய்ம்
மைம்மா லகன்று மனந்தெளிவா நிற்கிலல்லாற்
பெம்மானே யுன் சொருபப் பெட்பையார் காண்குறுவார்?
உன்மாதம் மாற்றியெனக் குன்சொருபந் தேற்றுதியே.

34. வாடலற்ற சுத்தவருள் வள்ளற் குருபரா!
மூடலுற்ற மோக முனைப்பறக்காண் கூர்விழியால்
ஊடறுக்க வொண்ணுவவ் வொட்பநுட்பச் சிற்பரமா
நீடலுற்ற வுண்மை நிலைவிளங்கத் தேற்றுயே.

35. தேற வெனக்குட் சிவமாக் கலந்தாயைத்
தேற கிலாது செருக்காற் றிகைக்கலுற்றேன்;
மாறுபா டான மயக்கச் செருக்கறச்செற்
றூறுபா டற்றநின் னுண்மையுருத் தேற்றுயே.

36. பொய்வகையே மெய்போற் புலப்படநான் காணலன்றி
உய்வகையால் யாதோ குறுதியுந்தோன் றக்காணேன்
மெய்வழியா தென்று விளங்கவென் னுள்ளத்துத்
தெய்வமே சற்கதிநீ தேற்றி யருளாயே.

37. கற்பனையின் மூழ்கிக் கலங்குறுநான் கைவல்யச்
சிற்பரநின் னுண்மைநிலை தேர்ந்தறிய வொண்ணுமோ
அற்பனே ளுன வடியே னவித்தையகல்
கிற்பதோ ராற்றுற் கிளர் சாருபந் தேற்றுயே.

38. தேற்றுயே னுன்சொருபச் சிற்பதவாழ் வென்னகத்தா
டாற்று தடியே னலமந்து பாழ்படுவேன்
நோற்றேனே யாக நுனித்தருளா லாட்கொண்டாய்
மாற்று தடியேனை வாழ்விப்பா யுன்பதத்தே.

39. துயின்றெழுந்த நாயேன் சுழலுமனத் தோற்றத்
தியன்றியன்று மேன்மே லிடர்ப்படா துண்மை
நயன்றுலங்கு சுத்தமெய்ஞ் ஞானப் பதத்திற்
பயின்றெழுக வென்னைக்கண் பாராய் பரிந்தே.

40. ஆனந்த மான வருட்சிற் பராஅடியேற்
கீனந் தவிர வி தயத் தினிதுறைவாய்
மோனந் துலங்குநின் முன்றிலெனக் கெங்குமென்றுந்
தானகண்ட மாகத் தழைத்துச் செழிக்கவே.
குறிப்பு: சிற்பரா-விளி.

41. எல்லாமா வுள்ளவுனை யானிழந்து மாழ்குவதென்
பொல்லா வகந்தைப் புணர்ப்பாலென் றேர்ந்துகொண்
[டேன்;
எல்லாஞ்செய் வல்ல விறைவாநின் கண்ணேக்காற்
கல்லாத மோகவகங் காரமறக் காணுயே.

42 யானென் றெழுந்துழல்பா ழீனந் தவிர்ந்தகத்துத்
தானென்னு முண்மைத் தகவுபெற வாண்டுகொண்ட
வானந்த மோன வருட்சிற் பரசொருபா!
நானுன்னை விட்டு நழுவாமற் காப்பாயே.

43. தேர்ந்தடையத் தக்க சிவத்துவமா மோனவுணர்
வார்ந்திடவென் னுள்ளத் தருளியவென் னண்டவா
பேர்ந்தொழியா தந்தப் பிரம்ம சொரூபவுணர்
வார்ந்ததுநன் கார்ந்ததே யாக வருளாயே.

44. உன்னடியே னென்னுயிருக் குண்மை யுறவாகத்
துன்னியே வாழ்தலுற்ற தொண்டனே னுக்கருளாய்
அன்னையினும் மிக்கமெய் யன்பா லடியேனை
முன்னையே யாண்டகுரு மூர்த்தி சரணமே.

45. இருப்பறிவின் பான விறைவன் சொரூப
விருப்புணர்வில் லாதார் வெறும்பதரென் பாரால்!
விருப்புவட்டா மெய்யன்பு வேண்டுகின்றே னுன்பாற்
கருப்புவட்டா வுள்ளங் களிக்கமேன் மேலே.

46. அருச்சிக்க லுற்ற வடியரைத் தப்பா
திரட்சிக்க லுற்ற விறைவா! உலக
மருட்சிக் கலக்கமற மாற்றிநின் னுண்மைத்
தெருட்சியென் னுள்ளத்திற் சேரநல் காயே.

47. நம்பத் தகாதபொய்ஞ் ஞாலத்தை நம்பிநம்பிச்
செம்பரமாத் தூன்றுசிவச் செம்பதத்தை நானிழந்தேன்
வெம்பிறவித் துன்பமற மீட்டெனக்கு நல்குதிநல்
லெம்பெருமா னந்தப்பே ரின்பவியற் செம்பதமே.

48. சாற்றற் கரியவருட் சத்திசேர் மெய்த்தகவா
லாற்றப் பெரிய வருந்தலைமை சான்றவா!
வேற்றுத் துணையின்றி விம்முகின்றேன் மீதிரங்கி
யேற்றுக் கொளாய்நீ யெனையுனக்கா ளாகவே.

49. பங்கமில்பே ரின்பவருட் பார்வையாஞ் சிற்சொருபச்
செங்கணு லென்னைச் சிறக்கக் கடைக்கணியாய்
அங்கமே நானென் றகங்கரித்த வாணவப்பாழ்
மங்குலகென் றுன்பதத்தில் வாலறிவா வாழவே.

50. கள்ளமனக் கற்பனையாற் கண்கலங்கி மாழ்காது
நள்ளலுற்ற வென்னை நின்மெய்ஞ் ஞானவருட் கண்பா
துள்ளுமகங் காரத் துடுக்கடங்கத் தன்னடியர் [ராய்
நள்ளிதயத் தேஞான நட்டமிடும் பெம்மானே.

51. நீக்கமற வுன்னையே நீளநினை கின்றேனைக்
காக்க வுனக்கே கடனன்றோ கண்பாராய்!
மூர்க்க வகந்தையற்ற மோனனு பூதியாற்
றேக்கவென் னுள்ளத்துன் சிற்பரா னந்தமே.

52. செருக்கற்ற சுத்தவருட் சிற்பரா! நானென்
றுருத்தலாற் பாழ்பட் டொழிந்தேன்; சொரூப
வருக்கனு வென்னை யலர்த்தாய் மயக்கக்
கருக்கெடவே நின்கருணைக் கண்ணோக்கத் தாலே.

53. தான்றானே யாகத் தழைத்ததோர் தத்துவத்தை
யான்றானென் றேனோ விரண்டுபட மோகித்தேன்
வான்றானு வெங்கும் வளைத்தெழுந்த தற்பரமெய்ஞ்
ஞானனு பூதியிற்பொய்ந் நானறக்கண் ணோக்குதியே.

54. தெய்வமே தெய்வமே யென்றுசிந் திப்பதன்றி
யுய்யவே வேறோ ருபாயமுநா னோர்கிலேன்
பொய்யிலே மூழ்கிப் புரண்டழுங்கு கின்றேனைத்
தூய்யமெய்ஞ் ஞானச் சுடர்கொளுவிக் காப்பாயே.

55. அளந்திடவொண் ணாத வருட்கடலே! முற்றத்
தளர்ந்த வடியேனைத் தாங்கிக்கொள் ளாயேல்
உளைந்துளைந்து மாழ்கிநா னாழ்த்தாழ்த் துலகில்
விளிந்தொழித லன்றிவே றென்செயவல் லேனே.

56. அற்றமற வென்னையடிக் காண்டவவென் னுருயிருக்
குற்றதுணை யாவா ருலகில்வே றொருமில்லை;
கற்றமெய்ஞ் ஞானங் கரதலநெல் லிக்கனியாப்
பற்றவென் னுள்ளுணர்விற் பற்றாய் திருவுளமே.

57. உன்னருளா லுன்னையென் னுள்ளத் துணர்த்தாயேல்
என்னளவோ நானுன் னியலறிந்து தோய்ந்திடுகை?
துன்னருமெய்ஞ் ஞான சொரூப வொளிவெளியா
முன்னியலோ டென்னியலை யொன்ற வுணர்த்தாயே.

58. பேசற் கரியவருட் பெற்றிசே ரெம்பிரான்
மாசற்ற சுத்தவருள் வாழ்வான வுன்பதத்து
நேசக் கிளர்ச்சி நிரம்பலா லுன்னடியேன்
பாசக் கலக்கமறப் பற்றாய் திருவுளமே.

59. பாதந் தலையாற் பணிந்தேன் சொரூபவருட்
போதந் துலங்கவென் புந்தியிலே புக்கருளாய்
பேதங் கலந்தவகப் பேய்மனத்தே ஞைசகளான்
மோதலுற்றுக் கற்பனையின் மூழ்கி யழுந்தாமே.

60 தஞ்சமா வுன்னைச் சரணடைந்த நாயேனைச்
செஞ்செவே யாண்டவருட் சிற்பரா! நின்னுருவென்
னெஞ்சமீ தூன்ற நிறுத்திடாய் நானெனும்பொய்
வஞ்சவே தாளமன வல்லரட்டு மாளவே.

61. பாதமே சற்கதியாப் பற்றினேன் சுத்தசற்
போத வருள்வடிவப் புண்ணியா! யானெனும்பா
ழேதமற வுள்ளத் தியற்சிற் பரசொருப
நீதமார் நிட்டை நிரந்தரமாக் கூட்டுதியே.

62. உன்னையே யோவா துபாசிக்க வென்னகத்துத்
துன்னியமெய்ஞ் ஞான சொரூபா! அடியனேற்
குன்னுருவே யென்னுருவா வுள்ளத் தொளிவளர
வென்னியல்பா வாழிநீ யேகான்மா வாகவே.

63. களியனேன் மாட்டுக் கருணைசே ரன்பாற்
றெளிய விளங்குசிவச் சிற்பரா! யாதோ
ரிளிவரல்சே ராமலெனக் கின்றேபோ லென்று
மொளிவெளியா மன்றவுளத் தூன்றிவாழ் வாயே.

64. அகவா தனையகற்றி யன்புருவா வாண்ட
சுகவாரி யான சொரூபா! சொரூபத்
தகவான மோனவருட் சச்சிதா னந்தத்
திகவா தெனைநீயென் றென்றுமிருத் தாயே.

65. கொடியமோ காணவப்பாழ்ங் கொச்சையே னுன்றுட்
கடியனு வாழ வருளியபண் பாளா!
இடையரு மெய்யன் பிதயஞ் சுரக்க
வுடையா யுதவாய்நா னென்றவுன் னேடே.

66. வாலறிவே தன்மெய் வடிவான தற்பரா
மாலறிவா லேங்கி வருந்துகின்றேன் சுத்தவருட்
சீலதரு நாதா செவிசாய்த் திடுதிகண்டாய்
ஓலமிடு கின்றே னுடையா யடியேனே.

67. மூண்டவெம் பாசத்து மூழ்கலுற்றே னுள்ளுணர்விற்
காண்டலரு சுத்தவருட் கைவல் லியந்துலங்க
வாண்டகுரு நாதா நின் னன்பே யமையுமெனக்
கீண்ட வதனினுமற் றெப்பயனும் வேண்டேனே.

குறிப்பு: 'எச்சுவையும் வேண்டேனே' எனவும் பாடம்.

68. வாலறிவா வுள்ளவருள் வள்ளால்! அடியனே
னேலமிடு கின்றேனென் னுள்ளத் தெழுந்தருளாய்;
பாலடிசில் வேண்டேன் பசிதாக வேட்கையறச்
சாலவருள் சிற்சொருப சாந்தானு பூதியே.

69. அக்காரம் போல வடியனே னுன்னடியை
யெக்காலு மன்பா லிடைவிடா தெண்ணுகின்றேன்
சொக்கா வுனையே தொழுகின்றே னுருயிரைச்
சிக்கா துலகத்திற் சேர்ப்பாய் சிவகதியே.

70. உன்னையே நானென் னுயிருக் குறுதியாத்
துன்னினேன் கண்டாய் சொரூபவருட் செம்பிரான்!
உன்னியலே யானவென் னுண்மையையென் னுள்ளு
நன்னயமார் மோன நிலை நல்கா யடியேற்கே. [ணர்த்தி

71. சொல்லாலே யாராலுஞ் சுட்டித் தொடர்ந்தறிய
வொல்லானே யாருயிருக் குள்ளுணர்வா வுள்ளானே
நல்லானே முற்றமுற்ற நானுன்னை நம்பலுற்றேன்
பொல்லேனென் றென்னைப் புறக்கணியா தோம்பாயே.

72. உன்னையே யன்றியெனக் குற்றா ரொருவரில
ரென்னவே யுன்னை யிதயம் பொதிந்து வைத்தேன்
துன்னியே நீயென் சொரூபமா வுள்ளுணர்விற்
பின்னியமா மோகப் பிணக்கறக்காண் பெம்மானே.

73. நேயமே விட்டு நினைந்துருகும் பத்தியுணர்
வேயவென் னுள்ளத் திறைவா வருளுதியேல்;
மாயமா மோக மனக்கற் பனையினின்று
நாயினே னுய்வேன்மெய்ஞ் ஞானனு பூதிபெற்றே.

74. ஈர்த்தே திருவருளா லென்னையடிக் காண்டவா
கூத்தாடும் பேயகந்தைக் கோலா கலக்களியாற்
பேய்த்தே றுலகைநான் பேணிப்பின் சென்றாலும்
பேர்த்தே யிழுத்திழுத்துன் பெய்கழற்கீழ்க் கூட்டுதியே.

75. ஈட்டமா வுள்ளபே ரின்பத் திருப்பதமே
நாட்டமா நானுன்னை நண்ணினேன் பாழகப்பே
யாட்டமாத் துன்று மலமரல்சேர் கற்பனையின்
கோட்டமற வென்னைக் குறிக்கொண் டருள்வாயே.

76. நம்பினே னுன்னையே நானடியேன் மெய்ஞ்ஞானச்
செம்பரமா வுள்ள சிவதற் பரசொருபா;
எள்பரமோ வுன்னையறிந் தெய்துவது? சுத்தசச்சித்
தம்பரமா வுள்ளத் தலர்ந்தருளா யன்புவைத்தே,

77. விளங்குசிவ ஞான வியோமப் பதத்தைத்
துளங்கு மனோமயப்பொய்த் தோற்றவுல காகக்
களங்கமுற மாற்றிக் கலங்குமோர் பேதைக்
குளங்கலங்கா வுண்மை யுணர்த்தாய் பிரானே.

78. கவன்றுநான் பொய்க்கற் பனையி லுழன்றேன்
அவந்தரு மோக வகப்பாழ் விடிய
உவந்துகா ணென்னை யுடையா யருளால்
அவிர்ந்தொளிர யானுன் னடிக்கீ ழமர்ந்தே.

79 எங்கு முளாயை யிருண்டமனக் கற்பனையால்
இங்கங் கென நா னெதானுமோர் பேர்வடிவிற்
பங்கமுறக் கட்டுப் படுத்தியமோ கப்பிழையைத்
துங்க வுதார சொரூபா பொறுத்தியே.

80. விதவிதப்பொய்ம் மாயா விலாசமே மெய்போற்
பதவுணர்வில் லாதுமலப் பாழிற் பதைப்பேற்
குதவுதியுன் மெய்யன் புணர்வொளியென் னுள்ளத்
திதவுணர்வால் யானுன்மாட் டெக்களிக்கு மாறே.

81. கள்ளமன மாயங் கழன்றொழியப் பேரின்ப
வெள்ளமா வென்னுள் விளைந்தநின் மெய்யருளை
உள்ளியுள்ளி யுள்ள முருகுமெய் யன்புணர்வு
வள்ளலெனக் குள்ள மகிழ்ந்து வழங்குதியே.

82. மாயமா மோக வலேப்பட் டமுங்கலுற்றேன்
பேயனே யாயினுநான் பெம்மானுன் பிள்ளேயன்ருே !
ஆய சொரூப வருட்சிற் பரவாழ்வாந்
தூயமோ னுனுபவந் தோய வருளுதியே.

83. போற்றியோ சுத்தவருட் புண்ணியா ஆணவப்பாழ்ஞ்
சேற்றிலே நின்னடியேன் சிக்கிக் கிடைப்பதோ !
தேற்றியே யென்னேயருட் சிற்பதஞ்சேர்த் தாள்கண்டாய்
மாற்றியே மாய மயக்கவகப் பாழ்கடிந்தே.

84. மருளார்ந்த மோக மனக்கற் பனேயால்
இருளா ருலகி லிடைந்திடுகின் றேனுக்
கருளா யெனில்யானென் னுவேன்! சிவச்செம்
பொருளாக வென்னுட் பொலியவிளங் காயே.

85. உனக்கேநா ளுட்பட்டேன்; உன்னே யொழிய
வெனக்கோர் சரணில்லே; யானென்னதென் னும்பாழ்
மனக்கேத மற்றெழிய மாற்ருய், அடியேன்
வினேக்கேட ளுகவிளங்கலுற் ருேயே.

86. மோனஞா னத்தான் முயங்கிலன்றி மோகஞ்சே
ரேனேஞா னத்தா லெவர்க்கு மியையவொண்ணு
வானவா வுன்சொருப வாலறிவா மோனமெனக்
கூனமற நல்கா யுனேநான் முயங்கவே.

87. நீதியா லுன்னே நினேந்தறியாப் பேதையேற்
கூதியமா வுற்ற வுதாரப் பெருந்தகாய்!
ஓதிநா னுன்னே யுணர்ந்துணர்ந்து மோனுனு
பூதியால் வாழப் புகட்டாய்நின் பொன்னருளே.

88. ஞானப் பிரானுனக்கு நாளே ரடியனேன்
ஊனக் கலக்கத்தா லூழ்த்தொழிதல் கண்டிரங்காய்!
ஞானக் கதிரவநின் ஞானக் கரங்களால்
ஈனக் கடையே னிதயம் மலர்த்தாயே.

89. ஒன்ருன வுண்மையா வுள்ள சொரூபவருள்
என்ரு கிலுமெனக் கெய்தலா லெய்துவனே!
நன்ருன மோனமெய்ஞ் ஞானுனு பூதிசேர்
தொன்ருன சொந்தத் துரீய வியல்வாழ்வே.

90. மறுக்க வொணுதமெய்ம் மாட்சிசே ருன்ருள்
குறிக்கொள்கின் றேனைக் குறிக்கொண் டருளாய்
செறுக்கவே வேண்டும்பொய்ச் சிச்சடக் கட்டை
யறுக்க வருள் வா ளளித்த பிரானே.

91. ஜகவா தனையாற் றவிக்கின்ற நாயேன்
இகவாது நீயென் னிதயத் திருக்கிற்
சுகவாசி யாகத் துலங்குவேன் கண்டாய்
சுகவாரி யான சொரூபப் பிரானே.

92. வித்தகப்பே ராட்சியால் வீணனே னுள்ளத்திற்
புத்தமுத மோனு னுபூதி யளித்தநீ
உத்தமசற் பத்தியா லுள்ளங் கசிந்துருக
மத்தனே னுக்கோர் வரமுவந்து நல்காயே.

93. கற்றுங்கல் லாதேன் கருணைத் திறங்காணேன்;
அற்றங்கு மோக வகத்தா லகங்கரித்தேன்;
முற்றங் குறுகினேன் முற்றவத்தால்; உன்னடியேன்
குற்றங்க ளெல்லாங் குணமாகக் கொள்ளுதியே.

94. நனந்தலை ஞாலத்து நாஞெ ரடியேன்
இனைந்தினைந் தோலமிட் டேங்கிடு கின்றேன்
நினைந்திடு முன்பேநின் னேயர்க் கருள்செய்
யனந்த தயாநிதி யானவம் மானே.

95. தளர்ந்தோரைத் தாங்கு தயாநிதியா முன்னை
யளைந்தே னடியே னருள்வலத்தால்; என்னை
வளைந்தே வருத்தும்பொய்ம் மாயா ஜகத்தா
டுளைந்தொழியா துண்மையுணர் வூற்றந்தா ராயே.

96. கெட்டே னடியேன் கிளர்சொருபத் தீங்கருப்பு
வட்டான வுன்னை மனங்கொண்டு வாழ்த்திவணங்
கொட்டாத வூழ்வலியா லூழ்ந்தொழிந்தேன் மெய்ஞ்ஞான
நிட்டானு பூதியிலென் னெஞ்சை நிறுவாயே.

97. உன்னை யலாம வுறுதியெனக் கில்லையென
வுன்னையே தஞ்சமா வுற்றேனுன் முற்றமுற்றப்
பொன்னையே யன்னவருட் புண்ணியநின் பொன்னடிக்கீ
ழென்னை யுனைமறவா தென்று மிருத்தாயே.

98. அன்னையினு மிக்க வருளாலே யாண்டவா
உன்னையே யன்றியெனக் குற்ற ரொருவரில்லை;
துன்னியகா ராணவப்பொய்ச் சூதா மகந்தையற
மன்னியென் னுள்ளத்தில் வாலறிவா நிற்றியே.

99. துரக்கலுற்ற வூழாற் சுழன்றுவெம் பாழிற்
பரக்க வலைந்து பசாசேபோற் கெட்டேன்;
இரக்கலுற்றே னுன்னையெனக் கின்னருள்பா லிப்பாய்;
அரக்கனே னென்னினுநிற் காட்பட்டே னன்றே.

100. * காவையொக்கின்ற நின்மெய்க் காதலரைக் காத்தியென
ஆவியக்கத் தக்க வருட்பரநிற் கியானுரைத்தல்
தூவியற்கை யானநின் சுத்தப் பரசொருபப்
பார்வையிற்சோர்ந் தன்பர்பாற் பாசமுற்ற வாறன்றே.

* காவையொத்தலாவது :— கா, தனக்கு இன்றியமையாத மழையை வருவித்துக்கொள்ளமாட்டாது. அது தானே வந்துழிப் பொலிந்து, வராதவழியும் ஆமளவும் ஆற்றி, ஆகாத எல்லைக்கண் இறந்துபடுதல் (பரிபாடல் 9, 34 பரிமேலழகருரை).

101. யாரே களைகண் இதயத்துன் சேவடியை
நேரே பிடித்துநின்ற நீதனேற் குன்னையல்லால்
பேராதென் னுருயிரைப் பேணுங்கண் ணேக்கவருட்
காரே சொரூபக் கடவுளா நின்றனே.

102. நின்னடியே தேர்வுறுமெய்ந் நேயங்கூர் நெஞ்சமே
உன்னடியேன் சிந்தை யுவக்கும்பே றுகவெனக்
கன்னதே நல்கி யருளாய் அகவுணர்வா
என்னதா விக்குளுறை யாண்டவா வீண்டவே.

103. *வாசக மாலையால் வார்கழல் வாழ்த்துசிவ
நேசமே யன்றியென் னெஞ்சத்தோ ராசையில்லேன்
யாசகமா வுள்ளமுவந் தீந்தருளப் பெற்றுவக்க
நேசவே ணுசையது நேர்பட்டாற் போதுமே.

*வாசகமாலை—பாமாலை (திருவாய்மொழி 3, 8, 10)

104. வித்தையா லென்னை விடுவித்துக் கொள்ளநான்
புத்திமா னல்லேன் புகலாக வுன்பதமே
பத்தியா லொன்றிமனம் பாவித் தொழுகலுற்றேன்
முத்தியா மோன(ம்) முகப்பவகந் தேற்றுதியே.

105. புத்திமா னல்லேன்சற் போதமா மோனவருள்
வித்தையா லுண்மை விளங்கப் பெறுவதற்கு
வித்தகசிற் சக்தியால் வேதாந்த நுட்பமெனக்
கத்தகவே யுள்ளத் தனுபவமாத் தேற்றுதியே.

106. தேற்றுதிமெய்ஞ் ஞானத் தெளிவான மோனவருட்
பேற்றியல்பா வுள்ளம் பிறங்குசொரூ பானுபவம்
ஆற்றமிகப் பொல்லேனு ணுயினுமுன் பொன்னடியைப்
போற்றியன்றோ வென்பொழுது போக்கலுற்றேன்
புண்ணியனே.

107. சேவிக்க லுற்றேனுன் சேவடியைச் சிந்தையாற்
பாவிக்க லுற்றேனுன் பண்புகளை உன்னருளை
மேவிக் களிக்க விழைந்தவென் னுருயிர்நெட்
டாவிக்க வொட்டாதென் னுசையையீ டேற்றுதியே.

108. என்பரமோ வன்றன் றிதயத்தே சுட்டுணர்வுக்
கும்பரா முன்னை யினி யோர்த்துணர்ந்து யான்கூடல்
செம்பரமா வுள்ளவியற் சிற்பரவாழ் வாகவகத்
துன்பரமா நீயே யுணர்த்தியரு ளாவிடிலே.

109. வாக்குமனங் காயம்பஞ் சேந்திரியம் மாதவமாக்
காக்குமது நின்சொருபக் காதல் வழிபாடே
ஆக்கமா முற்றமெனக் கஃதே யனமகவகத்
தேக்கமொன் று மில்லே னிதய நிறைவாலே.

## 3. ஆண்டவன் அன்புச் செயல்

(குறள்)

110. நோக்கா லகஞ்சேர நூக்கியதோ டன்றிமற்
றீர்த்தானுண் ணின்று மிறை.

111. சுற்றுமனக் கற்பனைதீர் சுத்தவருள் வாலறிவாப்
பற்றினு னென்னைப் பரன்.

(வெண்பா)

112. விண்ணப்ப னுனவுயர் மெய்யப்பன் சுத்தவருட்
கண்ணப்ப னுகக் கருத்திலுற்று—வண்ணப்
பெருமிதமாக் காட்டினுன் பேசவொணு மோன
குருமகிமை யாமெய்க் குலா.

113. தஞ்சமா வென்னுயிரைத் தாங்கினன் புல்லியவென்
னெஞ்சமே கோயிலா நீடினன்—சஞ்சலஞ்சேர்
சிந்தைக் கலக்கமறத் தேற்றினன் மன்னுயிர்க்குத்
தந்தைதா யாம்பெருந்தக் கான்.

114. புத்திக் கலக்கமறப் போக்கினன் மெய்ஞ்ஞான
சித்தித் துலக்கமுறத் தேற்றினன்—முத்திப்
பரசொருப மோனம் பயிற்றின னுள்ளத்
திரகசிய மான விறை.

115. ஞானமா மெய்யன்பு நல்கினன் யானெனும்பொய்
யூனமாம் பொய்வாழ் வொழிவித்தான்—மோனமாத்
தன்னோ டொருமயமா வென்னைத் தழுவினன்
பொன்னோ டொளிபோற் புணர்ந்து.

116. பூட்டின னென்னைத்தன் பொன்னடிக்கா ளாகநிலை
நாட்டினன் றன்சொருப நாட்டத்தே—காட்டினன்
போதானு பூதிப் புணர்ச்சிநலன் பொங்குசுக
மீதான மான வெளி.

117. போதனையா லுள்ளம் புகுந்தான் புகுந்துதிரள்
வாதனையைப் பூண்டோடு மாள்வித்தான்—சாதனைநான்
செய்து வருந்தாது சிற்பரமோ னனுபவம்
எய்தவென்னை யாண்ட விறை.

118. வணக்கின னென்னைத்தன் வண்பதத்திற் பண்டைக்
கணக்கிலாக் கன்மங் கழித்தான்—பிணக்கிலா
தொன்றின னென்னோ டுறுதிபெற வுள்ளத்து
மன்றவான் மாவா மகிழ்ந்து.

119. நெஞ்சக் குறையை நிரப்பின னன்புபடச்
செஞ்சொற் கவிதை திருத்தினன்—வஞ்ச
வகங்கார மோக மறக்களைந்தான் போத
சுகங்காணத் தன்சொரூ பத்து.

(கொச்சகக் கலிப்பா)

120. கழிப்பித்தான் பாசக் கலக்கமறக் கண்ணை
விழிப்பித்தான் சொச்சொருப மெய்ப்பதத்தில் வாழ்வைச்
செழிப்பித்தான் சுத்த சிவமயமா ஆண்டான்
பழுப்பித்த வாற்றலென் சிந்தையைத்தன் பாலே.

121. சிரித்தான் சிரித்த சிரிப்பாலே யென்னுட்
புரித்தான் சொரூபவருட் பூரணமா மோனந்
தெரித்தான் சிவானுபவச் சிற்பரமா முத்திக்
குரித்தாக வென்னை யுடைய பிரானே.

### 4. ஆண்டவன் வண்மை

(வெண்பா)

122. சுத்தமெய்ஞ் ஞான சொரூபச் செழும்பொருளை
வைத்த துளத்து மறந்தாங்கே—மத்தக்
கொடியேன் வெளிற்றுமனங் கொள்ளை கொண்டு
அடியே னதிட்டவசத் தால். [போனுன்

123. கொள்ளமனங் கூசுங் குறிப்பறிந்து தானதனை
மெள்ளவயர்த் தாங்குளத்தே விட்டொழிந்தான்—கள்ள
சற்றும் மறதியிலாத் தன்சொருப வாலறிவோன் [ஞெரு
உற்றிடவே செய்த வுளவு.

124. பேய்க்குரங்கா வென்னுயிரைப் பீடித்த மத்தமனம்
போய்க்கிரங்க லற்றுப் பொலிவுறநான்—வாய்க்கு
மவன்றன் மறதி யபரிமித லாப
மிவன்றனக் காயிற் றினிது.

### 5. ஆண்டவன் வண்மையும் பயனும்

(வெண்பா)

125. குருத்துவங்கூர் மோனக் குறிப்பா லெனக்குட்
பரத்துவஞ்சேர் பாதவொளி பற்றத்—திருத்துசிவத்
தன்மையா லென்னைத் தடுத்தாண்ட தெய்வவருள்
வன்மையால் வாழும் மனம்.

(கொச்சகக் கலிப்பா)

176. ஒள்ளியதோ ருண்மையெனக் குள்ளுணர்விற் பேரின்பத்
தெள்ளமுதா வென்றுந் திகழ்ந்திருக்கத் தேர்ந்தறியா
தெள்ளியே யானென் றிழந்ததனை ஞானவருள்
வள்ளியோன் காட்டி வழங்கினன்கண் ணேக்காலே.

127. சுத்த வறிவொளியாத் துன்றும் பரமார்த்த
வித்தை யகத்தில் விளங்கல் விழுத்தவமென்
றொத்த சமரசமா வுள்ளொளிர்மோ னானுபவ
சித்தியளித் தாண்டவருட் சிற்பிரான் மாண்பென்னே.

128. நாத னளித்தசிவ ஞானானு பூதிப்பே
றோத வொணாத வுயர்பரந் தாமவொளி
பேதமா மோகவகப் பேயாட்டக் கற்பனைசே
ரேதமில்பே ரின்ப வியல்பாம் பரவெளியே.

129. விழுத்துரிய மான விசுத்த சொரூபன்
இழித்துத் தெழித்தகத்தில் யானென்ற வென்னை
யழித்துக் கொடுத்த வருட்பெரும் பேறு
செழித்துப் பழுத்த சிவானுபவ மாண்பே.

130. நன்னயமா வுள்ள மெய்ஞ் ஞானவருட் கேவலவாழ்
வென்னியல்பா வுள்ளத் தியைந்திட நன் காண்டபிரான்
தன்னையெனக் கீந்தபெருந் தம்பிரான் பாலடைந்தேன்
அன்னியமொன் றில்லா வகண்டசிவத் தன்மையே.

131. அன்னிய புத்தி யகந்தைமனக் கற்பனையாற்
றுன்னிய தென்று துலங்க வறிவூடு
தன்னிய ஞானத் தபோதனன்காட் டிக்கொடுத்த
வென்னியல் சுத்த வியற்சிற் பரவெளியே.

132. தொந்தமறத் துன்று சொரூபவியற் கைவல்யச்
சந்தமார் ஞான சமாதியே தன்னடியேற்
கந்தமில்கண் ணாக வகஞ்சே ரனுபூதி
எந்தரமல் லாத விறைவனருட் பாலிப்பே.

133. திண்மைசேர் மோகச் செருக்கழியத் தன்சொருப
நுண்மைசேர் நோக்காலே நூக்கியகத் தாண்டவன்பால்
உண்மை யொளியா வுளங்கிளர்சீ பாதவருள்
வண்மையால் வாழ்ந்தேன் மனோதீத மாண்பிலே.

134. தானே சகலமுமாந் தன்சொருப வாழ்வெனக்கு
வானோ ரிறைவன் வழங்கி யருளலால்
ஏனோர்பாற் சென்றிரக்க யாதுமிலாப் பூரணமே
மோனானு பூதியா முற்றமுற்ற முற்றியதே.

135. மோனவருட் பார்ப்பான் முகம்புக்கே னுக்குமெய்ஞ்
ஞானவளச் சீர்மை நலங்கிளர நல்கினன் ;
ஈன விளிவரல்சே ரேழைமைதீர்த் தாண்டவனால்
வானவரின் மிக்கபெரு மாட்சியெனக் கார்ந்ததே.

### 6. அருளினன்

#### க. இன்றே என்றான்

(குறள்)

136. எந்தநா ளென்றேனுக் கிந்தநா ளென்றிதயத்
தந்தணன்செய் தானின் னருள்.

#### உ. எண்ணுவித்தான்

(குறள்)

137. எண்ண வொணாத விறைவனென் றூற்றன்னை
எண்ணும லெண்ணுவித் தான்.

138. சிந்தனை முற்றச் சிவன்பால தாகவெனக்
கந்தணன் செய்தா னருள்.

#### ஙு. பெயர்த்தான்

(குறள்)

139. இருள்விடியக் கண்டான் இதயம்புக் கென்னை
யருள்விழியா லாண்டவம் மான்.

140. இருள்சே ரிருவினையை யெற்றினன் சுத்த
வருள்வடிவா வாண்டவென்னம் மான்.

(வெண்பா)

141. கவர்ந்தா னெனதுள்ளங் கற்பனைகள் பேர
வவிர்ந்தா னருட்கதிர் வீசி—நிவந்துமுன்னர்த்
தன்சொருப மொன்றே தழைத்தொளிர மங்கலுற்றுப்
பின்சருவ மற்றைப் பிற.

(கொச்சகக் கலிப்பா)

142. அருட்கே வலமான வாண்டவனைத் தேற
மருட்கே வலத்து மயங்கியநான் மாட்டேன்;
இருட்பா ழகல விதயத்தைப் பேதித்
தருட்பிழம் பாக வவிர்சலுற் ருனே.

குறிப்பு: இருள்-அவித்தையிருள்; இதயம்-இதயக் கிரந்தி

## ௭. பக்தியளித்தான்

(வெண்பா)

143. விஞ்ஞான மான விலாசங்கள் யாவுமொரே
சுஞ்ஞான மான சொரூபசிவன்—மெய்ஞ்ஞான
சித்திக் குறைவிடமாஞ் சிற்பதத்தே நான்செயும்பொய்ப்
பத்திக் கிடங்கொடுத் தான்.

144. அலகில்சிற் சத்திசெய் யாட்சிக்கு நெஞ்சங்
குலவநா னொப்புக் கொடுத்தேன்—குலவுசிற்
சத்திமா னான சதாசிவன் சாந்தசிவ
பத்தியுற வைத்தான் பதத்து.

## ௮. கலக்கமறல்

(குறள்)

145. வஞ்சக் கலக்கமற மாற்றினன் சுத்தவருள்
விஞ்சைத் தெருள்ஜீ வியம்.

146. பைத்தியமாஞ் சித்தக் கலக்கமறப் பாற்றினன்
*வைத்தியனு வுற்றென் மனத்து.

*வைத்தியன்—பவரோக வைத்தியன்.

(வெண்பா)

147. விந்தையாத் தோன்று விசித்திரமா முப்புடியிற்
சிந்தை கலங்கலறத் தேற்றினன்—புந்தியிலே
போதவருட் செம்பொருளாப் பொங்குசொரூ பானுபவப்
பாதவொளி பாய்ச்சும் பரன்.

### ௬. அகமக ஸ்புரணம்

(வெண்பா)

148. வந்தெனக்குக் காட்சி வழங்கியே சொச்சொருபச்
சிந்தனத்துத் துன்று சிவசொருபன்—உந்துமுனைப்
பற்றொழியத் தானே யகமகமென் றென்னறிவைப்
பற்றலுற் ருன்சிற் பரத்து.

### ௭. ஆன்மீக வாழ்வு

(வெண்பா)

149. அழகுடைத்தா வுள்ளொளிர்சுத் தான்மீய வாழ்வில்
ஒழுகுவித்தா னென்னை யுடையான்—தொழுகுலத்துக்
கெல்லாந் தொழுகுலமா வென்னிதயத் தென்றுமொளிர்
தொல்லோன் சொரூபச் சுடர்.

150. அருள்வாழ்க்கை வாழ வருளினு ணண்டான்
அருள்வேட்கை யுற்ற வகத்தே—மருளகற்று
ஞானவருட் பாத நலங்கிளர்மோ னனுபவந்
தானவிரத் தன்னிற் றழைத்து.

### ௮. இதய வெளி

(வெண்பா)

151. அருகாக வென்னையழைத் தன்பா லருளுக்
கருகனுப் பக்குவ மாக்கி—வெருவா
விதத்தா லிதய வெளிகாட்டி யின்பப்
பதத்திலே வைத்தான் பரன்.

### ௯. சொரூபம்

(வெண்பா)

152. அருளே யெனக்குயிர்ப்பா வார்தலா லாண்டா
னருளின்றி நான்றரியே னுகை—அருளே
சொரூபமா வாண்டபரஞ் சோதியவ் வேக
சொரூபமே நானுக்கி னுன்.

153. அருளவத்தை யாலே யடியரகத் தூன
மருளவித்து நல்குமொளி வள்ளல்—இருளவித்தை
பொய்யா வொழியவருட் பூரணமாந் தன்சொருப
மெய்யா வெனைவிளக்கி ஞன்.

154. அருள்வடிவாத் துன்று மதிசயசிற் சத்திப்
பொருள்வடிவாத் துன்றும் புராணன்—மருள்வடிவாத்
துன்றுசமு சாரத் துயரகலத் தன்சொருபம்
மன்றவொளிர் வித்தான் மனத்து.

155. அலந்து படாம லடியே னகத்திற்
கலந்தபே ரின்பக் கருத்தன்—மலர்ந்து
சொரூப விலாச சுகானுபவம் பொங்க
விரூபவெளி யாக்கிஞன் மெய்.

156. அருட்பழமை யாலே யடியேனை யாண்டான்
விருப்பழகு மிக்கவொளி மெய்யன்—மருட்படர்தீர்
சுத்தமெய்ஞ் ஞான சொரூபானு பூதியரு
ளொத்தொழுக வுய்த்தா னுளத்து.

157. அற்பரளக் கத்தா னமையுமோ சுட்டறிவுச்
சொற்பொருளுக் கப்பாற் சுடர்சொருபம்—அற்பரினும்
அற்பனு மென்னறிவூ டாக்கினன் றன்னருளாற்
சிற்பரனு நின்ற சிவன்.

௪௦. **மெய்ந் நிலை**

(குறள்)

158. அருளினு ஞண்டா னடியேற் கசுப்பா
ழிருளிலா வுண்மை யியல்.

(வெண்பா)

159. பேத மயக்கமறப் பேர்ந்தொழிய வாண்டவன்சற்
போதம் புகட்டலாற் பொங்கியது—வேத
மவேதமாப் போக வடியே னகந்தை
நிவேதனமா முண்மை நிலை.

160. பேதமரு சுத்தப் பிரம்ம சொரூபகுரு
நாதனு லென்னகத்து நண்ணியது—போத
வருட்பரதெய் வத்துக் கயலாக மற்றென்
றிருப்பரிதா முண்மை யியல்.

161. தொழுகுலமா வென்னிதயந் தோய்ந்தே சொரூபப்
பழமுதலா வோங்கும் பகவன்—முழுமுதலாந்
தன்மையிலே யென்னைத் தலையளித்துத் தன்மயமெய்ந்
நன்மை யெனக்குநல்கி ஞன்.

162. ஊனவகப் பேயே னுருவெளித்தோற் றத்திலுமுன்
ஞானியுரு தன்புகூர்ந் தாண்டபிரான்—மோன
வெளியன்றி யில்லை விபூதியெனத் தன்மெய்
யொளியொன் றுவித்தா னுளத்து.

163. தூண்டா மணிவிளக்காத் தூயோ ருளத்தொளிர்மெய்
யாண்டா னசுத்தமட வேற்குருவா—ஈண்டிப்
படித்துக் கொடுத்தவருட் பாடத்தா லுண்மை
வடித்துக் கொடுத்தான் மனத்து.

164. ஒழுக்க மிழுக்கமா மூத்தை மனத்தைப்
பழுக்கவைத் தாண்டவருட் பண்பால்—ஒழுக்கமுயிர்க்
குண்மை யுணர்ச்சி யுரம்பட்டு நிற்றலாந்
திண்மையிலே வைத்தான் சிவன்.

(கொச்சகக் கலிப்பா)

165. கலையிலே சென்ற கருத்தடங்க வுண்மை
நிலையிலே யென்னை நிறுத்தினன் பாச
வலையிலே பட்டு வருந்தியவென் னுச்சந்
தலையிலே தாள்சூட்டி யாண்டபெம் மானே.

166. செவ்விதி னுண்மை திறம்படத் தேற்றியெனக்
கவ்வது நிற்க வகத்தே யருளினன்;
எவ்வெது வையகத் தெவ்வ தியலினுமற்
றவ்வதி ஞலெனக் காவதொன் றின்றே.

குறிப்பு :— அவ்வது – அவ்வாறு; எவ்வது – எவ்வாறு.

167. ஓதற் கரியதோ ருண்மைநிலை யுட்புகட்டி
நீதக்க வாறு நிலைத்திடிங் கென்றுரைத்தான்
மேதக்க ஞான விளக்கமா வுள்ளுணர்விற்
பாதக் குறியிட்ட பாரவருட் பார்ப்பானே.

## கக. அத்வைதம்

(வெண்பா)

168. சித்தமாத் துன்றுமச் சிச்சடமாஞ் சீவன்றன்
பொய்த்தன்மை யானசட போதவகம்—பொய்த்தறு
சித்துவமே தற்பரமாத் தேற்றலாற் றேற்றினுன் [மெய்ச்
அத்துவித மாமெய் யகம்.

(கொச்சகக் கலிப்பா)

169. இருண்டவறும் பாழி வியங்குலகத் தூடு
வெருண்டுழன்ற மோகமறே வேகமற என்னைத்
திரண்ட சொரூபச் செழும்பரமாத் தேற்றி
இரண்டற்ற மோன வியற்பதஞ்சேர்த் தானே.

170. துள்ளுமகங் காரத் துடிப்பை யடக்கியென்
னுள்ளும் புறம்புந்தா னூடும்பா வும்போலத்
தெள்ளும் பரம சிவாத்துவித மோனவருள்
வெள்ளவெளி யாக விளங்கலுற்ரு ஞண்டவனே.

171. தேறறியா தேநான் றிகைக்குங்காற் றன்னருளால்
வேறறவே யென்னுள் விளங்கலுற்ருன் யாராலுங்
கூறவொண்ணு வுண்மைக் குலாவொளியாற் கைவல்ய
வீறுசேர் சுத்த வெறுவெளியாம் பெம்மானே.

## கஉ. கைவல்யம்

(குறள்)

172. திறந்தவெளி யான சிதம்பரமே கண்ணுச்
சிறந்தொளிர்வாற் கேவலங்கண் டேன்.

(வெண்பா)

173. கற்றுத் தெளியக் கழலென் கருத்திலிருத்
துற்றுத் துரீய வொளியுருவாய்—முற்றக்
கடந்தவருட் கைவல்யக் காட்சிசே ராட்சி
யடைந்தொளிரக் கண்டா னகத்து.

(கொச்சகக் கலிப்பா)

174. உள்ளங் கலந்த வுடையான்பே ரின்பவருள்
வெள்ளங் கலந்த வியன்பெருவாழ் வானநிலை
தெள்ளுந் திறத்தாற் றிளைக்க வருளியது
மொள்ளற் கரிய முழுமுதற்கை வல்லியமே.

175. உள்ளந் திளைக்கவெனக் கொட்பநுட்பக் காட்சியாக்
கள்ளமற்ற சுத்தவருட் கைவல்யங் காட்டினன்
உள்ளவேண் டாம லுணர்வே சொரூபமாத்
தெள்ளத் தெளிந்தியல்சச் சிற்பரமா வுள்ளானே.

176. ஈண்ட வெழுந்தியங்கும் யானென் பதுமுதலா
வேண்டவோ வன்றி வெறுக்கவோ வேறென்று
காண்ட லிலாதவருட் கைவல்யப் பூரணங்காண்
ஆண்டவன் காட்டி யருளியதென் னுள்ளத் தே.

177. தட்டுளுப்புப் பட்டுத் தடுமாறி னேனையருட்
கட்டளையாற் கைவல்யங் காணென்று காட்டினன்
அட்டமா சித்திபொரு ளன்றுக வன்பரகம்
பெட்ட சிவானுபவப் பேறளிக்கும் பெம்மானே.

178. பாழ்த்த மயக்கப் படுபா தலத்திலமிழ்ந்
தாழ்த்தொழிந்த வென்னை உடையா னுணர்த்தினன்
சூழ்த்து விரிந்த துரீயப் பரவெளியாக்
காழ்த்த சொரூபவருட் கைவல் வியபதத்தே.

## கரு. சிவத் தேர்வு

(வெண்பா)

179. அவத்தைகளிற் கட்டுண் டழுங்கா ததீத
சிவத்திலெனைத் தேறத் தெளித்தான்—தவற்றுமனப்
பாழ்ம்பிறவி மோகமருட் பார்வைபோய்த் தன்னடியேன்
வாழும் படிதன் மயத்து.

### கச. அதீதப் பொருள்

(வெண்பா)

180. ஞானவுரு வாவகத்து நண்ணுவது நானற்ற
மோனவடி வான முழுமுதலே—வான
வருள்வெளியா வான்ற வதீதமே சுத்தப்
பொருள்வடிவா வுய்த்தான் புலத்து.

### கரு. ஞானநுபவம்

(வெண்பா)

181. அவக்கமுந் தாக வறக்கெட்ட வென்னைச்
சிவக்கொழுந் தானவருட்செல்வன்—உவக்கவே
போத சொரூபப் பொலிவுறுஞா னநுபவப்
பாதநிழல் சேர்த்தான் பரிந்து.

### கசு. அருட்குடி யாதல்

(கொச்சகக் கலிப்பா)

182. விடியா வியாமோக வெம்பாழ் விடிய
அடியோமை யாண்ட வருட்பெருஞ் சோதி
யடிகளால் உள்ளத் தகந்தையறப் பொங்குங்
குடிகளாய் மோனங் குலவலுற் றேமே.

183. அடிமையாத் தன்னை யடைந்தேனுக் காண்டான்
குடிமைசேர் வாழ்வு கொடுத்தா னுரித்தா;
மடமையோ வன்றி மிடிமையோ வின்றி
யுடையான் பணிக்கே யொழுகுகின் றேனே.

## 7. அருளலும் பயனும்

### க. பிறகலையறல்

(கொச்சகக் கலிப்பா)

184. வெற்ற வெறுவெளியா விஞ்சுமனப் பான்மையால்
மற்றுறவு யாதுமற மன்னுவது தன்னுருவே;
வெற்றறிவா வுண்மை விளங்கலால் வித்தைகளாக்
கற்றறிவு முற்றமனக் கற்பனையாப் போயிற்றே.

185. அற்புதவாழ் வாக வளைந்த வருட்கடலிற்
புற்புதங்க ளாகப் புலப்படலான் முப்புடிகள்
கற்பதற்கு யாதோர் கலையுமெனக் கன்னியமா
நிற்பதன்றென் னெஞ்சத்து நேரெதிர மெய்ப்படவே.

186. கற்கத் தகுமெய்க் கலைஞானப் புத்தகமாத்
தொக்கதுசற் போத சொரூபமாத் தேர்வித்தான்
கற்கத் தொடங்கலுமக் கல்வியால் வெற்றுரையாப்
புற்கென் *றொழிந்தபிற † போதக் கலைகளே.

* ஒழிந்த – ஒழிந்தன
† போதக்கலைகள் – ஞான சாஸ்திரங்கள், அவற்றின் கிரந்தங்களுக்கு ஆகுபெயர்.

## உ. மடமறல்

(வெண்பா)

187. வாழ்வுக்கு வாழ்வாக வைகு சிவக் கைவல்ய
வாழ்வுக் கிலக்கியமா மாட்சியான்—மாழ்கற்
கிடமற்ற வுண்மை யிலக்கலாற் றுன்ப
மடமற் றொழிந்தேன் மனத்து.

## ங. கற்பனை யறல்

(கொச்சகக் கலிப்பா)

188. அயற்பதமொன் றில்லா வருட்பதவாழ் வுள்ளத்
துயற்பதங்கண் டாண்டா னுதவினன்; பாழிற்
செயற்பட் டுழலுஞ் செருக்கா மகப்பேய்
மயற்கற் பனையின் மருள்வெருளற் றேனே.

189. **தன்னையோ வன்றி யயலையோ தானறியா**
**அன்ன சொரூப வறிவே** யருளினன்
பன்னவரு சுத்தவருட் பார்ப்பான் பதவொளியிற்
பின்னமனக் கற்பனு பேதமறப் பேர்ந்ததே.

## ௭. அகந்தை யறல்

(வெண்பா)

190. வள்ளற் குருரமணன் வைத்ததா லென்னகத்திற்
கள்ளவகங் காரங் கரந்ததுகாண்—உள்ளதன்மாட்
டத்தக நிற்கு மனுபூதி யானவருள்
வித்தக ஞான விளக்கு.

குறிப்பு:—விளக்கு வைத்ததால் என வினையுரு

191. மகத்தான தன்சொருபம் மத்தனே னற்ப
வகத்தடங்கக் காட்டினு னுண்டான்—தகத்தெளிந்த
சிற்பரமா மந்தச் சிவசொருபக் காட்சியின்மற்
றற்பவகங் கண்டிலேன் யான்.

192. சுகத்தியல்பாத் துன்று சொரூபானு பூதி
யகத்தியல்பாக் காட்டினு னுண்டான்—சுகத்துருவாய்
நானெனும்பொய்ம் மோக நவைசே ரகங்கார
வூனமகன் றுள்ளே னுளத்து.

(கொச்சகக் கலிப்பா)

193. களிக்கவுற்றே னுண்டான் கருணையாற் சித்தந்
திளைக்கக் கடவசிவச் செம்பதத்தே; மோன
வெளிக்கணே தன்மெய் விளங்கலாற் சற்றும்
முளைக்கலறச் செத்ததுபொய்ம் மோகவகப் பேயே.

194. வேறுபா டற்ற விசுத்தசிவ பூரணத்தைக்
கூறுபடக் கொல்லுமனக் கோட்டந் தவிர்வித்தான்;
மாறுபா டான மயக்கவகப் பீழைபோய்த்
தேறுபடச் சித்தந் திளைத்தேன் சிவோகமென்றே.

195. நல்லமெய் யன்புறவு நல்கியெனக் குத்தன்னோ
டெல்லையில்பே ரின்ப வியற்பரமா வாண்டவன்கூர்
நல்ல சொரூபமெய்ஞ் ஞானநு பூதியாற்
பொல்லா வகந்தைமனப் பூசலற் றோய்ந்ததே.

196. மோனமே ஞானமா மூண்டொளிரப் பெற்றவெனக்
கேனேஞா னங்க ளெதன்பொருட்டோ? அத்துவிதத்
தானமா வோங்கு சதாசிவமா முண்மையிற்பொய்ந்
நானுமில்லை சுட்டறிவு நாட்டமுமங் கில்லையே.

### ஔ. மன மறல்

(வெண்பா)

197. கருத்தைத் திருத்திக் கடவுட் பதத்தி
லிருத்திக் கொடுத்தா னிறைவன்—பொருத்தமாச்
சித்தஞ் சிவத்திற் செழித்தலாற் செத்ததுபுன்
மத்தமனந் தன்சின் மயத்து.

198. வள்ளியமெய்ஞ் ஞானவருள் வள்ளலையே யுள்ளிநான்
கள்ளமா மோகக் கருத்தகன்றேன்—உள்ளலுமவ்
வள்ளலரு ளென்னகத்து வாழ்க்கையையே மாற்றிமனக்
கள்ளமறக் கண்டது காண்.

### சு. வாதனை யறல்

(வெண்பா)

199. வணக்கினு னென்னைத்தன் வண்பதத்திற் பேரா
திணக்கினு னென்று மிசைபால்—உணக்கியே
மட்கநா னென்று மயல்வா தனைமனத்தில்
விட்புலமே மிஞ்சிற்று மேல்.

### எ. மூனைப் பறல்

(வெண்பா)

200. மோனமே தன்னியல்பா முற்றலுற்ற விஞ்சையால்
வானமே யாக வளர்சொருபன்—மோனவருள்
பாலித்த வாற்றுற் பரமோப சாந்தமனே
மூலத்தே நான்முனைப்பற் றேன்.

### அ. ஆசை யறல்

(கொச்சகக் கலிப்பா)

201. உள்ளப் படாத வொளிப்பிழம்பா யோகியர்பா
லெள்ளப் படாதபே ரின்பவெளி யாவுள்ளோன்
கள்ளப் படாது கருத்தைத் திருத்தியருள்
வெள்ளமா மேவினுன் வேட்கை சமித்ததே.

202. உள்ளத்தே சுத்த வொளிவெளியாத் தன்னுருவைத்
தெள்ளத் தெளியத் திளைக்க வருளினன் ;
துள்ளலற்ற சுத்தத் துரிய சொரூபவருள்
வெள்ளக் கடலில் விடாயறத்தீர்ந் துய்ந்தேனே.

203. பெம்மா னருள்வாழ்வே பேணலுற்றே னுக்குமற்
றிம்மா நிலத்திவ் வுடலோ டியல்வுறவஃ
தம்மா னருளலால் ஆசாபா சத்துயராம்
பொய்ம்மா லகன்றெழிந்தேன் பூரணசச் சிற்பதத்தே.

குறிப்பு: அஃது இயல் வுற–அவ்வருள்வாழ்வு அடைவுற ;
அருளலால்–அருளியதால்.

204. காண்டலரு கைவல்யக் காட்சியா மோனவுணர்
வீண்ட வியற்பரமா வென்னை யருளினன் ;
வேண்டவொன் றுங் காணேன் விழுப்பதமா வுள்ளம்
காண்டான் சொரூப வருட்பூ ரணத்திலே. [பொங்

## ௯. அவிச்சை யறல்

(கொச்சகக் கலிப்பா)

205. பொய்யாக வெல்லாம் புலம்பத் திகழ்சொருப
மெய்யாக வென்னை விளக்கினன் விஞ்சையால்
மையா ரகங்கார மாயக் கலக்கமற
மொய்யா ரவிச்சை முழுமுற்றப் பொய்த்ததே.

## ௧௦. பிறவி யறல்

(கொச்சகக் கலிப்பா)

206. இன்ப வுணர்வா லிதயம்பூ ரிப்பித்தான்
அன்புருவாப் பொங்கு மனந்த சிவாம்புதியான்
தன்பதமே மிக்க சதாசிவசா யுச்சியமா
என்பசுபா சப்பா ழிடர்ப்பிறப்பை யெற்றியதே.

207. திருவளர்மெய்ஞ் ஞானத் திறத்தால் அடியேன்
கருவளர்பொய்ம் மாயக் கலக்கமறக் கண்டான்;
குருவருளா லென்னுட் குலவு சொரூபப்
பெருமிதவாழ் வுற்றேன், பிறப்பிறப்பற் றேனே.

208. சிவத்திற் சிவமாச் செழிக்க விருந்தே
அவத்தைமோ கத்தா லலமர லுற்றேன் ;
சுவத்தமா வுள்ள சொரூபஞா னத்தாற்
பவத்துயர் பாற்றினன் பட்டர் பிரானே.

209. ஆண்டகுரு நாதன் அருட்சிற் பரசொருபப்
பாண்டி நன் னுடன் பரம சிவானுபவங்
காண்டியென வுள்ளங் களிக்க வருளினன் ;
மாண்டதுமோ காணவப்பாழ் வன்பிறவித் துன்பமே.

### கக. பந்த மறல்

(கொச்சகக் கலிப்பா)

210. பொற்ப வழகிதாப் பொங்குசிவ பூரணமிவ்
வற்பனே னுள்ளுணர்வா வாண்டா னருளினன் ;
தற்பரமா வுள்ளசிவச் சைதன் னியசொருபத்
துப்புரவாற் கற்பனை தொந்தபந்தஞ் சோர்ந்ததே.

### கஉ. பரபக்தி

(வெண்பா)

211. எனக்குநிகர் யாரென் றிறுமாக்க வுள்ளத்
தெனக்குறுதி நல்கின னெந்தை—தனக்கடிமை
பூண்டமெய் யன்பிற் பொலிந்தபர பத்தியுணர்
வீண்டவாழ் கின்றே னினிது.

212. சித்திலே சித்தந் திளைத்தலே தேர்ந்தபர
பத்தியா வென்னைப் படிவித்தான்—புத்தியால்
என்னே யியற்றுவதவ் வின்பவருட் சீர்வளஞ்செம்
பொன்னேபோற் போற்ற லொழிந்து.

213. இன்பவீடாக விருந்தொளிர்தன் பாதத்து
டன்பெனக்கு மாறு தருளினன்—முன்புறவு
தன்சொருப மேயாத் தழைத்த லயர்த்தொழிந்த
வஞ்சமயல் போக மனத்து.

214. ஊனக் கலக்கமற வுள்ளத் துறுதிசேர்
ஞானத் துலக்கமா நண்ணினன்—மோனத்
தவமெனக்கு முற்றத் தலைப்படலா லன்பே
சிவமெனக்கண் டன்புதிளைத் தேன்.

215. பெம்மா னருட்பதத்திற் பேராத காதலுறப்
பெம்மா னெனக்கருளப் பெற்றமையால்—பெம்மா
னருட்பதத்துக் கன்புணர்ச்சி யாரா வமுதா
விருப்பதகத் தாயிற் றினிது.

(கொச்சகக் கலிப்பா)

216. திரப்படுமெய்ஞ் ஞானச் சிறப்பால் இதயத்
துருப்படுவாழ் வெய்த வுணர்த்தினன் பாத
விருப்புறுசற் பத்தி விளைந்தேன் மயக்கக்
கருப்படர்பல் காமங் களைங்களைந் தேனே.

### கநு. நேர்வழி சென்றேன்

(வெண்பா)

217. அம்பரத்தா னென வருட்பரமன் பேருருக்கொண்
டிம்பரகத் தென்முன் னெழுந்தருளிச்—செம்பதத்து
நேர்வழிக்கே யென்னை நிகழ்த்தினன் சீபாத
வூர்வழிக்கே யூரு முணர்வு.

### கசு. உய்ந்தேன்

(வெண்பா)

218. தோணியாம் பாதத் துணைகாட்டி மோனமாப்
பேணினன் முத்திப் பெருங்கரைக்கே—வீணி
லுழன்றவுயிர்க் கூன வுலகியல்வெம் பாசங்
கழன்றொழியக் கண்டேன் கதி.

219. பிட்டனைச் செந்நெறியிற் பேர்ந்தமனப் பேயனேன்
கட்டமுற்றுச் சிந்தை கலங்காமே—பட்டனைப்
பெய்தற் கமைந்தான் பெருங்கருணை தீம்பனுமிக்
குய்தற் கமைந்தே னுளத்து.

220. ஒன்றுந் தெரியா துழன்றமட வேனுளத்தில்
வென்றிசே ருண்மை விளக்கினன்—நன்றிசேர்
தெய்வவொளி சேர்ந்த சிவபதத்திற் சிந்தையமைந்
துய்வதாய் வாழ்ந்த துயிர்.

### கரு. மெய் விளக்கம்

(வெண்பா)

221. பொய்யலா வுண்மை பொருத்தினு னென்னகத்து
மெய்யினும் மெய்யா விளங்கவே—மெய்போ
லிலகியவை யெல்லா மெதிர்புலமா வென்முற்
கலகலத்துப் போயின காண்.

222. நிராமயமாத் துன்றுசிவ நிட்களமாந் தன்னி
லொரேமயமா வென்னை *யுணர்த்தான்—அராமயற்
[பொய்த்
தோற்றமொரு தொங்கலாத் தொக்காங் கெனதுருவாப்
போற்றினே னுண்மைப் பொருள்.

* உணர்த்தான் – உணர்த்தினன்.

223. புந்தியிலே சுத்தவருட் போதம் புகட்டினன்
சிந்தையறத் தீர்ந்தேன் சிவத்திலே—விந்தைசேர்
கைவல் லியமெய்க் கடவுளியல் வாழ்கையொளி
*மொய்வல் லபங்கிளர மூண்டு.

* மொய் வல்லபம் — மிக்க வல்லபம்

### கசு. நைஷ்கர்மிய சித்தி

(வெண்பா)

224. சும்மா விருத்தல் சுபயோக மெய்த்தவமா
வம்மா னடியேற் கருளினன் — இம்மா
நிலத்தி லெனக்கு நிகழ்த்துங் கருமஞ்
சலித்தொழியச் சார்ந்ததுமெய்ச் சால்பு.

குறிப்பு:—மெய்ச்சால்பு என்றது நைஷ்கர்மிய சித்தியான கேவல சொரூப சாக்ஷாத்காரத்தை.

### கஎ. உலகு பரமாயிற்று

(வெண்பா)

225. கொற்றவைக்கு வெற்றிதருங் கொற்றவனென்
[னற்றுணையா
வுற்றுயிர்க்கு மிக்கவுர னூட்டினுன்—மற்றெதற்கும்
பீதிதோன் றுது பிரம்ம சொரூபவருள்
வீதியா மேவிற் றுலகு.

226. மோனுனு பூதி முடித்துக் கொடுத்தலால்
வானக மாறிற்றிவ் வையகமே—தானுன
தன்மயத்தில் யாவுமதி சாந்தசிவ மானவருட்
பொன்மயமாப் பொங்கப் பொலிந்து.

(கொச்சகக் கலிப்பா)

227. தன்னிலே தானுத் தழைத்த சிவத்தைமற்
றென்னிலே யானு விருந்தொளிரத் தேற்றினுன் ;
பொன்னிலே பூண்போற் *புலவுலக முப்புடியவ்
வென்னிலே யென்மயமா வேய்ந்தியல் கின்றதே.

* புலவுலக முப்புடி – திரிபுடி பேதமாகக் காணப்படு முலகு.

228. தானேதா னுகத் தழைத் தொளிர்மெய்த் தத்துவவாழ்
வூனே றகந்தையற வுள்ளத் துதவினுன்
வானே முதலா மயங்குலகு சுத்தவருள்
வானுத் தெளிந்துசிவ மங்களமாத் தோன்றியதே.

229. ஏதமறு மோன வியல்வாழ்வாத் துன்றுசிவ
போதந் துலங்கப் புகட்டி யருளினுன்
வேதவே தாந்தவருள் விஞ்சையின் சாரமாம்
பாதவொளி பாரைப் படாமாகப் போர்த்ததே.

### கஅ. சொருபாநுபூதி

(வெண்பா)

230. கலைவிளக்க வொண்ணுக் கடவுளான் ஞான
நிலைவிளக்கா வென்னுளத்து நின்றே—தலையளிக்கப்
பெற்றதான் மத்தமனப் பேயகந்தை நாட்டமற
வுற்றதனு பூதி யுணர்வு.

(கொச்சகக் கலிப்பா)

231. *ஊட்கலுற்ற மோகப்பா ழூத்தையேன் சுத்தவருள்
வேட்கையுற்றுப் பாச விடாய்தணிய வுள்ளுணர்வை
மீட்கலுற்றுன் கைவல்ய வித்தகச்செம் பொற்பதத்துக்
காட்செயலால் ஆர்ந்ததுசுத் தான்மானு பூதியே.

* ஊட்கல் – ஊழ்க்கல்

232. பங்கமற்ற மோனப் பதமே யிதயமாத்
தங்கலுற்ற வாழ்வு சதாமுத்தி யாகவெனக்
கங்கணுன் காட்டி யருளலால் விஞ்சியது
துங்கமெய்ஞ் ஞான சொரூபானு பூதியே.

233. பக்குவமோர் சற்றுமிலாப் பட்டியேன் பாசமகன்
றெக்களிக்க வுள்ளத் தியற்பரங்காட் டிக்கொடுத்தான்;
பொய்க்கலக்க மற்றொழியப் பொங்கியது பூரணமாத்
தொக்கொளிர் மெய்ஞ் ஞான சொரூபானு பூதியே.

234. பந்தபா சக்கற் பனையற் றொழியவகத்
தந்தமில்சீ பாத வருட் பரஞா னந்தெரித்தான்;
சொந்தவியல் பான சொரூபமாத் துன்றியதவ்
விந்தைசேர் சுத்த வெளியான பாதமே.

235. சிவாய நமவென்னச் சிந்தித்த வென்னைத்
தவாதபே ரின்பத் தடங்கடலாச் செய்தான்
அவாயமற வாழ்கின்றே னற்புதமாப் பொங்கு
சுவானுபவ மான சொரூபப் பதத்தே.

## ௧௧. எல்லாம் பிரம்ம மயம்

(கொச்சகக் கலிப்பா)

236. செவ்விதின்வந் தாண்டசிவச் சிற்பிரான் உள்வெளிமற்
றெவ்வயினுந் தானு மியற்பரஞா னந்தெரித்தான்;
எவ்வெதுதோற் றத்தாலெவ் வெத்தன்மைத் தாயினுமற்
றவ்வதன்மெய் யாக வவிர்ந்ததவன் சின்மயமே.

குறிப்பு:—எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்,
மெய்ப்பொருள் காண்ப தறிவு —குறள்.

237. அல்லா ணவப்பா ழனர்த்தம் பொதிந்ததோர்
பொல்லா வகந்தைமனப் பூட்டறச்செற் றுண்டு
நல்லா னருளியமெய்ஞ் ஞானனு பூதியால் [கொண்ட
எல்லாமொன் றாக விதயத் தொளிர்ந்ததே.

238. இளிசே ரகப்பா ழிருள்கடிமெய்ஞ் ஞான
வொளிநெறியா லென்னை யுயர்நிலையிற் சேர்த்தான்;
தெளிவுசால் சுத்தவருட் சிற்பரமா வுள்ளத்
தொளிர்வுறுமென் னுண்மையில்வே றென்றுங்கா
ணேனே.

239. இற்றெனவொண் ணாத வியற்பரத்தில் யானதுவா
முற்றியமோ னனுபவ முத்தியுணர் வூட்டினன்;
சுற்றுமுற்று நோக்கத் துலங்குவது சுத்தவருட்
பெற்றிசேர் பெம்மான் பிரம்ம சொரூபமே.

## உ0. அருட் பூரணம்

(கொச்சகக் கலிப்பா)

240. நல்ல சிவத்தன்மை நண்ணவென் னுள்ளத்திற்
சொல்ல வொண்ணாத சொரூபவுணர் வூட்டினன்;
அல்லியல் சேர்ந்தகா ராணவப்பாழ் மாயமறப்
புல்லியது சுத்தவருட் பூரணமெய்த் தன்மையே.

## உக. பூமா

(கொச்சகக் கலிப்பா)

241. கற்பனா பேதக் கனாவிலே மோகித்துச்
சிற்பரமாங் கைவல்யச் சீர்மை யிழந்தேனுக்
கற்புதமெய்ஞ் ஞான வருட்காட்சி நல்கினன்
பொற்பதவாழ் வுள்ளுணர்விற் பூமாவாப் பொங்கியதே.

## உஉ. முத்தி

(வெண்பா)

242. சதாமுத்தி யான சதாசிவத்தைக் காட்டி
யிதாமுத்தி யென்று னிறைவன்—சதாபத்திப்
பார்வைதரு மோனவொளிப் பாதமாம் போதமுத்திச்
சீர்மைதெளிந் துள்ளேன் சிவத்து.

243. புத்தனு வென்னைப் பொலிவித்தான் மெய்ஞ்ஞான
சித்தனு மோனவருட் செம்பிரான் —மத்தமனப்
புன்கலக்க மான புணர்ப்பொழிய முத்தி நலம்
பொங்கலுற்ற துள்ளப் புலத்து.

244. வெருவுத லற்ற விசுத்தகதி நெஞ்சூ
டுருவலுறக் கண்டா னுடையான்—குருபதமா
மோட்ச சொரூபமே மோனனு பூதியா
வாட்சிசெய் கின்ற தகத்து.

(கொச்சகக் கலிப்பா)

245. விண்மைசேர் மாயா விலாசமறக் கைவல்ய
வுண்மையிலே யென்னை யொடுக்கினன் சுத்தவருள்
வண்மையே வாழ்வா மலர்தலுற்ற வுள்ளத்துத்
தண்மைசேர் சாந்தி சதாமுத்தி யானதே.

குறிப்பு: விலாசமற்ற எனவும் பாடம்.

246. செம்மைசேர் ஞானஞ் செழித்தபிரான் சிச்சடப்பாழ்ம்
பொய்மை யகற்றியிருட் பொல்லாங் கொழிவித்தான்:
எம்மையுமொன் றுன வியற்சிற் பரசொருபத்
தன்மையில்வாழ் கின்றேன் சதாமுத்த னுகவே.

247. அடியேற்கு யாதுமோ ராசையெழா வாறு
மிடிசே ரகந்தைமன மிச்சையறக் கண்டான்
அடியே முடியா வணிந்தேற் கருள்வெண்
குடை நிழற்கீ ழாளக் குலவியது வீடே.

248. ஈனப் பதகரா மென்போ லியரகத்து
ஞானப் பரசொருப நாட்டந் துலக்கினன்
மோனப் பிரான்பதமே முத்திப் பெரும்பதமா
யானற் றெழுந்த விழப்பிலறிந் துய்ந்தோமே.

## உரு. ஞானநுபவம்

(வெண்பா)

249. ஞான சொரூபான்ம நாத னகத்தூடு
மோனவழி பாடியல்பா மூள்வித்தான்—நானெனும்புன்
மோகவகங் கார முனைப்பற் றெளிர்ஞான
போகநுகர்ந் துற்றேன் பொலிவு.

250. தன்சொருபக் காட்சி தழைத்தொளிர்த் தற்பரமா
வென்செயலொன் றின்றி யெலாந்தனதா—நெஞ்ச [மொன்றித்
தஞ்சமுற்ற வென்னைத் தலையளித்தான் ஞானவருள்
விஞ்சையுற்று வீறுபெற் றேன்.

251. மான வகந்தை மயக்கத்தாற் சீரழிந்த
வீனவுயிர்க் காண்டா னிரங்கினன்—ஞானக்
கதிரெறிக்கும் மோனவருட் கண்ணேக்கத் தாலே
பதடிபெற்றேன் ஞானப் பதம்.

குறிப்பு :—எறிக்கும் - ஒளிரும்.

252. குருமூர்த்தி யானவருட் கோமா னெனக்குப்
பரமார்த்த ஞானம் பகர்ந்தான்—தருமார்த்த
காமமோட் சத்தின் கதியா விளங்குபரந்
தாமமாந் தன்சொருபச் சார்பு.

253. சுத்த வறிவே சொருபமாக் காட்டலான்
மித்தை யறிவை விலக்கினன்—மித்தை
யறிவிலே தோற்று மகிலமாம் பேதக்
குறைகளுக்கங் கில்லை யிடம்.

254. என்கணற் காண்டலரு மீசன் சொருபவரு
ளங்கணற் காண வருளினன்—பொங்கிற்
றவனே யகமா வகந்தையழிந் தான்ற
சிவநேய ஞானத் தெளிவு.

255. பொருளாக வென்னைத்தன் பொற்பதத்துக் கேற்றான்
அருளாள னனவென் னம்மான்—மருளூடு
மட்கிக் கிடந்த மனத்தேன் சிவஞானப்
பெட்பிற் செழித்தேன் பெரிது.

256. பாழவித்தை யானமருட் பாசங் களைந்தென்னை
வாழவைத்தான் ஞான மலர்ப்பதத்தே— பாழகத்து
ஞானவருட் பார்வை நடாவியதா லென்னகத்தா
டேனவெருட் கில்லை யிடம்.

257. மோனவருள் சான்றகுரு மூர்த்தியென் பாலிரங்கி
ஞானவொளி யுள்ளத்து நல்கினன்—ஊனமனப்
புன்கலக்க மாமுப் புடியறிவற் றோர்வெளியா
நன்கிலக்க மானதுமெய்ந் நான்.

(கொச்சகக் கலிப்பா)

258. தெள்ளியோ னாகத் திகழ்சொருபச் செம்மலான்
ஒள்ளியே னாகவெனக் குண்மை யுணர்த்தினன்
உள்ளியுள்ளி யோர்த்துமுணர் வொண்ணுவவ் வுண்
கள்ளியஞா னனுபவ மாகப் பலித்ததே. [மையெனக்

259. கட்புலனுங் காட்சிமனக் கற்பனையாப் பொய்த்தொழிய
வுட்புலனும் புத்திக் கொளியான சுத்தவருள்
விட்புலனு மெய்க்காட்சி வித்தகமா வுய்த்தபிரான்
பெட்புறுமோ னனுபவப் பேரறிவு சார்ந்ததே.

260. மீதான மாக விளங்குசிவச் சிற்பரவாழ்
வீதா வெனவிதயத் தெம்மா னருளினன் ;
நீதா னதுவெனச்சொல் வேதாந்த நிண்ணயமாம்
போதானு பூதிப் புலந்தெளிந்தேன் பொற்பவே.

## உச. பரவெளி

(வெண்பா)

261. கண்ணன வுண்மைக் கடவுளான் கற்பனைதீர்
விண்ணாக வென்மெய் விளக்கினன்—எண்ணுநின்
றெத்தையா னோர்வே னிரண்டற் றெளிர்சொருப
புத்தியாற் பேதப் புலம்.

262. ஒளியாக வென்னை யுணர்த்தினன் மோன
வெளியாக வாழ்க்கை விளங்கத்—தெளிவாகச்
சிந்தை யமைத்து சிவத்தி லவித்தையறப்
புந்தியுற்ற துண்மைப் பொலிவு.

(கொச்சகக் கலிப்பா)

263. அளியே னறிவை யருட்பரத்திற் சேர்த்தான்
வெளியா விளங்கு விசுத்த சொரூபன்
களிசே ரகந்தைமனக் காரா ணவங்கெட்
டொளிசேர் வெளியிலென் னுண்மைகண் டேனே.

264. அத்துவித மானமெய் யன்பு தழைக்கவெனக்
கத்தனருள் பாலித் தருளலா லென்னகத்தே
பொய்த்துவித மோகப் புணர்ப்பாம் விருப்புவெறுப்
பெய்த்தொழியப் பொங்கிற் றிதய வொளிவெளியே.

### உ௬. கைவல்யம்

(வெண்பா)

265. காணியா வாளவருட் கைவல் லியமிதயத்
தாணையா லாண்டா னருளிஞன்—ஊனு
வதுவான நானன்றி யன்னியமற் றௌன்று
மிதுவாகக் காணே னெதிர்.

266. காணியா வுள்ளவருட் கைவல்யங் கண்டுகொள்ள
வேணியா நின்றென்னை யேற்றிவைத்தான்—காணியா
மோனவருட் கைவல்யம் முற்றூட்டாம் போகமெனக்
கானவியற் காட்சி யரிது.

(கொச்சகக் கலிப்பா)

267. ஊனமற்ற வுண்மை யுடையான் உளமகிழ்ந்து
ஞான நிலையிலென்னை நாட்டிஞன் ; யானெனனுந்
தீனமனப் பான்மை சிதைவித்தான் ; சிற்பரமா
மோனவருட் கேவலத்து முற்றியதென் வாழ்க்கையே.

268 நாட்டமயல் பாயாது நல்லவருட் போதவொளி
யீட்டமே மிக்க வியற்பரமா வுள்ளுணர்விற்
காட்டிஞன் சித்தக் கலக்கமறக் கைவல்ய
வீட்டிலோர் வித்தா விளைந்தே னடியேனே.

### உ௭. சிவமய வாழ்வு

(வெண்பா)

269. காண்பான் சொரூபமன்றிக் காணுப் பரமசிவ
மாண்பாம் பதவொளியில் வாழ்வித்தான்—காண்பாரார்
மோச வகந்தை முனைப்புக் கடிப்படையாம்
பாச விருட்பாழ்ம் பரப்பு.

270. மோனமே வண்ணமா மூர்த்தி சொரூபவருள்
வானமா வென்னை வளைத்தலால்—ஊனக்
குறும்பா மகப்பேய் குலையவே நானுந்
திறம்பாது வாழ்ந்தேன் சிவத்து.

271. தவமென் னியல்பாத் தழைத்தொளிரச் சித்தஞ்
சிவமயமாத் தேற்றினு னுண்டான்—அவமெனமற்
றென்றுமே யின்றி யுலப்பிலா வுள்ளொளியா
மன்ற விளங்கியது வாழ்வு.

272. சற்கதியா முண்மைத் தவமே சொரூபமா
நிற்பதியல் வாழ்வா நிறுவினுன்—கற்பனையா
தொன்று மிலாத வுணர்வுண்மை மாத்திரமா
மன்றவொளிர் வாழ்வுபெற் றேன்.

(கொச்சகக் கலிப்பா)

273. மருளார் கனவிலே மாழ்கலுற்ற வென்னை
யருளா லணைந்தவென் னம்மான் சொரூபப்
பொருளாலே வாழ்வுசிவ பூரணமாப் பொங்கத்
தெருளலுற்றேன் சுத்த சிவச்சிற் பரத்தே.

## உஎ அருள் வாழ்வு

(வெண்பா)

274. பரவெளியா வுள்ளவருட் பார சொரூபத்
திரவுணர்வா லென்மெய் தெரித்தான்—கரவிலா
மோனவருட் கைவல்ய முத்திப் பெரும்பதவாழ்
வூனமறக் கூடிற் றுளத்து.

275. விளங்குசிவ ஞானவருள் வேள்வியொன் றென்னுள்
வளங்குலவ வென்றும் வளர - உளங்கிளர்சச்
சிற்பரமா மோனகுரு தேவனியற் றுண்மையுணர்
வற்புதவாழ் வாயிற் றகத்து.

குறிப்பு :— உண்மையுணர்வு - உண்மையை நான் உணர்ந்தது.

276. வரவுநன் ருக மனத்தி லணைந்த
பரமனென் பாற்கூர் பரிவால்—பரம
சுபங்கலந்த மோனத் துரியவாழ் வோங்க
அபங்கனு வுற்றே னகத்து.

(கொச்சகக் கலிப்பா)

277. அவச்செல்வ வாழ்வை யறத்துறந்தே னுக்குச்
சிவச்செல்வ மான செழிப்பளித்தா னுண்டான்;
சுவச்சமாத் துன்று சுவானுபவ மோனத்
தவச்செல்வ வாழ்வு தழைக்கலுற் றேனே.

## உ அ. மோன வொளி

(வெண்பா)

278. குற்றங் களுமே குணங்களாக் கொண்டுதிரு
முற்றங் குறுகவெனை முன்பணித்தான்—சற்றுமோ
ரற்றங்காக் கின்றவறி வற்றேனை மோனவொளி
முற்றுங் கவர்ந்ததுள மூண்டு.

(கொச்சகக் கலிப்பா)

279. தீனனே னுள்ளஞ் செழிக்கத் திருவளர்மெய்ஞ்
ஞான வொழுக்கமுறை நம்ப னருளலால்
வானமே யாக மலர்ந்தஞா னனுபவ
மோன மெனக்கு முழுமுதல்வாழ் வாயிற்றே.

280. ஏமந்தே ராதமட வேழையே னுள்ளத்திற்
காம வெகுளி மயக்கமறக் கண்ணேக்கிச்
சேமவியல் பானசிவந் தேற்றினன் செம்பதத்து
நேமமெல் லாமா நிரம்பியது மோனமே.

281. மோனவருட் பார்வையே முத்தித் *துவாரமா
ஞான சொரூபகுரு நாத னருளினன்;
யானென்னும் மோக விருட்பா ழகந்தைதீர்
மோனம் பரசொருப முத்தியா மூண்டதே.

* துவாரம் – வாயில்.

282. என்றென் றெதுவு(ம்)நா னெண்ணு தறியாது
நின்றதே யுண்மை நிலையா வருளினன்
வென்றிசேர் சுத்தவருள் வித்தகச்செம் பொற்பதத்தா
டொன்றுபட்ட மோன வுணர்வொளியால் வாழ்ந்தோமே.

283. மயக்கமனக் கற்பனையை மாற்றியென் னுள்ளத்
துயக்கமற வோட்டின னுள்ளுணர்வா லாண்டான்
முயக்கமா மத்துவித மோனனு பூதி
நயக்கவெனக் குற்றதுபொய்ந் நான்கரக்கத் தானே.

284. அவமான மூர்க்க வகப்பே யுறவாற்
பவமான சொப்பனவெம் பாழ்மயக்கத் தாழ்ந்தேன்
சிவமாக வென்னைத் தெருட்டியதா லாண்டான்
சிவஞான மோனச் சிறப்பியல்சார்ந் தேனே.

285. ஒருத்தனு முண்மை யுடையான் எனையவ்
வொருத்தனே யாகவுளத் தோர்வித்த வாற்றல்
விருத்தமா மோக விகற்பமற உண்மைத்
திருத்தமா மோனத் தெளிவுசேர்ந் தேனே.

## உ௯. உளத்தொளி யோங்கிற்று

(வெண்பா)

286. பொய்யாத செந்நாப் புலவோராற் பாடலுற்ற
மெய்யான கீர்த்தி விசும்பணவ—எய்யா
தெளியோங்கள் பல்லா யிரவோரைக் காத்தான்
ஒளியோங்க லுற்ற துளத்து.

(கொச்சகக் கலிப்பா)

287. கருத்துக்கெட் டாமெய்க் கடவுளை நான் காணக்
கருத்திற் கருத்தேயாக் காட்டிக் கொடுத்தான்;
கருத்தனு வுள்ளவருட் கண்மணியாந் தெய்வத்
திருத்தனு லுள்ளுணர்வு சேரப்பெற் றேனே.

## கூo. பேரின்பம்

(வெண்பா)

288. இன்பமய மான வியற்பதத்தில் வாழ்வேபே
ரன்புமய மாக வமர்வித்தான்—நன்பதமாம்
போத சொரூபத்திற் பொங்கலோ பொங்கலெனக்
காதலுறப் பூண்டேன் களி.

289. குருரமணக் கோமான் குடியோங் களுக்கு
வருமரணம் போக்கு மருந்தாய்த்—தெருமரல்சாய்த்
துண்மைநிலே யுள்ளத் துணர்த்திஞன் பேரின்ப
வண்மையுற மன்னியது வாழ்வு.

290. நீக்கமரு முண்மை நிலேவிளங்கத் தானெனக்குச்
சூக்குமமாச் செய்தவருட் சூழ்ச்சியாற்—பாக்கியமா
வென்னிதயத் தூடுபே ரின்பவெளி காட்டிஞன்
என்னதியற் சார்புகண் டேன்.

291. பாழ்க்கையற வாங்கிவெம் பாசத்திற் பட்டேனே
வாழ்க்கையுற வைத்தான் மலர்ப்பதத்தில்—ஊழ்க்கையுரு
தாண்டானுக் கன்புபட்ட வாற்ரு லடியனேற்
கீண்டாயிற் ருண்டுறும்பே ரின்பு.

292. மத்த மனக்கலக்கம் மாயமாய் மன்னுயிர்பாற்
பொய்த்தொழியக் கண்டருள்சற் போதகுரு—வைத்தி
புன்பிறவித் துன்பமறப் போக்கலாற் பொங்கும்பே [யனுப்
ரின்பவியல் சார்ந்தே னினிது.

293. மண்ணுக மட்குமுடல் வாதனேபோய் மங்கவருள்
விண்ணுக வென்மெய் விளக்கிஞன்—கண்ணுக
நின்றவருள் விஞ்சையிலென் னெஞ்சகத்து வஞ்சமயல்
பொன்றவின்பம் பொங்குகின்ற தால்.

(கொச்சகக் கலிப்பா)

294. அன்னியமா யாரு மறிதற் கரியவொரு
தன்னியலே யென்னியலாச் சாட்சாற்கா ரந்தெரித்தான்;
நன்னயமார் மோனமெய்ஞ் ஞான சொரூபமா
மன்னியபே ரின்பவருள் வாழ்வு மடுத்ததே.

295. உள்ளமே கோயிலா வுற்ற சிவபிரான்
கள்ள மனமே கடுவா வமுதுசெய்தான் ;
உள்ளரிய வுள் ளமா வுள்ள வொளிப்பிழம்பு
தெள்ளமுத வெள்ளமாத் தித்திப்பூர் கின்றதே.

296. பொய்த்தத் துவங்களிற் புக்குக் கலக்கியவென்
சித்தக் கலக்கமறத் தேற்றித் தெளிந்தசிவ
மெய்த்தத் துவமா விளங்கினன் சுத்தவருள்
வித்தைத் திறத்தால் விளைந்ததுபே ரின்பமே.

297. தண்டுகொண்டாள் கின்ற தடிப்பிணக்கர் போன்றபுலக்
கண்டகரி னின்று நான் கைகடக்கத் தன்னவனைக்
கண்டுகொண்டாண் டிட்டவருட் காவலன்காட்
[டிக்கொடுக்கக்
கண்டுகொண்டேன் இன்பக் கழற்செம் பொருள்வளமே.

## ௩௧. சாந்தி

(வெண்பா)

298. சும்மா விருவென்று சுத்தவருட் சூழ்ச்சிசெய்தான்
அம்மா னெனையாண்ட வங்கணன்—செம்மாண்
பொருளே சொரூபமாப் பொங்குமனு பூதித்
தெருளிலுற்றேன் சாந்தித் திறம்.

299. கண்டுகொளத் தன்சொருபக் காட்சியளித் தன்புமயத்
தொண்டுபட ஞானத் துறவளித்தான்—மண்டுமயற்
பற்றற்ற வாழ்வாற் பரமோப சாந்தபத
முற்றுத் திளைத்தே னுளத்து.

300. நீக்கமற வெங்கு நிறைந்தவருட் போதவெளி
யாக்கமுறக் காட்டி யருளினன்—சூக்குமமாப்
பொங்குசிவா னந்தப் புணரியிலே சாந்திடெனக்
கெங்குமுறக் கண்டே னினிது.

குறிப்பு:– சூக்குமமாப் ... புணரி – சூக்ஷ்மத்தன்மையாற்
பரவெளியாகப் பரந்த திருவருட் பேரின்பக்கடல்.

(கொச்சகக் கலிப்பா)

301. அறிவிற் பெரியநா னல்லாச் சிறியேற்
கறிவே சிவசொருப மாகத் தெரித்தான்
அறிதற் கவசியமின் றுத்தெளிந்த மோனத்
தறிவமைதி பெற்றே னருட்பிரா னாலே.

### கூஉ. அருட்சக்தி

(கொச்சகக் கலிப்பா)

302. கார்வந்த மோகக் கலக்கக் கவற்சியற
நேர்வந் திதயத்து ஞேயந் துலக்கினான் ;
கூர்வந்த ஞானவருட் கோமா னருட்சத்திச்
சீர்வந்த வெள்ளந் திளைப்பச்செம் மாந்தேனே.

### கூங. சாதுவாச் சரிக்கின்றேன்

(வெண்பா)

303. கருத்தூ டிருந்தே கருத்தைத் திருத்திப்
பொருத்தினான் மோனவருட் போதம்—வருத்தத்துக்
கேதுவாஞ் சிந்தை யெழாதிதயத் தூடழுந்து
சாதுவா நான்சரிக்கின் றேன்.

### கூச. சுபந் தோய்ந்தேன்

(வெண்பா)

304. கல்லாத மூடக் கயவனுக்கு மெய்ஞ்ஞானஞ்
சொல்லாதே சொல்லித் துலக்கினான்—புல்லாதே
புல்லிநா னந்தவருட் போதம் புலங்கொள்ளத்
தொல்லியலே தோய்ந்தேன் சுபம்.

### கூரு. மரணமின்மை

(கொச்சகக் கலிப்பா)

305. காவலனாய் மோனவருட் கற்பகமா வுற்றபிரான்
ஏவலனா நின்ற வெளியேற் கினிதளித்த
கேவலஞா னத்தாற் கிளர்சொருபச் செம்பதவாழ்
வார்வதனா லுள்ளத் தடைந்ததமு தக்கடலே.

## 8. அளித்தான்

### க. அருட்பார்வை

(வெண்பா)

306. பேதவறி வானவகப் பேயறிவின் மோகந்தீர்
போதவருட் பார்வையுளம் பொங்குவித்தான்—மாதவ
ஞானப் பரசொரூப நாட்டத்தால் நானெனுமவ் [மெய்ந்
ஊனமலப் பாழ்கெடுத் தோன்.

307. தன்னையன்றி யாரே யெனக்குள்ளா ரென்றிரங்கி
யன்னையின்மிக் காண்டா னருளினன்—என்னையே
யானறியா மோக விருட்டுக் குருட்டுக்கு
ஞானவொளிப் பார்வை நயந்து.

308. கிழியளித்தான் ஞானக் கிளர்ச்சியா லுண்மை
விழியளித்தான் வேதப் பொருளான்—பழியுறுபொய்க்
கற்பனை பேதக் கலக்கமறக் கேவலசச்
சிற்பரமா மீதூர் சிவன்.

309. சிவத்துக்கூ ஞகவறச் செத்தொழிந்த ஜீவச்
சவத்துக் கருட்காட்சி தந்தான்—அவத்தைக்
கலக்கமறக் காணுங்கண் காட்சியெலாங் கண்ணு
யிலக்கமுறத் தன்மெய் யியல்.

310. உள்ளம் பரவெளியா வுள்ளவருட் பார்வையாற்
கள்ளமனக் காட்சிவெறுங் கற்பனையாத்—தள்ளுபடி
யாக்கினன் மோக வகந்தையற வென்னகத்துத்
தாக்கியசச் சிற்பதத் தான்.

(கொச்சகக் கலிப்பா)

311. உண்ணேக்க வுள்ளத் தொடுக்கியென் சுட்டுணர்வை
மண்ணேக்க மற்றெழிய மாற்றியே சுத்தவருள்
விண்ணேக்கு வித்தானேர் வித்தகமெய்த் தத்துவன்றன்
கண்ணேக்க மாத்திரத்தாற் கண்ணிமைப்பிற்
[கள்ளனையே.

## உ. பக்தி

(குறள்)

312. தனிக்க விளங்குசிவத் தம்பிரான் சால
வினிக்கலுற்று னேதங் கடிந்து.

(வெண்பா)

313. அவக்காத லூடே யழுந்தாது நாயேன்
சிவக்காத லாலே செழிக்கத்—தவக்கனல்சற்
றென்னிதயத்தூடே யெழுப்பினன் ஞானவொளி
மன்னியதா லென்றன் மனத்து.

314. சித்தோப சாந்தவருட் சீர்பாத வாழ்க்கையின்முற்
பொய்த்தோடிச் சிந்தைப் புலம்பொழிய—மொய்த்தபர
பத்தி ரசானுபவம் பாலித்தான் மெய்ஞ்ஞான
சித்தியா மோனத் திறத்து.

315. குருக்களா நின்றவருட் கோமான் மயக்கக்
கருக்கொளகங் காரக் கருத்தை—உருக்கொளா
துற்பத்தித் தானத் துசாவா லொழித்தொளிசேர்
சற்பத்தி தந்தா னெனக்கு.

316. பிள்ள வொறுத பெருங்கருணை யாளனெனக்
குள்ளவருள் வாழ்வா வுதவினன்—உள்ளத்
திருப்பாக வுள்ள வியற்செம் பொருளாந்
திருப்பாத பத்தித் தெளிவு.

317. ஒன்றுபட்ட மோன வுரவொளியா லிவ்வுலகை
வென்றிகொள் வித்தவருள் வீரசிங்கன்—நன்றிசேர்
போதசிவா னந்தவருட் பூரணவாழ் வாவளித்தான்
பாத ரசானு பவம்.

318. சொருபத் தியானஞ் சுடரமேன் மேலும்
குருபத்தி யள்ளிக் கொடுத்தான்—வெருவித்
தியங்காம லென்னைத் திகழ்த்தவெளி வந்த
வயங்கிளர்சுத் தான்மவடி வன்.

319. ஆண்ட சொரூப வறிவாலே நெஞ்சகத்தூ
டீண்ட வழிபா டியல்பாக—ஆண்டபதத்
தன்புமீக் கூர வனுபூதி நல்கினன்
அன்புமய மான வரன்.

(கொச்சகக் கலிப்பா)

320. தெள்ளுங் கழற்கண்ணே சித்தந் திளைப்பவெனக்
குள்ளன் பருளினன் உள்ளத் துபசாந்த
வெள்ளம்பாய் மோன விசுத்தப் பரவுணர்வாற்
கள்ளங் கழன்றொழியக் கண்டவருட் கண்மணியே.

321. பேரின்ப மோனவருட் பெற்றியா லாண்டபிரான்
ஓரன் புளத்தே விளைத்தானூற் றுப்பெருக்கா,
வாரம் பழுத்தபழ மாணடியர் கூட்டத்திவ்
வாரம் பனுஞ்சேர்ந் தருள்வாழ் வடையவே.

## ரு. திருவடித் தியானம்

(குறள்)

322. கதிரார் கழலென் கருத்திற் பொருத்திச்
சதிராளன் செய்தான் சதிர்.

(வெண்பா)

323. நண்ணுவித்த ஞானகுரு நாத னருட்பதமே
யெண்ணுவித்தா னெண்ணுமற் றன்னியல்பா—
வித்தகமா மந்த விசுத்தத் தியானமே [வண்ணமொத்த
புத்தமுதாம் புத்திப் புலத்து.

## சு. அடியார் உறவு

(வெண்பா)

324. சீரியமெய் யன்பர் திருக்கூட்டஞ் சேர்த்தினிதாப்
பூரியேன் வாழ்வைப் புதுக்கினன்—ஆரியனு
வாண்டுநா யேனையகத் தாருயிருக் கோருயிரா
வீண்டுநா னுயவெம் மான்.

### ரு. ஊனுக்கிக்கொண்டான்

(வெண்பா)

325. குறிகுணந்தீர் வாலறிவாங் கோலத்தா னெங்கும்
பிறிவறவே நின்றவருட் பெம்மான் அறிவுக்
கதீதமாத் தீர்ந்தானென் னுவியைத்தா னுண்டு
சதோதயமாத் தோய்ந்தான் றழைத்து.

### ௬. இரட்சிப்பு

(குறள்)

326. அருட்சிற் பரவாழ் வகம்பொங்க நோக்கி
இரட்சிப் பளித்தா னிறை.

(கொச்சகக் கலிப்பா)

327. கட்டையே போன்றஜடக் காயமே நானென்று
கெட்டியாப் பற்றியகப் பேயாகக் கெட்டொழிந்தேன்
திட்டியா லென்னைத் தெருட்டியே சிற்பரமாக்
கட்டினுன் ஞான வருட் காப்புநாண் சற்குருவே.

### ௭. சாவாப்பதம்

(வெண்பா)

328. மூவா முதலான மூத்தப்ப னென்னுயிர்க்குச்
சாவா வமுதபதந் தானளித்தான்—தேவாதி
தேவருங் காணுத் திருப்பாத ஞானவொளிப்
பார்வையுறத் தன்னருட்கண் பார்த்து.

329. தேற்றியே சுத்தவருட் சிற்பதத்தில் வாழ்வருளி
மாற்றினுன் மோக மரணபயம்—போற்றியடை
பத்தரையென் றென்றும் பராற்பரமாந் தன்சொருப
முத்தியில்வைத் தோம்பும் முனி.

330. உடையானை நான்மறந்த வொவ்வோர் கணமு
மடியனேன் செத்தே னகத்தே—இடையரு
ஞான சொரூபமா நம்ப னெனைக்கலந்தான்
ஊனமாஞ் சாக்கா டொழித்து.

(கொச்சகக் கலிப்பா)

331. யாவரே தன்னடிமை யேய்ந்தா ரவர்தம்மைத்
தேவரின்மே லாகச் சிறப்பிக்குஞ் சீராளன்
ஆவணங்கொண் டென்னையடிக் காண்டான் பிரமாதச்
சாவகல்வாழ் வானமெய்த் தன்மைசார் வித்தானே.

332. புத்தகஞா னஞ்சற்றும் போதா தனுபவத்துக்
கத்தகநில் லென்றுபர மான்மானு பூதியால்
வித்தகவாழ் வான விசுத்தமோ னந்தெளியப்
புத்தமுத நோக்கம் புகட்டினன் சற்குருவே.

333. சித்தத்திற் சித்தாத் தெளிந்து விளங்குசிவப்
புத்தமுத வாழ்வு பொருந்த வருளினன்
பொய்த்தத் துவங்கள் புலம்பவருட் பூரணத்தில்
வித்தகமா மோன வியன்பரமா வாண்டவனே.

334. மைத்தொழிந்த மாய மனத்தாலே தன்னைமறந்
தித்தனுவே நான்போ லிறந்து பிறந் தெய்த்தேனை
மத்தமனக் கற்பனையை மாற்றியருட் சிற்பரமெய்த்
தத்துவமாத் தேற்றிமயற் சாவொழித்தான் சற்குருவே.

குறிப்பு :—மயற்சாவு - பிரமாத வடிவான மரணம்.

335. ஓலமிட்டார் நோக்க வுதார வருட்பொலிவோ
டேலமுட் டுத்தடைவிட் டின்பஞ்செய் யெம்பிரான்
ஓலமிட்டே னுருயிரை யுண்மை யுணர்வொளியாற்
காலவட் டச்சக் கரச்சுழலின் மீட்டானே.

336. முத்திப்பே ரின்ப முழுமுதலென் னுள்ளிருக்க
மத்தவகப் பேயேன் மனந்தடுமா றிக்கலங்கிச்
செத்தொழிந்தேன் மாயா செகப்பாழில்; வித்தகமெய்ப்
புத்தமுத வாழ்விற் *புதுக்கினா னண்டவனே.

*புதுக்குதல் :—புத்துயிர் பெற் றெழுவித்தல்.

337. ஆண்டுகுரு நாத னளித்திலனேல் அந்தோநான்
மாண்டொழிய வேண்டுவதே மாயக் கனவகத்து
மீண்டுநான் வாரா விழுப்பதமென் னுள்ளுணர்விற்
காண்டகவே காட்டினன் கண்ணா ரமுதனே.

338. மையலுற் றைம்புலத்து மாழ்குலக வாழ்வினின்
றுய்யப்புக் கேனுக் குபாயமா வுள்ளமொன் றிச்
செய்யக் கடவசிவ சிந்தனையிற் சிந்தையைச்சேர்த்
தைய னளித்தா னமுதானு பூதியே.

339. அற்றமா மோக வகப்பா ழறச்செற்ற
வெற்றிசே ருண்மை விளக்கமே நோக்கமாப்
பற்றியே யென்னைப் பராவமு தாக்கினன்மற்
றிற்றெனவொண் ணாத வியற்சிற் பரமனே.

அ. **சிறுமை யறல்**

(குறள்)

340. என்சொருப மாக விருந்தொளிர்தன் மோனபதத்
தென்சிறுமை தீர்த்தா னிறை.

(வெண்பா)

341. ஆலைக் கரும்பா வடியனேன் பட்டதுயர்
வேலைக்கொ ரம்பாத் தழல்விழித்தான்—ஓலக்கம்
தொண்டனே போலத் தொழுதேற்குந் தன்கருணை
யுண்டெனு வாண்டவுடை யான்.

342. நீடும்பே ரின்ப நிலாவாக நெஞ்சத்திற்
கூடும்பே ரன்புக் குலாவாலே—ஆடும்பே
யாட்டமா மோக வகந்தைசே ரைம்புலப்பற்
றீட்டமறக் கண்டா னிறை.

343. வண்ண மழகியான் மற்றறியாத் தன்மயமா
வெண்ண மிளகியா னெவ்வுயிர்க்கும்—தண்ணென்
றருட்பார்வை யாலே யமுதவிருந் தூட்டி
மருட்பாச வெம்பசிமாய்த் தான்.

344. சிற்சத்தி யாளன் சிவரமணன் பொய்த்துவித
வச்சத் தியற்கை யகற்றினன்—முச்சத்தி
யாவுமொன் றான வியற்பரா சத்தியா
மேவுபர மாத்து விதன்.

345. ஒருவனு நின்ரு னுலகமுற்று மானன்
கருவனு நின்ற கடவுள்—வெருவரல்சேர்
மோக விகற்ப முனிந்தா னெனதுளத்தூ
டேகசிற் சத்தி யிறை.

346. முத்திக்கு வித்தா முழுமுதலாஞ் சிற்பரமா
வெத்திக்கும் போற்று மியற்பதத்தான்—சுத்த
வருட்சிற் பரவொளியா லாவரித்தான் பேத
மருட்கற் பனைசேர் மனம்.

347. நாதனையே முற்றமுற்ற நம்பினேன் ஞானவருட்
போதனையா லென்னைப் பொலிவித்தான்—சாதனை நா
ளுற்றிலே ஞண்டா னருள்வலியால் வாதனையைப்
பாற்றினன் மோனப் பதத்து.

(கொச்சகக் கலிப்பா)

348. பந்தபா சத்திற் படிந்துழன்று பாழ்பட்ட
அந்தனு மென்னு டருள்விளக்கந் தான்கொளுவிச்
சிந்தனு மோகமறத் தேறத் தெளிவித்தான்
சொந்தமா வுள்ள சொரூபவருட் பெம்மானே.

349. தேசமார் சுத்தவருட் சித்துவத்தால் என்னகத்திற்
பாசமாஞ் சித்தமல பந்தமற மாற்றினன்
பேசவொணு மோனவியற் பெற்றியால் இவ்வுலகப்
பாசமனக் கொந்தளிப்பைப் பாற்றுங் குருபரனே.

350. அசையும் படமா வலமந்த வென்னை
அசைவில் படமா வசைவு தவிர்த்தான்
அசைவு மனத்துக்கே யாகக் கழிந்த
தசைவில் சொரூபஞா னுனுபவத் தாலே.

351. ஓலமிட் டேனுக் குளத்துள் ளுணர்வுருவாச்
சாலச் சதிர்த்த சதாசிவமெய்த் தன்மையான்
கோலங் குருவாக் குலவ வெதிர்தோன்றி
மாலறிவாம் பொய்த்துவித மாயமறச் செற்றனே.

## ௬. அகந்தை யழிவு

(குறள்)

352. வெறிசே ரகந்தைமதி விட்டொழியக் கண்டான்
குறிவிட் டொளிர்சற் குரு.

(வெண்பா)

353. அம்மானை யன்றியெனக் காதரவிங் காருள்ளார்?
பொய்ம்மா லகந்தையறப் போக்கினான்—சும்மா
சொரூபவருட் பூரணமாத் துன்றுமியல் வாழ்வு
திரோதமறத் தேறிற் றறிவு.

354. யானே யெனக்கிகலென் றென்னையழித் தின்பமய
வானேற மோன வழிவகுத்தான்—ஞானமய
மோனானு பூதி முயங்கினே ரல்லதுமற்
றேனோ ரறியா விறை.

355. அடிகளாத் தோன்றி யடியோங் களைத்தன்
குடிகளாக் கொண்டவருட் கோமான்—கடியலாய்
ஊனவகங் கார வுயிர்ப்பை யுளத்தினின்று
வானகமா நின்றான் மலர்ந்து.

356. யானென் பதனுண்மை தானேயாக் காணவெனக்
கூனந் தவிர்மெய் யுணர்வளித்தான்—ஊன
வகந்தையதன் மூலத் தடங்கி யொடுங்கி
முகங்கவிழ்ந்து சாய்ந்ததென் முன்.

357. யான்போரு லன்றி யெவருந்தாம் போகவொண்ணு
வான்பா வியவருட்கை வல்லியத்துக்—கூனவுடல்
யானெனுமவ் வென்னையொழித் தெங்கோன் குருரமணன்
தானெனுமிவ் வென்னையுய்த்தான் றன்.

358. பொச்சாந் தொழிந்தமனப் புன்கலக்கம் மாற்றுமொளிச்
சொச்சந்த மான சொரூபகுரு—நிச்சிந்தை
யாகமனஞ் செத்தொழிய வான்றவருட் கேள்வியால்
ஆகமகம் புத்திகெடுத் தான்.

359. ஆச்சரிய மான வருட்பிழம்பா யென்னகத்திற்
பேய்ச்சரியை யான பிழைப்பொழித்தான்—பேச்சரிய
மோனக் கடவுளா மூர்த்தி குருரமணன்
ஞானத் தனிநா யகன்.

(கொச்சகக் கலிப்பா)

360. ஈழத்து மென்னு லியற்றவொணு தென்றேனுக்
கூழித்தீ யாக வுடற்றியகப் பாழ்சிதைத்தான்
வாழத் துரீயவருள் வைப்பில்யா னுள்ளொளியாற்
சூழத் துலங்கு சொரூபவியற் சிற்பரனே.

குறிப்பு :—அருள் வைப்பில் யானுள்ளொளியால் வாழ
அகப்பாழ் சிதைத்தான் எனக் கூட்டுக :
ஈழத்து – ஈஷத்து, சிறிது.

361. இருமைசேர் மோக மியைந்த வகத்தை
ஒருமைசே ருண்மை யுணர்வா லொழித்தான்
உரிமையா வென்னே யுடைமையா லுள்ளத்
தருமைசேர் மெய்யன் பருதவம் மானே.

362. நினைப்பற்ற நெஞ்சிலொளிர் ஞேய சொரூபன்
முனைப்புற் றவர்க்கு முகங்கொடான் ; பாச
வினைப்பற் றுடையவென் மீதிரங்கி மோக
முனைப்பா மகந்தை முடிச்சறுத் தானே.

363. ஊனக் கலக்க முலகியற்கை ; பொய்ம்மயக்க
நானற் றெழிவதுமெய்ஞ் ஞானத் தவவியற்கை ;
நானற் றியல்சொருப ஞானனு பூதியால்
ஊனக் கலக்க மொழித்தா னுடையானே.

364. சோகாத்து மாயத் துயருழத்தற் கேதுவாத்
தேகாத் தியாசச் செருக்கா வெனைப்பீடித்
தாகாத் தியஞ்செய் யகப்பே யகற்றினன்.
ஓர்காத் திரமெய் யுணர்வேயா வாண்டவனே.

குறிப்பு :—மெய்யுணர்வே ஓர் காத்திரமாக.

## ௧0. ஒரு மொழி

(வெண்பா)

365. பரமார்த்த வாழ்வகத்திற் பற்றவெனக் கோர்சொல்
அரைமாத் திரையி லளித்தான்—நரமாகத்
தோன்றினு னேனுந் துரீய சொரூபமே
யான்றவடி வாவிளங்கம் மான்.

366. தெள்ளத் தெளிந்ததொரு தெய்வமொழி யாலிறையென்
னுள்ளத் துறுதிபெற வோதினுன்—கள்ளமா
மூன வகந்தைமுனேப் போய்ந்தொழிந்த வுள்ளுணர்வின்
மோனமே யந்த மொழி.

குறிப்பு :—ஊன முனேப்பான அகந்தை ஒய்ந்தொழியப் பெற்ற உள்ளுணர்வாகிய மோனம்; உணர் வின் மோனம் என்புழி, இன் அல்வழிச் சாரியை.

## ௧௧. உள்ளமானுன்

(கொச்சகக்கலிப்பா)

367. உள்ளங் கலந்தா னுரையாடான் சுத்தவருள்
வெள்ளம் பெருக்கினுன் வித்தகக்கண் ணேக்கத்தான்.
உள்ளும் புறம்புமொருங் கொக்க விளங்குபர
வுள்ளமா வென்னே யுளத்தொளிரக் கண்டானே.

## ௧௨. விழிப்பித்தான்

(வெண்பா)

368. கனவிலகப் பட்டுக் கலங்கினே னுக்குக்
கனவினின்று நெஞ்சங் கழல—நனவொளிர்மெய்ஞ்
ஞான வருட்பரமா நம்ப னெனேக்குலுக்கி
யூன வுறக்கமொழித் தான்.

(கொச்சகக் கலிப்பா)

369. விண்ணுக்கும் விண்ணு விளங்கு சொரூபமாய்க்
கண்ணுக்குங் கண்ணுவென் கண்ணேத் திறப்பித்தான்
உண்ணெக் குருகுவா ருள்ளத் துணர்வுருவா
அண்ணிக்க வூற்றகண் ணுரமுதப் பெம்மானே.

370. பிறங்கக்காண் கின்றவருட் பேராளன் பாழி
லுறங்கினேன் றன்னை யுணர்த்தியே சிந்தை
கறங்கிடா வாறு கருத்தைத் திருத்தி
நிறங்கிளர்பா தத்து நிறுத்தியிட் டானே.

371. நினைக்கு மகந்தை நிகழ்வாகத் தோன்றும்
மனக்கலக்க மான மதித்தடுமாற் றங்கூர்
துனிக்கவல்சே ராத சொரூபப் பதத்திற்
றனிக்கவிழிப் பித்தான் சதாசிவப்பெம் மானே.

372. துள்ளு மகந்தைத் துடிப்பான பேதைமையால்
உள்ள வுணர்வான வுண்மையாந் தன்னைவிட்டுக்
கள்ளமனக் கற்பனையே காதலித்தேன் பாலிரங்கி
வெள்ளவருட் பெம்மான் விழிப்பித்தா னுண்மையிலே.

373. காயத்தை நானென் றகங்கரித்துக் கற்பனை
மாயத்தோற் றக்கனவின் மாழ்கலுற்றே னுக்கிரங்கித்
தாயத்த னைவருட் சைதன் னியசொருபன்
மாயத் துயிற்கனவு மாயவிழிப் பித்தானே.

374. பைத்தியமா மோகமனப் பாசா டவியிலலைந்
தெய்த்தலுற் றேனிதயத் தின்ப வருள்வடிவா
வித்தகன்புக் காண்ட விசித்திரத்தாற் கண்விழித்தேன்
புத்தமுத வாழ்வாப் பொருந்தியதென் னுள்ளமே.

375. உழைந்துலகப் பாழி லுழன்றே னுணர்வில்
அளைந்த சொரூப வருள்விழிப்பாத் தேறத்
தெளிந்தமெய்ஞ் ஞானத் திறத்தால் அகத்தில்
விளிந்ததுவெம் பாச விடாய்சேர் கனவே.

376. களிசே ருலகக் கனவினின்று சுத்தத்
தெளிவா விளங்குசிவச் செம்பதஞ்சேர் வுற்றேன்,
வெளியே சொரூபமா விள்ளவென் னுள்ளத்
தொளிபெருக் கூற்றமெய் யொள்ளியான் பாலே.

## கஅ. உண்மை யுணர்த்தினன்

(வெண்பா)

377. உண்மைப் பொருளை யுயிர்க்குறுதி யாகவருள்
வண்மையால் வாரி வழங்கினன்—திண்மைசேர்
அப்பொருளென் சொந்த வறிவொளிவாழ் வேயாக
நிற்பதெங் கெங்கு நிறைந்து.

378. தனியன் சதாசிவன் சச்சிதா னந்தன்
முனிவன் குருரமண முத்தன்—வினையின்
பழிபடுபொய்ப் பாசப் பகற்கனவென் னுள்ளத்
தொழிபடவுய்த் தான்மெய் யுணர்வு.

(கொச்சகக் கலிப்பா)

379. கள்ளங் கரந்தொழியக் கண்டவருட் கண்ணேக்கால்
உள்ளந் தெளியவெனக் குண்மை யுணர்த்தினன்
துள்ளுமனே வேகத் துடிப்பறப்பே ரின்பவருள்
வெள்ளமா வோங்கு விசுத்த சொரூபனே.

380 ஒன்றுமறி யாதுமலப் பாழிலாழ்த் தேனுணர்வூ
டொன்றுமறி யாதவோ ருண்மை யுணர்த்தினன்
ஒன்றுமறி யாதவெற் றுள்ளுணர்வா முண்மையா
ஒன்றியென் னுள்ளத் தொளிர்சொருப சற்குருவே.

381. என்னகத்துத் தானேமெய்ந் நானு வியல்கின்ற
தன்னதுசுத் தாத்துவிதத் தன்மைநான் றேருது
தன்னினுமற் றன்னியம்போ லென்னைத் தடுமாறி
யின்னலுற்றேற் குண்மை யிலகுவித்தா னுண்டவனே.

382. இதயத் திதயமா வேய்ந்த சொரூபப்
பதியிலே முத்திப் பயன்பெறுவே னுக,
உதய வொடுக்கமற்ற வொட்பநுட்ப வுண்மைப்
பதவுணர்வென் னுள்ளமெழப் பற்றுவித் தானே.

383. திண்மைசேர் சுத்த சிவத்துவத்தா லாண்டபிரான்
அண்மையிலே கூட்டியெனக் கன்பா லருளியதோர்
உண்மையுணர் வான வொழுக்கமே பேரின்ப
வண்மைசேர் கைவல்ய வாழ்வா மலர்ந்ததே.

## கச. என்மெய் யுணர்த்தினன்

(குறள்)

384. என்னை யெனக்களித்தான் யான்யானென் றென்னகத்
யானேதா னொளிரெம் மான். [தில்

(வெண்பா)

385. புத்தியைத்தன் பாலே பொலிவித் தருள்சொருப
வித்தையெனக் குள்ளே விளங்கவே—புத்தியா
லன்னியங்கள் யாவு மறிந்தநின் றன்மையென்னென்
றென்னியலோர் வித்தா னிறை.

386. மத்தனு மென்றன் மயக்கமற மெய்ஞ்ஞான
சித்தனு நின்றவருட் செம்மலான்—சுத்த
வெளியாக வென்னுள் விளக்கினன் றன்மெய்
யொளியான வுண்மைப் பதம்.

(கொச்சகக் கலிப்பா)

387. பின்னியதோர் சிச்சடப்பொய்ப் பேய்மதியின் பேதைமை
என்னுருவே யான வியற்பரத்தை யானிழந்தேற் [யால்
கன்னியமல் லாதனா னரியன்காட் டிக்கொடுத்தான்
தன்னியல்வாழ் வாகவொளிர் தற்பரமெய்த் தன்மையே.

குறிப்பு:—பேய்மதியின் பேதைமை-பேய்மதியாகிய பேதைமை.

388. ஒளிர்வித்த வுண்மையா னுள்ளத்தே யாண்டா
னளிவித்தான் சுத்த வருட்பரமாந் தன்மெய்
தெளிவித்தா னெல்லாஞ் சிவமயமா மோனங்
கிளர்வித்தான் சுத்தசிவக் கேவலத்தின் கண்ணே.

389. சுற்றுமுற்று நோக்கிச் சுழலுமனக் கற்பனையு
டற்றொழியா வாற்று லகப்பா ழகற்றியெனக்
கிற்றெனத்தன் னுண்மை யிதயத் திலக்கினன்
வெற்றிசேர் சுத்தவருள் வித்தகச்சிற் கேவலனே.

## கடு. உய்வித்தான்—உய்ந்தேன்

(குறள்)

390. பாழ்த்த மயக்கிற் படுகிடையா வூழ்த்தொழியா
தென்னையுய் வித்தா னிறை.

391. பொருத்தினு னென்னைத்தன் பொற்பதத்தா டேக
விருத்தியா வுள்ள த் தியைந்து.

392. நிலைக்கலுற்ற சிற்பதத்து நிட்டையிலே கண்டேன்
அலைக்கலுற்ற மாயைக் கழிவு.

393. காணக் கிடைத்தசிவக் காட்சி துவிதமன்று
மாணக் கிளர்தன் மயம்.

394. தெய்வக் கடவுளாஞ் சிற்பரத்தென் னுண்மையுணர்ந்
துய்வுற்ற தென்னு ருயிர்.

395. செஞ்சரண மோனந் தெளிந்தவாற் றுலிதயத்
*துஞ்சொளிர்வ தென்னு ருயிர்.

*உஞ்சு—உய்ந்து என்பதன் மரூஉ.

(வெண்பா)

396. பொருவிகற்ப மான புணர்ப்புவிட்டுச் சிந்தை
நிருவிகற்பத் தூடே நிகழ—வெருவகப்பேய்
வெட்கித் தலைகரப்ப விஞ்சைசேர் தன்சொருபப்
பெட்புற் றுயிர்பிழைத் தேன்.

397. வாழ்வுற்ற தாகவருள் வண்பதத்தே வாசனையாம்
பாழ்வித்து மட்கமனப் பாசமற்றே—ஊழ்துற்
றியல்பான சாந்தி யிதயத் தொளிர
வுயலுற்ற தென்னு ருயிர்.

(கொச்சகக் கலிப்பா)

398. உஞ்சிடத்தன் னுண்மையையுள் ளோர்த்துணர
நஞ்சினுமே பொல்லா நவைசேர் பிரமாத [வொண்ணுது
வஞ்சகவே தாள வசப்பட் டொழிந்தேனை
விஞ்சையிலே வல்லவருள் வித்தகனுய் வித்தானே.

குறிப்பு :—உணரவொண்ணுது வேதாள வசப்பட்டு எனக் கூட்டுக.

## கசு. சொரூபம்

(குறள்)

399. அயல்சார வொட்டா தடர்த்தறிவை நானென்
னியல்சார வைத்தா னிறை.

400. பேயாப் பிடித்தவருட் பெம்மான் சொரூபமே
யாயதென் னுண்மை யகம்.

401. சுவச்சமா வுள்ள சொரூபநிலை சேர்த்தான்
அவிச்சையினின் றென்னையாண் டான்.

402. செத்தொழியா துள்ளத்துத் தேற்றினன் சிற்சொருபம்
பொய்த்தொழியா வுண்மைப் புதன்.

(வெண்பா)

403. பத்தனோ வல்லேன் பரமசிவ பத்தன்போற்
பித்தனே யாகப் பிதற்றினேன்—பத்திப்
பரிசிலாத் தன்சொருபம் பாலித்தான் ஞானக்
குரிசில் குருரமணக் கோன்.

404. முகத்தலரும் மோன முழுமுதலா முத்தி
இகத் தொளிரத் தேற்றியசீ ரெம்மான்—அகத்தே
அருளியவவ் வாழ்விவ் வடியேனுருவா
இருளிலா வுண்மை யியல்.

405. பாவனு தீதப் பரசுகமாஞ் சிற்சொருப
வாழ்வுநான் மல்க மலர்த்தினன்—தேவ
குருசொருப மானவருட் கோமான் பதத்தா
டுருவகந்தை யோய்ந்தொடுங் குற்று.

குறிப்பு:- அகந்தை ஒடுங்குற்று வாழ்வு மல்க என இயையும்.

406. சாதனமுஞ் சாத்தியமுந் தானேயாத் தங்குமொரு
மாதவமெய்ஞ் ஞானவருள் வண்பதத்தால்—பேதமனப்
பீடையற வென்னைப் பிரம்மசொரூ பானுபவ
மேடையில்வாழ் வித்தான் குரு.

407. எந்நினைவு மின்றி யிருந்தொளிர்தன் மோனவருட்
செந்நெறியி லென்னைமிகச் செந்நிறீஇ—மெய்ந்நிலை
னுள்ளத் தியல்பா வொளிர்சொருப வாழ்வாகத் [யென்
தெள்ளத் தெளித்தான் சிவன்.

408. உதாசீன மாக வொழுகுங்கம்:பீர
சதாசார வாழ்க்கை தழைப்ப—உதாசீன
சாதுவா வென்னைச் சரிப்பித்தா னென்னுளத்தின்
மீதுவாழ் மெய்த்தேவ தேவு.

409. ஆரா வமுதமா வாரத் திளைக்கவகச்
சீரார் சொரூபத் தியானமே—நேரான
மார்க்கமாச் சிந்தையைத்தன் மாட்டுப் பயிற்றியெனக்
காக்கமளித் தாண்டான் குரு.

410. சிவத்துயிலிற் சேர்ந்து செழித்தலின்றி மோக
வவத்தையிலுற் றந்தோ வழிந்தேன்—சிவத்தையிலக்
காகவெனக் குள்ளே யவிர்வித்து நல்கினன்
மாகவனத் தூக்கம் மனத்து.

குறிப்பு :- கவனத் தூக்கம்—ஜாக்ர ஸுஷுப்தியான துரீயம்.

411. அன்புத் தறையி:லமர்வித்தாங் கேயருட்பே
ரின்பத் துறையி லியல்வித்தான்—இன்பதுன்ப
மொத்த சமநிலையி லூன்றுவித்தாங் கேசொருப
சித்தியளித் தாண்டான் சிவன்

412. வேள்வியெதற் காக விளைந்ததோ வேதாந்தக்
கேள்வியெதற் காகக் கிளர்ந்ததே—மூள்வதாய்
மோனமெதற் காக முனைந்ததோ தன்சொருப
வானமதற் கென்னையுய்த்தான் மன்.

413. புத்தரம ஞரியன்சற் போதரவி யாய்க்குருட்டு
மத்தனை னுள்ளே மலர்த்தினன்—மெத்தத்
துரூகமாங் கேவலமாத் துன்றுமனு தீத
சொரூபமா மோனச் சுடர்.

414. உற்றென்னை நோக்கினு னுள்ளே யுணர்ச்சியொன்று
பற்றிற் றமுதவருட் பார்வையால்—வெற்றிசே
ரந்த வுணர்ச்சி வருட்பரமா நந் தன்சொருப
விந்தைசே ருண்மை விளக்கு.

415. அருள்வெளியா வுள்ளத் தவிர்சொருப வாழ்வே
பொருள்வளமாத் தேற்றியசற் போதன்—இருள்வழங்கு
மோகக் கலக்க முனைப்பற் றெளிர்சொருப
போகக் களிபுகட்டி னான்.

416. போதத்தா லன்றிப் புணர்தலரு நந் தன்னுண்மை
சாதித்த லான சமாதிநிலை—போதக்
கனல்வடிவ மானவருட் கண்ணோக்கா லென்னு
டனல்விழித்த லால்விளைவித் தான்.

417. ஊன வகந்தை யுணர்வை யொடுக்கியுளத்
தீனமா மோக விருள்கடிந்து—மோனமாத்
தொக்க சொரூபவொளி சூழப் பரப்பினான்
சிக்கெனவுட் சேர்ந்த சிவன்.

418. ஊமையா வென்னை யொடுக்கி யுளத்திலருட்
சீர்மைசேர் வாழ்வு செழித்தோங்க—காமியஞ்சேர்
மோகக் கருத்தை முடித்தான் சொருபவியல்
பாகக் கிளர்ந்த தறிவு.

419. உய்வதா வென்னுளத்து டுண்மை யொளிபரப்பிச்
செய்வதின் றாகச் செறிவித்தே—தெய்வதமா நந்
தன்சொருபத் தாலே தலையளித்தான் யாவுமற
மிஞ்சுருவே மெய்யுருவா வென்று.

420. ஜகத்தே மயங்கித் தடுமாறி னேனைச்
சுகத்தான மான சொரூபன்—அகத்தே
திருப்பாத ஞானவருட் சீர்மை துலங்க
இருப்பாக வைத்தா னினிது.

421. பொங்குவித்த மோனவருட் புண்ணியவான் பூரணமாத்
தங்குவித்தா னென்னுள்ளே தன்சொருபம்—*துங்க
தானேகண் ணாகத் தழைத்தவருட் பூரணத்தாற் [வித்தை
ருனேதா ஞகநின் ருன்.

* துங்கவித்தை – பரவித்தை.

422. அன்புமய மான வருட்சிற் பரசிவமே
யின்பமய மாக வியல்வதென்று—துன்பக்
கலக்கஞ்சேர் வஞ்சமனக் கற்பனைசெற் றுண்டா
னிலக்கிஞ னுண்மை யியல்.

423. ஆட்படுத்த வென்றிசே ராண்டானென் னுருயிர்க்கு
நாட்படுத்த தோழமைசேர் நல்லசிவன்—காப்புறுத்த
பந்தனமா வென்னுட் பதித்தான் பதத்தியலென்
சொந்த சொரூபமாத் தொக்கு.

424. என்மனத்தே யுள்ள வியல்பான செம்பொருளைத்
துன்மதியா லேமறந்து தோற்றேற்கு—நம்பன்
குருரமணன் மோனக் குறிப்பா லுணர்த்திந்
தருமமாத் தானளித் தான்.

425. தீராக் குறைமனமாஞ் சித்தமலங் கெட்டுநான்
ஆரா வியற்கை யவா நிரம்ப—யாராலுங்
காண்டலருஞ் செம்பொருளைக் காட்டி யருளினன்
ஆண்டவருட் சீமா னகத்து.

(கொச்சகக் கலிப்பா)

426. உண்ட லுறங்க லொழிந்துமற் றென்றுமே
கண்டறி யாத கசட்டு மனத்தனேற்
குண்டொரு செம்பொரு ளுன்றன் சொரூபமாக்
கண்டுகொ ளென்றருட் காட்சி யளித்தானே.

427. இம்பரும்ப ரெல்லா மியற்சிற் பரவெளியாந்
தன்பரிசே யானசாட் சாற்காரம் பாலித்தான்
அம்பரமா வோங்கு மதீதப் பிரானடியேற்
கெம்பெருமா னாக வெதிர்நின் றெழில்பெறவே.

428. அடிப்படையா வுள்ள வருட்பரத்தை மோகந்
தடிப்புறலாற் சேர்ந்தேன் சடவுடலே நான்போல்
கடவுளா வுள்ளவருட் கைவல்ய வுண்மைச்
சுடர்வெளியாத் தேற்றினான் சொச்சொருபன் றானே.

429. தானே தனக்குரிய சற்குருவாத் தானொளிர்மெய்ஞ்
ஞானோ தயமா நலங்கிளர்கண் ணோக்கத்தான்
மானுபி மான மயக்கந்தீர் சுத்தவருள்
வானு வளர்சொருப வாழ்வொளிரக் கண்டானே.

430. துளங்கலற்ற சுத்தத் துரீய சொரூப
வளங்கிளர்வாழ் வாக மனந்துலங்கக் கண்டான்,
களங்கமற்ற வுண்மைக் கடவுளா வென்னுள்
விளங்கலுற்ற சுத்த வெளியொளிப்பெம் மானே,

431. தன்னந் தனியான தற்பிரான் சுத்தவருள்
வன்னந் துலங்கு வசீகரக்கண் ணோக்கத்தாற்
றுன்னு துரீய சொரூபப் பதங்காட்டி
மன்னுமியல் வாழ்வு வழங்கினான் மாண்புறவே.

432. அலங்கோல மான வகந்தை மயக்கப்
புலங்காணி யாகமனம் பூரித் துழன்றேன்
கலங்கார வாரக் கருவைக் கெடுத்துத்
துலங்கா நின் றான்சொருப சோதிப் பிரானே.

433. தானு வெளிர்சொருபந் தன்னையே மாற்றிப்பொய்ம்
மானுபி மான மயக்கமுற்ற வென்னகத்து
நானு னெனக்குயிற்று ஞான நடத் தாலிறைவன்
தானு வொளிர்சொருபத் தன்மைதழைப் பித்தானே.

434. உருத்த வகப்பேயே யுருக்குலையக் காணுங்
குருத்துவமா மோனக் குறிதுலங்கு நோக்காற்
பரத்துருவே யென்னுருவாப் பற்றுமா பற்ற
வொருத்த னுணர்வொளியா வூடுருவுற் றானே.

435. ஊனு ருயிரா வுயங்காது சிற்சொருபந்
தானாக வென்னைச் சதிர்க்க வருளினான்
ஞானு ரியனுனா நம்பனென் னள்ளிதயத்
தானு வறிவா வகமகமென் றுண்டவனே.

436. சிவத்துவமா மோனச் சிறப்பு விளங்கு
சுவத்தவாழ் வான சொரூபானு பூதி
அவத்தனே னுள்ளத் தருளினன் ஞானத்
தவத்தராற் போற்று சதாசிவப்பெம் மானே.

437. கள்ள மயக்கமனக் கற்பனைதீர் சுத்தவருள்
வெள்ளவெளி யான விசுத்தத் துரீயமா
வுள்ளந் தெளிய வுணர்த்தி னூட்டினன்
துள்ளலறத் துன்று சொரூபானு பூதியே.

438. இலக்கணமில் லாத விலக்கியமா வுண்மைத்
துலக்கமுறு சொந்த சொரூபானு பூதி
நிலைக்கணியல் பாக நிகழ்வித்தான் சற்றுங்
கலக்கமில்லை வல்யக் கடவுட் பிரானே.

439. ஊங்கெல்லாந் தேடி யுழக்குங்கால் உய்த்துணர்வில்
பாங்கனேன் பாலே பரிந்திரங்கிக் கண்ணோக்கால்
வாங்கி யருட்செவ் வழிகாண வுய்த்துளத்தில்
வீங்கு சொரூப வியன்பரமாத் தேற்றினனே.

440. உரிய சொரூபமா வுள்ளத் துறைகை
தெரியாதெங் கெங்கும்போய்த் தேடி யலைந்தேன்
துரிய சொரூபத் துலக்கமா மோனத்
தொரியல்பாத் தன்னொடனை யொன்றக்கண் டானே.

441. எத்தனு வெங்குமுழன் றெய்த்தவகப் பேயேனைப்
புத்தமுத மானசிவ போகமுண்டு வாழ்கென்று
சுத்தநன வான சொரூபவியற் செம்பதத்து
வித்தகமா மெத்துவித்தான் மெத்தவரு ளாளனே.

442. அணவா வதீதசுத் தான்ம சொரூப
வுணர்வான வுள்ளமே யாண்டா னெனக்குப்
புணர்வான வுண்மைப் புகலா வளித்தான் ;
தணவா மிருத்தியுவுந் தாக்கவொண் ணூனே.

443. வாளா பிறந்துநான் மாண்டொழியா தாண்டபிரான்
ஆளா வடைந்தேனுக் கன்புறக்காட் டிக்கொடுத்தான்,
கோளாள னுகக் குறிக்கொளுமா றுள்ளுணர்விற்
றேளா முழுமணியாத் தொக்க சொரூபமே.

444. தானுன தற்பரத்தை நானெனன் றபகரித்த
ஈனனேன் கள்ளத்தை யின்னருளாற் றன்பொறுத்துத்
தானேதா னுகத் தழைத்தொளிர்மோ னத்திறத்தால்
வானு வியல்சொருப வாழ்வளித்தா னம்மானே.

445 அப்பாலுக் கப்பாலென் றார்ப்பரிக்க லுற்றதன்னை
எப்பாலுந் தானு வியல்சொருபத் தேற்றத்தால்
இப்பாலுக் கிப்பாலே யெய்துவித்தா னென்னுருவாத்
தப்பா வருட்பரமெய்த் தத்துவமா வுள்ளானே.

குறிப்பு:- ஆர்ப்பரிக்கலுற்ற – வேதங்களாற் கோஷிக்கப்
பெற்ற.

446. சாதிக்க வேண்டியதோர் தத்துவந்தன் மெய்யேயாப்
போதித்த தன்றியுமென் புத்திக்குட் போதமா
வாதிக்க மீக்கூர்ந் தபரோட்ச மாக்கினுன்
சாதுக் களுக்குரிய சற்குருவாம் பெம்மானே.

447. கள்ளமனப் புன்கலக்கக் கற்பனையைத் தன்னடியே
னுள்ளமுறப் பற்று தொழித்தவருட் சிற்பிரான்
கொள்ளெனவென் னுள்ளுணர்வில் வெள்ளமாக்
பிள்ளலற்ற சுத்தப் பிரம்மானு பூதியே. [கூட்டினுன்

கஎ. **துரீயம்**

(வெண்பா)

448. உளத்துக் குடையா னுளங்கொள்ளை கொண்டான்
அளத்தற் கரியசீ ராண்டான்—திளைக்கப்
பெரிய சிவானுபவப் பெற்றிசேர் மோனத்
துரியமா முண்மைச் சுடர்.

(கொச்சகக் கலிப்பா)

449. நாயிற் கடையா நலிந்தேனை நானெனும்பொய்ம்
மாயக் கலக்கமற மாற்றிஞா னுனுபவந்
தோயத் துரீய சொருபந் துலக்கினுன்
தாயிற் சிறந்த தயாவான சற்குருவே.

450. காண்டற் கிரண்டி லாக் கைவல்யச் சிற்பரமாத்
தூண்டினுன் சுத்தத் துரீய சொரூபவுண்மை
வீண்டர்க்க வாத விகற்ப மனக்கலக்கம்
மாண்டொழிய வென்னை மவுனமா வாண்டவனே.

451. ஆண்டவனை யன்றியெனக் காருந் துணையில்லை;
ஆண்டவனே யென்னதுமெய் யாருயிராக் கண்டு
[கொண்டேன்
ஆண்டவனே மிக்கவரு ளாட்சியா வென்னகத்துத்
தூண்டலுற்றுன் சுத்தத் துரீய சொருபமே.

452. தொண்டனேன் காணத் துரீய வருள்வாழ்வா
மண்டினு னுள்ளத்து; மாயமா மூன்றெழித்தான்;
அண்டினர் தம்மை யகந்தை மயக்கமறக்
கண்டதா லத்துவிதக் காட்சியாக் காண்போனே.

குறிப்பு: காண – அனுபவத்தா லறிய; மூன்று - நனவு, கனவு, துயில்; காண்போன் – (அன்னோரால் காணப்படுபவன்.

453. விரவுமனக் கற்பனு பேதவிட் சேபக்
கரவியன்ற புன்புலத்தர் காணவொண்ணு மோனப்
பரவொளிசேர் நோக்காற் பரவெளியே நானுத்
துரியவருள் வாழ்வு துலக்குவித் தானே.

## கஅ. அருள் வாக்கு

(குறள்)

454. தீம்பா ளிதமாத் திருவருட்பா லூட்டியென்னை
யோம்பா நின் றுனுடை யான்.

(வெண்பா)

455. வாயார வாழ்த்தவருள் வாக்கருளித் தந்தையொடு
தாயா வறிவமுதந் தான்புகட்டிக்—காயான
நெஞ்சைக் கனிவித்து நேயானு பூதியாக்
கொஞ்சிக் குலாவலுற் றுன்.

456 அருள்வாக்கு நல்கியதோ டன்றியெனக் கின்ப
வருள்வாழ்க்கை தானு மளித்தான்—மருள்வாழ்க்கை
யான மனோமயவாழ் வற்றொழியத் தன்சொருப
மோனமய மாயிற் றுலகு.

## கக. சிற்பர வாழ்வு

(வெண்பா)

457. வெளியாக வென்னை விழுங்கியே யுள்ளத்
தொளியாக நின்ற வுடையான்—தெளிவான
மோனவருட் கைவல்ய மூர்த்தி சநாதனவாழ்
வானவியற் சீர்மையளித் தான்.

(கொச்சகக் கலிப்பா)

458. மடவுணர்வா மோக மனத்து முனைப்பாற்
படர்வுறுவெம் பாசப் பரப்பா முலகத்
துடலுயிரா நானென் றுருத்துழலா துண்மைத்
திடவுணர்வா லென்னையருட் சிற்பரஞ்சேர்த் தானே.

459. தற்பரமா வுள்ள சதாசிவத்துக் கென்கடவேன்!
கற்பனை பேதக் கலக்கமற்ற சுத்தவருட்
சிற்பரமா வென்னைத் தெளிவித்தான் சற்றுமென்
சொற்பரமல் லாமெய்த் துரீய சொரூபனே.

460. உள்ளலரு மோன வொளிவெளியே யானமெய்ந்
நள்ளிதய வீட்டிலே நாட்டியென் னுருயிர்க்குத்
தெள்ளமுத மானவருட் சிற்பரவாழ் வூட்டினான்.
கள்ளமனோ வேகக் கடுப்பறச்செற் றுண்டவனே.

461. தேனே யனைய சிவானுபவச் சிற்பரவாழ்
வானு தடியே னகங்கிளரப் பொங்குவித்தான்
தானு வொளிர் சொருபத் தற்பரமா மோனவருள்
வானு விதயத்தில் வைகுசிவ சற்குருவே.

## ௨0. சிவ வாழ்வு

(குறள்)

462. ஓர் பொருளுண் டாக வுளத்தே யுணர்த்திஞன்
தேர்வார்க் கதுதான் சிவம்.

(வெண்பா)

463. நானற் றெழியவொளிர் ஞான சொரூபசிவத்
தானத்தி லென்னைத் தலையளித்தான்—மோனப்
பரமோப சாந்திப் பதத்துக் கொருபே
ரரசான வென்ஞண் டவன்.

464. முனைக்காத தன்னிழப்பா மோனமளித் தாண்ட
வினைக்கேட ஞை விகிர்தன்—எனைக்கேடு
செய்தான்போற் சித்தஞ் சிவசொருப மாவுயிர்க்கச்
செய்தாஞேர் சூழ்ச்சித் திறம்.

465. சித்தக் கலக்கத்தாற் சிந்தா குலங்கூர
மத்தக் கனவிடைநான் மாழ்குங்கால்—சித்தத்தே
முத்த சொருப முனிரமணன் மூட்டிஞன்
சுத்தசிவ போதச் சுடர்.

466. கூர்த்தவருட் பார்வையாற்கொத்தடிமை கொண்டபிரான்
ஆர்த்துயிரை வைத்தா னருட்பதத்தே—பேர்த்துமனம்
பித்துக்கொண் டைம்புலத்திற் பேதுறு தையுணர்வும்
தித்திக்க வைத்தான் சிவத்து.

467. அறிவளித்தா னன்பளித்தா ஞர்வஞ்சே ரின்பச்
செறிவளித்தான் பாதத் திறத்தே—பிறிவிலாப்
பத்தி யளித்தான் பரமோப சாந்தசிவ
சித்தி யளித்தான் சிவன்.

468. தாழ்வொன் றிலாத சதாசிவமாந் தன்பதத்தில்
வாழ்வொன் றெனக்கு வழங்கிஞன்—வாழ்வுசிவ
போதமய மாகப் புணர்தலாற் சித்தமதி
சீதளமா மல்கச் செழித்து.

469. தரும தயாளுவாந் தம்பிரான் றந்தான்
பரம சிவாம்புதியாம் பாதம்—சொருபமா
வைகுறுதன் னுண்மை மடுப்புற்று லன்றியகத்
துய்கதியொன் றில்லை யுயிர்க்கு.

(கொச்சகக் கலிப்பா)

470. பேர்ந்தொழியி லன்றியகப் பேய்த்தன்மை யாராலுந்
தேர்ந்தடைய வொண்ணுச் சிவக்கே வலசொருபன்
கூர்ந்தநா னென்னுமனக் கோட்டப்பேய்க் கோட்டாலை
தீர்ந்தொழிய நோக்கிச் சிவபதத்திற் சேர்த்தானே.

471. இருட்டவிச்சை யென்றுமில்பே ரின்பவெளி யாகத்
தெருட்டியென்னை யோங்குசிவச் செ பதத்திற் சேர்த்
குருட்டுமுட மாகக் குலைந்தொழிந்த நாயேன் [தான்
பொருட்டிரங்கி மோனவருட் புண்ணியச்சீ மானே.

472. எள்ளப் படாதபே ரின்ப வியற்சிவமே
தள்ள வொணுதவென்மெய்த் தத்துவமாக் காட்டினுன்
கள்ளக் கருத்தராற் காணவொண்ணு மோனவருள்
வெள்ளக் கடலா விளங்கு சொரூபனே.

473. கோட்டமா மோகவகக் கோசபா வங்கெடலால்
வீட்டியல்வாழ் வாக விளங்குபரி சுத்தவுளம்
சாட்டியமில் லாதசிவ சாயுச் சியமாகக்
காட்டினுன் கற்பனைமுற் றக்கடந்த கண்மணியே.

474. பரமசிவத் தன்மையாற் பாலித்தான் சுத்தத்
தரும சொரூப தயாளுவா ந் தம்மான்
கருமகதி யெல்லாங் கழன்றொழியக் காணும்
பரமசிவக் கைவல்ய பானப் பதமே.

475. ஊறுபடா மோன வுணர்வான வுண்மையே
தேற வொணுதசிவச் செல்வமாத் தேற்றினுன்
மாறுபா டான மயக்கவிருட் பாழையடர்
வீறுசால் சுத்தவருள் விஞ்சை விழியோனே.

476. காணற் கரியவருட் கைவல் லியசொருபத்
தாணவப்பே யான வகந்தைமுனைப் பற்றொழிவே
மாணப் பெரியசிவ வாழ்வா மனந்திளைக்கக்
காணலுற்றான் மோனக் கடவுட் குருமணியே.

477. அண்டரா லுங்காணா வந்தப் பரசிவத்திற்
றெண்டனேன் வாழ்வு துலங்கக்கண் டேக்கலுற்றேன்
விண்டொழிய வொண்ணா விதத்தால் அது நீயா
வுண்டெனச்சொல் லாதுசொல்லி யுள்ளொளியா வுள்
[ளானே.

478. ஈண்டவென துள்ளத் தியற்சிற் பரமாக
வான்டவனை யன்றியெனக் காருஞ் சதமல்லர் ;
பூண்டசிவ போகப் பொருள்வளஞ்சேர் வாழ்வுணர்விற்
காண்டலுற யான்றானாக் காட்டினான் கண்மணியே.

479. பொங்கார வாரப் புலக்கடலிற் புக்கழுந்தி
நுங்கா தெனையருட்கண் ணேக்கினேன் சிந்தையிலுஞ்
சிங்கா தனமாச் சிறக்கக் கொலுவிருந்து
மங்கா வனந்தசிவ மங்களம்பா லித்தானே.

480. ஊனவகப் பாழி லுழன்றழுங்குங் காலத்து
ஞானப் பிரானென நம்பனென் முற்றேன்றி
யானெனும்பாழ் மோகமற வெற்றித்தன் கண்ணேக்கால்
வானளவப் பொங்குசிவ மாண்பதத்திற் சேர்த்தானே.

481. துள்ளித் துடித்துச் சுழலுமனச் சூதனேன்
உள்ளத்தே மோன வுணர்வொளிசேர் வாழ்வுபெறத்
தெள்ளத் தெளிந்தசிவச் செம்பதந்தேற் றிக்கொடுத்தான்
எள்ளத் தகாதபே ரின்ப வருட்பரனே.

482. சிவத்திலே சித்தந் திளைத்தலே யான்ற
சுவத்தவாழ் வான சொரூபானு பூதி ;
அவித்தே புலங்களிற்சே ராசைகளைத் தன்பா
லுவத்தலுறு வித்தா னொளிபெறவாண் டானே.

## உக. அருட் செல்வம்

(வெண்பா)

483. தூண்டா மணிச்சுடராந் தோன்றல் சொரூபமா
வாண்டமெய்ஞ் ஞான வருள்வள்ளல்—வேண்டா
விழுச்செல்வ நல்கினன் வித்தகமெய்ஞ் ஞானம்
பழுத்தொளிர்பே ரின்பப் பதத்து.

(கொச்சகக் கலிப்பா)

484. தானான வென்னைத் தடுமாறிப் புன்மனத்தால்
யானென்னும் மோக விருட்பாழிற் கெட்டழிந்தேன்
ஊனா * முடலாதி யொட்டொழிய வாண்டபிரான்
வானான சுத்தவருள் வைப்பாகத் தேற்றினனே.

* உடலாதி-உடல், பொறி உள்ளம் உயிர் இருள்
(உபதேசவுந்தியார்-22)

485. வேதமுடி பான விழுப்பொருளா வாண்டவன்சற்
போதவருட் செல்வப் புதையல்காட் டித்தரலால்
ஏதமில்பே ரின்ப வியல்வாழ் வருளினன்
ஆதரமிக் கோங்க வடியே னகத்திலே.

486. தக்கவா றுண்ட சதாசிவசற் போதகுரு
சிக்கென வென் னுள்ளத்தே சேமித் திருந்தவருட்
பொக்கிஷமென் புத்திப் புலங்கொள்ளக் காட்டினன்
எய்க்கலுறு வித்தபா ழேக்கமயல் கெட்டதே.

487. வல்வினையா லேவருந்தி மாழ்கா திதயத்து
நல்வரவா நண்ணியமெய்ஞ் ஞானப் பிரானெனக்கு
நல்குரவா மோகமற்ற நல்வாழ்வெந் நாளுமுற
நல்கினன் சுத்தமெய்ஞ் ஞானவருட் செல்வமே.

488. மாண்டாலே யன்றி மயக்கவுணர் வார்க்குமகத்
தீண்டாத மோனப்பே ரின்பவருள் வாழ்வாக
ஆண்டா னளித்தா னடியேனுக் காசையற
வேண்டாமை யென்னும் விழுச்செல்வப் பொக்கிஷமே.

## உஉ. அருள் வாழ்வு

(குறள்)

489. பரவாழ்வு மோனப் பதமா வெனக்குத்
திரவாழ்வு தந்தான் சிவன்.

490. மருவுசுப ஞானவருள் வாழ்வளித்தான் சற்றும்
பிரிவருசற் போதப் பிரான்.

491. அருட்கா வலனை வம்மா னளித்தா
னருட்கே வலவாழ் வகத்து.

492. கொள்ளக் கொடுத்தான் குருரமணன் தன்னடியேற்
கள்ளக் குறையா வருள்.

(வெண்பா)

493. பார மனைத்தும் பரமனுந் தன்பதத்தில்
வாரமா வொப்படைத்து வாழவைத்தான்—கோரமுறு
நானெனும்பொய்ம் மோக நடலைவாழ் வோய்ந்துசிவ
ஞானமா மோனமுற நான்.

494. சிற்பரா சத்தித் தெளிவா மனுபூதித்
தற்பரமா வென்னைத் தலையளித்தே—சொற்பதத்துக்
கப்பாலாத் துன்று மகண்டவருட் சீர்மையெனக்
கிப்பாலாச் செய்தா னிறை.

495. தாழ்வையே வாழ்வாத் தருக்கித் தடுமாறும்
போழ்திலே முன்செய்த புண்ணியத்தால்—வாழ்
[வொளிரத்
தேற்றினன் சுத்தவருட் சிற்பதத்தா டென்னையாள்
போற்றிகளாம் போதப் புமான்.

496. பொய்வல்ல மாயைப் புணர்ப்பறவென் னுள்ளத்திற்
கைவல்ய மாகக் கலந்தபிரான்—செய்வித்தான்
மெய்வல் லபஞ்சேர் விழிப்பான சுத்தவருள்
வையத் துறுதிசேர் வாழ்வு.

497. களித்தேன் மனோமயமாங் கற்பனையைச் சுட்டி
யிளித்தே னிருளவத்தை யேன்றன்—னுளத்தே
யருளவத்தை யானசிற் றம்பலவாழ் வோங்கத்
தெருளவைத்தான் சிந்தா மணி.

498. அறிவு விளங்க வருளினன் பாத
வுறவா லுணர்வுள் ளொடுங்கிக்—குறைவிலா
மோனவருட் கைவல்ய முத்தியுளத் தூடுருவ
வானளவப் பெற்றதென் வாழ்வு.

499. இறுதியற்ற மோனப்பே ரெல்லையிலே நின்றோங்
குறுதியா லாண்டு வுடையான்—மறதியற்ற
கேவலசச் சித்தாக் கிளர்சொருப சாந்தவருள்
வாழ்வலரச் சேர்த்தான் மனத்து.

500. அற்றவருக் கற்ற வருட்பரனெங் கோரமணன்
முற்றவமில் லாவெனக்கு முன்னருளப்—பெற்ற
இதயத்து வாழ்க்கைபே ரின்பவூற் றந்த
நிதியத்தி லில்லை நிரப்பு.

(கொச்சகக் கலிப்பா)

501. எங்குமே தானா வியல்சொருப வீட்டுணர்வாற்
பொங்குமோ னானுபவப் புத்தமுத வாழ்வளித்தான்
அங்கமே நான்போ லகங்கரித்த வாணவப்பேய்
மங்கவே யென்னை மகோதயமா வாண்டவனே.

502. விவிதப்பொய்ம் மாயா விலாசக் கனவு
*டவிதாவிட் டேனுக் கருள்விளக்க மானன்
துவிதப் படாத சொரூபசச் சித்தா
அவிர்தற் பரனான அற்புதப்பெம் மானே.

*அவிதா – அபயக்குரல்

503. மிண்டுசேர் பாச வெறியனைத் தன்னடியை
யண்டியநா யேனை யருட்குடியா வாழ்வித்தான்
மண்டியவெம் பாச மயக்கமற்ற தெள்ளியரே
கண்டடையத் தக்கவருட் கைவல்ய வீட்டிலே.

504. உவலேசே ருன வுடல்வடிவே நானென்
றவலமா காம லருட்பரமாத் தேற்றிக்
கவலேதீர் வாழ்வெனக்குக் காட்டிக் கொடுத்தான்
தவலருமோ னை நந்தத் தற்பரனென் னுள்ளே.

505. தெளிவடையப் பெற்றேன் சிவானந்த மோன
வொளிவளரப் பெற்ற வுளத்தாற் களித்தேன்
இளிவரலற் றேங்கு மியற்பரவாழ் வுள்ளத்
தெளிதினெனக் கீந்தா னிறைரமணன் றனே.

506. அல்லா நந் தழிந்தேன் அவிச்சையிருட் பாழகத்தில்
வல்லாங் குருக்கொண்ட மாயவகப் பேயனேன்
பொல்லாங் கொழியவருட் பூரணவாழ் வுள்ளலர
நல்லாங்கு நோக்கினன் ஞானகுரு நாதனே.

### உ௩. ஆன்ம சாம்ராஜ்யம்

(வெண்பா)

507. பொக்க மயக்கமறப் போக்கி விளங்குசிவச்
சொக்கன் சொரூப சுயஞ்சோதி—தொக்கொளிர்மெய்ஞ்
ஞானரவி யாக நலங்கிளர்பே ரின்பவருள்
வானரசு சேர்த்தான் மனத்து.

குறிப்பு:—ஞானரவியாக மயக்கமறப் போக்கி எனக் கூட்டுக.

508. அரசுரிமை நல்கின னுண்டா னெனக்குப்
பரசொருப மோனப் பதத்தே—துரிசறுமெய்ஞ்
ஞான விலாச நலங்கிளர்சாந் தானுபவந்
தானவிர் சாம்ராச் சியம்.

509. மோனனு பூதியான் மூவுலகுந் தன்மயமாத்
தானே நடாத்துந் தனியரசில்—யானை
வென்னேத்தா னாக வியல்வித் தருளினன்
என்னத்த னை விறை.

510. ஆணைவழி யாணவங்கெட் டாண்டா னருட்பதத்தே
மாணவொமு காத மடப்பேதை—மாணவனே
வல்லனென வென்னை யகற்ற தகம்படிமைத்
தொல்லரசு சூட்டினன் மீட்டு.

511. தீனனு நின்று திகைத்தமடப் பேதையேற்
கூனவாழ் வான வுலோபமற—ஞான
நரசிங்க னைகுரு நாத னளித்தான்
அரசுங் கனமு மகத்து.

512. ஒருங்குலகு காணறிவுக் குட்படத்தன் பொற்ற
ளருங்கலமாத் தானணிவித் தாண்டான்—பொருங்கலக
வாதனையின் றன மனோமூல மாமணிச்சிங்
காதனத்தே யீந்தா னரசு.

513. பரசிவமா மோனவருட் பார்வையா லுள்ளத்
தரசுரிமை காட்டி யளித்தான்—பரதுரியக்
கண்ணன தன்னையன்றிக் காட்சிவே றற்றவருள்
விண்ணு விளங்குமெய் யன்.

குறிப்பு :— பரதுரியம் – அதீதமான துரியம்

### உச. நாய் சிவிகை ஏற்றுவித்தான்

(வெண்பா)

514. ஊங்கொருவ ரில்லா வுடையான் கடையேனைப்
பாங்கனு வேற்றுப் பவிசளித்தான்—பாங்குபெற
நாய்க்குப் பதமளித்த நாத னனைத்துயிர்க்குந்
தாய்க்கருணை யாளனுந் தான்.

(கொச்சகக் கலிப்பா)

515. பொன்றுத சுத்தவருட் பூரணமாப் பொங்குவித்து
நன்றுக நாயேனை நாய்சிவிகை யேற்றுவித்தான்
அன்றுலின் கீழிருந்து நால்வரை நன் காண்டுகொண்ட
வென்றுதை யான விறைரமணப் பெம்மானே.

## உ௫. அருட் பதம்

(குறள்)

516. குருபரனே காட்டிக் கொடுத்தா னெனக்குட்
பருவரல்சே ராமெய்ப் பதம்.

517. அருட்பதத்து வாழ்வா மனுபவ மெய்ஞ் ஞானப்
பருப்பதத்தி லுய்த்தான் பரன்.

518. அருட்பதவாழ் வொன்றே யனுபவவாழ் வாக
விருப்பதா வாண்டா னிறை.

(வெண்பா)

519. எந்தையா நல்கினு னெம்பிரா னென்னுளத்தில்
விந்தைசேர் ஞான வியோமபதம்—புந்திக்
கலக்கமா மோகவகங் காரமறப் பொங்கும்
இலக்கமா முண்மை யியல்.

520. ஆட்பட் டடைந்த வடியார் பிரமாதக்
கோட்பட் டழியாது கூரருளாற்—பாட்பட்ட
வென்னையுந்தன் பார்வைக் கிலக்கிமெஞ் ஞானபதத்
தென்னியல்சேர் வித்தா னிறை.

521. கொள்ளுவே ஞகக் கொடுத்தா னெனக்குத்தன்
விள்ள வொ ஞத விழுப்பதத்தை—உள்ளவது
கொள்ளவோ தள்ளவோ கூடாத தென்றுலும்
உள்ளுவோர்க் கேயஃ துரித்து.

(கொச்சகக் கலிப்பா)

522. எற்றென் றிரங்கற் கிடமின்றுப் பொங்குசுப
நற்றுங்க மானமெய்ஞ் ஞானவருட் செம்பதத்திற்
பற்றற்று வாழப் பணித்தான் பரயோகம்
முற்றவென் னுள்ளத்து மூண்ட சதோதயனே.

523. உண்டுண் டுறங்கியதே யன்றிமற் ருேர்பயனுங்
கண்டறியா மூடக் கழுந்தாங் கதியிலியைக்
கண்டிரங்கி மோனவருட் கண்ணேக்கா லுள்ளொளி
தண்டருங்கா ஞத வரும்பதங்காண் பித்தானே. [பெய்

524. சுத்தசிவத் தன்மைசேர் துங்கத் துரீயவியல்
வித்தகக்கண் ணோக்கால் விளைத்தா னருட்பரமா
மத்தமனக் கற்பனையை மாற்றியென் னுள்ளத்து
நித்தசித்த மாக நிகழ்சொருபப் பெம்மானே.

குறிப்பு :—நித்தமுத்தமாக என்றும் பாடம்.

525. மோகமனக் கற்பனையா முப்புடியிற் கட்டுண்டு
சோகமுற்று மாழ்கினேன் சொப்பனமாஞ் சாக்கிரத்திற்
கோகமெனத் தன்னுண்மை கூர்த்தறியும் மெய்ஞ்ஞான
யோகவுணர் வாற்பரமா வொண்பதத்திற் சேர்த்தானே.

## உசு. அருள் வெளி

(குறள்)

526. மோனவொளி சேர்ந்தபுன் மூரலாற் பேரின்ப
வானவெளி சேர்த்தான் மனத்து.

527. பார்ப்பான் பகவன் பரவெளிகாட் டிக்கொடுத்தான்
ஓர்ப்பா லடியேற் குளத்து.

(வெண்பா)

528. அற்பனு மென் பா லருட்சிற் பரவொளியே
முற்படக்காண் மெய்ப்புலனு மூட்டினுன்—பொற்பணி
சின்மாத் திரமாத் திகழ்கின்ற யாவுமொரு [போற்
தன்மாத் திரமாத் தக.

(கொச்சகக் கலிப்பா)

529. அன்னையினு மிக்கமெய் யன்புடைநல் லாண்டவன்மற்
றன்னியமொன் றற்ற வருட்சிற் பரவெளியாந்
தன்னியலென் னுள்ளத்துத் தற்பரமாத் தங்குவித்தான்
பின்னமில்சுத் தாத்துவிதப் பெட்பு விளங்கவே.

530. உருவெளித் தோற்றத்தை யுண்மையா நம்பிக்
கருவழிச் சென்று கலங்கலுற் றேற்குத்
திருவருட் செந்நெறி செப்படக் காட்டிப்
பரவெளி யான பதத்திலுய்த் தானே.

குறிப்பு :— செப்பட – செவ்விதாக

531. தேசமைந்த சுத்தத் திருவருட்செங் கண்ணொளியிற்
பாச மயக்கவகப் பாழ்வெளியே சிற்பரமெய்த்
தேசவெளி யாகத் திகழ வருளினன்
நீசவகங் கார நிசித்தனேற் காண்டவனே.

532. ஓங்கும் பரமார்த்த வுண்மை யுளத்திருக்கப்
பாங்கனே ஞொராது பாழ்ங்கற் பனையிலுழன்
றேங்கிமாழ் குங்கா லியற்சிற் பரவெளியா
வாங்கவ் வனைத்து மறக்கரந்தா ளுண்டவனே.

533. முற்றமுமுச் செம்பொருளா மோனனு பூதியால்
அற்றமில்பே ரின்ப வருள்வெளியாப் பொங்குவித்தான்
இற்றெனவோர் சற்று மிசைக்கவொணக் கைவல்யப்
பெற்றிசேர் சுத்தப் பிரம்ம சொரூபனே.

534. பிளவுபடச் சிச்சடத்தைப் பேதித்த நோக்கால்
ஒளிவெளியா வுள்ளத் துணர்த்தினு னென்னைத்
தெளிவுறநான் சுத்த சிவோகமெனத் தன்னே
டளேவுறுமே கான்மனா னுபவத் தாலே.

### உஎ. அகண்டாகார விருத்தி

(வெண்பா)

535. சதாமோன ஞான சமாதான வாழ்க்கை
இதாமோதம் பொங்க விருவென்—றதாமோ
ரனுபூதி மிக்க வகண்ட விருத்தி
மனவாதை மங்கவளித் தான்.

குறிப்பு :— சமாதானம் – சித்த சமாதானம்; இதா – இந்தா; மோதம் - மகிழ்ச்சி; அவ்வாறின்றி 'இது ஆ மோதம்' எனப் பிரிக்கவு மாம். ஆமோதம் எனினும் மகிழ்ச்சியே; இரு – அதை யநுபவித்துக்கொண்டு சும்மா விரு; என்று – என்று வாழ்த்தி; அது ஆம் ஓர் அநுபூதி—அதுவே தானுன அனுபவம், அகண்ட விருத்தி–அகண்டாகார விருத்தி பிரம்மாகார விருத்தி, மனவாதை – மனக் கவலை.

536. மோனானு பூதியால் மூதலித்தா னென்னகத்தில்
யானகத் தானே யியலுமுண்மை—வானா
விளங்குமகண் டான்ம விருத்தியால் மோகக்
களங்கமற்ற தென்றன் கருத்து.

## உஅ. நிஷ்டை

(வெண்பா)

537. நலிந்துநா னென்னு மகந்தையான் ஞாலத்
தலைந்தைம் புலமே யவாவிக்—குலைந்தொழியா
திட்டானு சாரமகத் தேற்பித்தான் ஞானன்ம
நிட்டானு பூதி நிலை.

538. உண்மை யுரைத்தானவ் வுண்மையிலே நிற்கமனத்
திண்மையற்ற வென்னைச் சிவத்திலே—வண்மைபெற
வூன்றினா னுள்ளத் துபதேச வுண்மைநலந்
தோன்ற வனுபவமாத் தொக்கு.

539. ஊனுடலே நானெனும்பொய் யூத்தையுணர் வானவுயிர்
தானமல ஞான சமாதியுற—வானளவச்
சேணோங் கிமயச் சிமயமா மோனத்தே
மாணோங்க வென்னைவைத் தான்.

540. படரு நிழல்வடிவப் பார்வையகன் றுள்ளம்
படரா நிலைப்பொருளைப் பற்றிச்—சுடர்சொருப
நிட்டானு பூதியுற நீசமனச் சுட்டுணர்வைச்
சுட்டான் விபூதியாத் தொக்கு.

541. சிவஞான வாழ்க்கையுறச் சித்தத்தே தெய்வத்
தவஞான மோனவொளி தந்தே அவஞாலப்
பட்டியகப் பேயைப் பதம்பெறத்தன் சிற்பதத்து
நிட்டையிலே நேர்படவுய்த் தான்.

542. நீடும் பதவொளியே நிட்டையா வென்னகத்திற்
கூடும் படியாக் குலவினான்—மூடு
மகந்தைமுனைப் பானபே யாட்டமற வென்னை
யுகந்தடிமை கொண்டவுடை யான்.

543. பற்றற் றொளிர்சொருபப் பார்வையா லென்னையருட்
கொற்றக் குடைநிழலிற் கூட்டியே—நிற்றற்
குரியமெய்ஞ் ஞான வுபசாந்த நிஷ்டை
அரிய தெளிதிலளித் தான்.

(கொச்சகக் கலிப்பா)

544. வல்லாங் குறைக்க மனந்தன்மூ லப்பதத்து
நல்லாங் கெனக்குமெய்ஞ் ஞானநிட்டை நல்கினன்
பொல்லாதனென் றென்னைப் புறக்கணியா துள்ளம்புக்
கெல்லார் சொரூபமா வேற்றெனை நன் காண்டவனே.

545. அறிவொளியா முண்மை யகத்தெளிவால் ஆன்ற
நிறைவெளியே வாழ்வான நிஷ்டானு பூதி
பெறவளித்தான் சுத்தப் பிரம்ம சொரூபன்
சிறையுளகப் பட்டமுங்குந் தீனனே னுக்கே.

546. அற்பத் தியேனு மடியேற்கு நானுதித்த
வுற்பத்தி யெங்கென் றுசாவியுளத் தூன்றலுறு
சற்பத்தி யான சதாசார ஞானநிட்டை
கற்பித் தருளினன் கைவல்யச் சிற்பதத்தே.

குறிப்பு :— உண்மையான வுள்ளம் கைவல்யச் சிற்பதமே என்றுணரத் தக்கதாம்.

### உக. கரை யேற்றினன்

(வெண்பா)

547. கலியின் கொடுமையில்யான் காலாழ்ந்து பாழாய்த்
தொலைவுறு தாண்டவருட் சோதி—மலியுங்
கடவுட் பரதெய்வக் காட்சியான் மோகக்
கடல்கடக்க வுய்த்தான் கரைக்கு.

(கொச்சகக் கலிப்பா)

548. ஒன்றான சச்சித்தாந் தன்னை மறந்தொழிந்து
சென்றேன் புலவுலகிற் சித்தக் கலக்கத்தால் ;
குன்றாத மோனவருட் கோமானென் பாலிரங்கி
நன்றான மோனமெய்ஞ் ஞானத்தால் மீட்டானே.

குறிப்பு :— கலக்கத்தாற் சென்றேன் எனக் கூட்டுக.

549. கடன்பட்டே னுகக் கலங்கிய வென்னைக்
கடன்சே ரகந்தைக் கலக்கமில்கை வல்யத்
திடன்சே ரனுபவத்தாற் றீர விடுவித்
திடன்சே ரியற்பரமாக் கண்டா னிறையே.

குறிப்பு :— கடன் - பிதிரர் முதலியோர்க்குச் செலுத்தப்பட வேண்டும் வைதிகக் கடன்; திடன் - திடஞானம்; தீர விடுவித்தல் - பல்வகைப் பட்ட எல்லாக் கடன்களிலிருந்தும் முற்ற விடுவித்தல்; இடன் சேரியற்பரம் - இயல்பாகவே அருள் வெளியாக வான்ற பரம்.

## ௬0. ஸஹஜாத்ம ஸ்திதி

(குறள்)

550. எண்ணும லெண்ணு மியற்சிந் தனையளித்தான்
அண்ணு மலையாண் டவன்.

குறிப்பு :— இயற்சிந்தனை - இயல்பான தியானம்.

## ௬௧. அத்துவிதம்

(வெண்பா)

551. குலவுசற் போதக் குறியா விரண்டற்
றிலகுமோ ருண்மையெனக் கீந்தான்—உலகக்
கதையின் முடிவொன்று காணவே ஜீவ
மதியொன்றுந் தன்சின் மயத்து.

(கொச்சகக் கலிப்பா)

552. உள்ளத் தொடுக்கி யுடற்பா ழகந்தையறத்
தெள்ளத் தெளிந்த சிவாத்துவிதஞ் சேர்வித்தான்
உள்ளத் துணர்வுருவா வோங்கு சொரூபவருள்
வெள்ளப் பிராணுன வித்தகமெய்த் தத்துவனே.

## ௬௨. ஸோஹம்

(கொச்சகக் கலிப்பா)

553. இத்தனுவே நானென் றிழுக்கலுற்ற பேயேனுக்
கத்தனையே நாஞ வனுபவிக்கத் தேற்றினுன்
வித்தகஞ வென்முன் வெளிவந் ததுநீயென்
றத்தகவே யோதி யடியேனை யாண்டவனே.

## ௩௩. ஆன்மாநுபூதி

(வெண்பா)

554. வாழ்வுதாழ் வெல்லா மனைமயக் கற்பனையாப்
பாழ்படக்காண் மோனப் பதத்திலே—கேழ்கிளர்ஞா
னன்மானு பூதி யளித்தா னடியேனுக்
கான்ம சொரூப னவன்.

555. சரண கதியாகச் சார்ந்தே னுயிருக்
கரணக வாண்டா னளித்தான்—மரணப்
பிரமாத நீங்கப் பிறப்பிறப்பற் றோங்கும்
பரமானு பூதிப் பதம்.

556. திருத்தமா வென்னகத்துத் தேற்றினான் முற்றப்
பொருத்தமா வுள்ளவனு பூதி—விருத்தமற
வேதாக மாதி விவிதமத சாத்திரங்கட்
கோர்தா ரகமா முணர்வு.

557. கருத்திலே பாசக் கலக்கஞ்சே ராத
திருத்திசேர் மோனத் தெளிவாம் பதத்தில்
அருத்தினன் சுத்தஞா னன்மானு பூதி
திருத்தன முண்மைத் திருத்தக்க தேவே.

558. அத்தனையுந் தானு மவனென்ற வுண்மையெனக்
கத்தகவே யுள்ளத் தனுபவமாத் தேற்றினன்
சித்தமல மான செருக்கறவே செற்றகத்திற்
சுத்தசிவ மாகத் துலங்கலுற்ற சற்குருவே.

559. மண்ணிற் பிறந்து மறித்துமறித் தந்தவெறு
மண்ணுக்கே யாளா மடிந்தொழிவுற் றேனுக்கு
வண்ணப் பரசொருப வாழ்வான சுத்தவருள்
விண்ணிற் பொலிவுறுமென் மெய்யியல்சேர் வித்தானே.
குறிப்பு :— மறித்து மறித்து – மீண்டு மீண்டு.

## ௩௪. ஏகத்துவம்

(குறள்)

560. யானு ரெனக்கேட் டிதயத் தெனைச்செலுத்தித்
தானு மொருமைதெரித் தான்.

561. ஒருமையென் னுள்ளத் துணர்த்தினன் உண்மைப்
பெருமைசே ரின்பப் பிரான்.

(வெண்பா)

562. ஒன்றுந் தெரியா துழன்றமட வீணனுக்கு
வென்றிசேர் மெய்ஞ்ஞான வித்தகத்தோன்—என்றும்
எலாமா விருந்தொளிரவ் வேக சொரூபக்
குலாமாண் பளித்தான் குறித்து.

563. நடமாடக் கோயிலா நண்ணியென்னா டின்பக்
கடலான கண்ணார் கழலான்—உடனாக
வேற்றுமை காணா விதத்தா லொருமையுறத்
தேற்றினா னுண்மைத் திறம்.

௩௫. ஞானம்

(குறள்)

564. மறதியில் லாதுளத்தில் வைகுறுமெய்ஞ் ஞான
வுறுதியளித் தானுடை யான்.

565. யானதுவா வுள்ளத் தியைந்தஞா னனுபவப்
போனகமார் வித்தான் *புதன்.

* புதன்–ஞானாசிரியன்.

566. நானேநா னொளிர்மெய்ஞ் ஞானந் துலக்கினன்
தானேதா னந்தற் பரன்.

567. ஆற்றக் கடையேனுக் கான்மஞா னனுபவப்
பேற்றுப் பெருமிதஞ்செய் தான்.

568. எதுவே யறிந்தடைய வேண்டுமோ வென்னால்
அதுவேநா னவவிர்வித் தான்.

569. அறிவே யுருவா வடியேனை யாண்டான்
அறிவுருவே யானவாண் டான்.

570. அறிவன்றி யில்லை யகிலமென் றுண்டா
னறிவிற் றெளியவைத் தான்.

571. உண்மையுணர் வூட்டினு னொள்ளியோன் சுத்தவருள்
வண்மையா லென்புன் மனத்து.

572. கயக்க மனப்புன் கலக்கமறு சாந்தி
யியற்கண் ணளித்தா னிறை.

573. வெற்றறிவா வென்னை விளக்கினுன் சுத்தவருட்
பெற்றிசே ருண்மைப் பிரான்.

(வெண்பா)

574. அறிவாக வுள்ள வநாதிமல முத்தன்
குறிகுணங்க ளற்றவருட் கோமான்—பிறிவறவென்
னுள்ளே சொரூப வொளியா வுடனுறைந்தே
தெள்ளிதா வுண்மைதெரித் தான்.

575. அறிவுண்மை யாதோ வறிவுறுப்பா யென்றேன்
அறிவறியா மூட வடியேன்—செறிவா
மறிவிலே யென்னை யறிவாகச் செற்ருன்
அறிவுருவே யானவம் மான்.

576. ஞானப் பரஞ்சுடரா நண்ணுகுரு நாதனெனக்
கூனமற வுள்ளத் துதவினுன்— நானற்
ருெழிந்தசுத் தாத்துவித வுண்மைவாழ் வாக
அழுந்துபர மோன வறிவு.

577. சற்போத மான சதாசிவமாந் தற்பரமா
வெப்போது மென்னு டியல்வுற்றே—தப்பாது
நானதுவே யானமெய்ஞ் ஞான நிலை நல்கினுன்
மோனகுரு வான முனி.

578. நம்புந் தரமன்று நாயேற்கு மெய்ஞ்ஞான
சம்பந்த முண்டெனநான் சாற்றிலோ—வெம்பந்த
மான விருட்கா ரகற்றிரம ணரியன்மெய்ஞ்
ஞானவொளி நல்கினுன் மெய்.

579. சன்னிதியா வெங்குந் தழைத்தொளிருந் தம்பிரான்
நன்னிதியா வென்னுளத்து நண்ணியே—என்னதியான்
என்பவற்றின் மெய்ப்பொருளா வென்னுயிருக் கின்னு
தன்பதத்தின் போதமளித் தான். [யிராத்

580. ஒன்றான வுண்மையே யொக்க வுரைப்பதன்றி
யென்று மிரண்டுக் கிடங்கொடான்—ஒன்றுவித்தான்
பேத விகற்பம் பிளக்க விளக்கமாம்
போத சொரூபப் பொருள்.

581. கலக்கமிலா வுண்மைக் கடவுளான் சுத்தத்
துலக்கமா மோன சொரூபன்—புலக்கலக்கம்
போயகலத் தன்சொருப போதந் துலக்கினன்
மாயிகனு வென்றன் மனத்து.

582. சிற்பரமா வோங்கு சிவரமணன் பாலித்தான்
தற்பரமா முண்மை தலைப்படவே—கற்பனையாம்
பேதத்தோற் றந்தீர் பிரம்ம சொரூபசற்
போதத்தேற் றத்தின் புலம்.

583. எப்போது மொன்று விருந்தொளிருந் தன்சொருப
சற்போத மாகத் தழைத்தொளிரத்—தப்பாத
தன்கருணை பாலித்தான் சஞ்சலந்தீ ரின்பமயப்
பொங்கருண ஜோதிப் புமான்.

584. உள்ளமே ஞான வொளியாக நோக்கினன்
கள்ளமா மோகங் கரக்கவே—வெள்ளமே
போலவுப சாந்தசுகம் பொங்கமனக் கேதமறச்
சீலவுப கார சிவன்.

585. யானென்னுஞ் சொல்லுக் கிலக்கிதமாய் ஞானமய
வானென்ன முற்ற வளைந்துகொண்டான்—ஆன்ம
வறிவிலா நாயேற் கறிவளித்துச் சற்றும்
பிறிவிலா தாண்ட பிரான்.

586. கரும்பின் சுவையாய்க் கருதுறுமெய் யன்பர்
விரும்புமனு பூதி விளைப்போன்—அரும்புபோற்
கூம்பியவென் னுள்ளங் கொளையவிழ்ந்து வாலறிவே
யாம்பரவிண் ணகக்கண் டான்.

587. மொழிந்தா னுபதேசம் மோனமாய் முற்றுங்
கழிந்தொழியக் கற்பனு பேதம்—பிழிந்து
வடித்தருளி ஞான மறைப்பொருளென் னுள்ளத்
தடத்தே யனுபவமாத் தான்.

588. புத்தமுத ஞானவருட் பொங்கல் அடியனேன்
புத்திக் குணவாப் புகட்டியே—மத்தமன
வேட்கைப் புலத்தில் விராகமுண் டாக்கினன்
பீட்கொள் கருணைப் பிரான்.

589. உம்பரா னன வொருத்த னடியோங்கட்
கிம்பரா னக வெழுந்தருளிச்—செம்பரமாந்
தெய்வவொளி யாலே சிவோகஞா னனுபவச்
சைவவொளி தான்பரப்பி னன்.

590. ஈனகுணத் தாலிழிந்த வேடனு மூடனைமெய்ஞ்
ஞானகுண வானக நல்கினன்—மோனகுண
மேருவாம் பொன்மலையை மேவியதாற் பொன்மயமென்
ஆருயிர்தா னயிற் றறி.

591. விண்ணுள னன வியன்பெருமான் சிற்றுயிரைக்
கண்ணுள னகக் கலந்தருளி—எண்ணே
டெழுத்தறியா வென்னு டெளிதாக ஞானம்
பழுத்தலுறக் கண்டான் பதத்து.

592. உபயவே தாந்த முருக்கொண்ட செம்மல்
விபவசிற் சத்தி விலாசன்—அபயஞ்சே
ரத்துவிதச் செம்பதஞா னனுபவ மோனநிலை
உய்த்தடைவித் தானென் னுளத்து.

593. கற்பிதமே மெய்யாக் கருதலன்றி மெய்ஞ்ஞானப்
பொற்பதமோர் காலுநான் புந்திசெய்யேன்—சொற்பதத்
காணவொணு வுண்மைக் கடவுட் பிரான்றேன்றி [தாற்
நாணநான் ஞானநல்கி னன்.

594. பொய்த்தொழிய மோகப் புலவேட்கை யானபசி
சுத்தமெய்ஞ்ஞா னனுபவச் சோறளித்தான்—அத்தமியாப்
பூரணசற் போதப் பொருளாம் பரப்பிரம்மத்
தாரகமா வாண்டவன் றன்.

595. உய்வதா யீடேற வென்னுளத்தே தன்சொருப
தெய்விகசற் போதந் திகழ்வித்தான்—செய்வகையொன்
றேராது வாடி யுயங்கியவென் மோகமறச்
சீரார் சிவதே சிகன்.

596. பொருட்போத வைப்படியேன் புந்தியுள்ளே காட்டி
யருட்பார மாக வளித்தான்—மருட்பா
முருவெளித்தோற் றத்தி லுழன்றடியே னேங்கிப்
பருவரல்கொள் ளாமற் பரிந்து.

597. வெள்ளவருள் வாழ்வு விளங்கினு லன்றியுயிர்க்
குள்ளத் தமைதி யுருமையால்—மெள்ளவென்
புத்தியைத் தன்பாற் பொருத்திஞா னுனுபவத்
தித்திப் பளித்தான் சிவன்.

598. புடியான பேதமனப் பொல்லாப் புரட்டுக்
கிடியேறு போன்ற விறைவன்—அடியேற்கு
வித்தகமெய்ஞ் ஞான விளக்கமா நல்கினுன்
அத்தகநிற் கின்ற வறிவு.

599. சிற்பரவாழ் வான சிவானந்த மோனவியற்
புக்கிலடைந் தார்வமெழப் பொங்கவே—மிக்க
வுரமாக வுள்ளத் துதவினு னுண்டான்
பரஞான யோகப் பயன்.

600. சமதத் துவானுபவஞ் சார வளித்தான்
அமிர்தத் துவப்பொருளா வாண்டான்—மமதைக்
கருத்தோ டளைந்தவகங் காரமயல் பொன்றத்
திருத்தினுன் சேமப் பதத்து.

601. அறிவே திருமேனி யானவென் னுண்டா
னறிவே திருக்கோயி லானுன்—அறிவூ
டறிவையே யன்றி யயலொன் றறியா
துறைவதே போலு முணர்வு.

(கொச்சகக் கலிப்பா)

602. பரந்த வருட்சிற் பரவெளியாந் தன்னைக்
கரந்துமோ கத்தாற் கலங்கினா னென்று
* நிரந்துசடவுடலா நீடுழன்றே னுய்யச்
சுரந்தான் சொரூப சுபோத சுதாவே.

* நிரந்து – குறைந்து

603. பண்டே பரமாப் பயின்றவென் னுண்மையைத்
தொண்டனேன் சோர்ந்தொழிந்து சோகாத்தல் கண்
மண்டு சொரூபவருள் வாலறிவா நோக்கினன் [டிரங்கி
அண்டரா லுந்தேர்ந் தறியொணு வாண்டவனே.

604. தொன்ருன சொந்த சொரூபமே யாகவுளத்
தொன்ருன வுண்மையைநா னோராது மாழ்குங்காற்
பொன்ருத சுத்தவருட் பூரணமா வென்னுருவை
நன்ரு வுணர்வித்தான் ஞானகுரு நாதனே.

605. பிறங்குசிவ ஞானப் பிழம்பான பெம்மான்
உறங்கி வழிந்தவோ ரூத்தையே னுள்ளம்
மறங்கு மகந்தை மயக்கமற நோக்கி
நிறங்கிளர்மெய்ஞ் ஞானவொளி நீள்விசும்பா னனே.

606. பல்கு மனக்கற் பனசுகபோ கங்கழன்று
மல்குபே ரின்ப மலர்ப்பதத்து நான்மகிழ
நல்கினன் சுத்தமெய்ஞ் ஞானபண் டாரமகத்
தொல்வினே னுக்குடையா னுள்ள மிரங்கியே.

607. பொல்லாக் கலக்கப் புணர்ப்பறவே போக்கலால்
எல்லார்க்கு நல்லான் எனக்கு மிகநல்லான்
தொல்லாக்க மான சொரூபஞா னனுபவம்
கல்லேற் கினிதளித்தான் கற்பகச்சீ ராளனே.

608. யாதா யினுமடியேற் கீவாயென் றேனுக்குப்
பேதொன் றகந்தையறப் பேர்ந்தொழியக் கண்ணேக்கி
யாதொன் றெலாமா வியல்வதோ வப்பரமே
நீதா னெனவளித்தான் ஞேயானு பூதியே.

குறிப்பு :—"இரப்பவ ரென்பெறினுங் கொள்வர்; கொடுப்பவர் தாமறிவர் தங்கொடையின் சீர்" என்பது இங்கு நினைவு கூர்தற்பாலது.

609. ஒன்ருன வுண்மை யுணர்வாலே யன்றிமற்
றென்ருலும் மோன நிலை யுள்ளத் தியையாதென்
றென்ருதை யான விறைவனெனக் கெய்துவித்தான்
பொன்ருத சுத்தவருட் போதானு பூதியே.

610. சற்றேனு முண்மைத் தரமிலா நாயினேன்
எற்றேயென் றென்னேயே யானிழித்து மாழ்காது
கற்றோரா தன்னடியர் காதலிக்கத் தானெனக்கோர்
நற்றான நல்கினன் ஞானகுரு நாதனே.

611. சிவானுபவ மோனந் தெளியவென் னுள்ளத்
தவாவறுமெய்ஞ் ஞான வருட்சீ ரளித்தான்
சுவானுபவ மாகத் துலங்கு சொரூப
திவாகரனு வுள்ளவியற் சிற்பரனுந் தானே.

612. கன்றலுற்ற மோகக் கலாரசிகர் கூட்டத்தில்
சென்றுநான் சேற்றி லழுந்தாது தேறறினன்,
வென்றிசேர் சுத்தவருள் வித்தகனென் னுள்ளுணர்வூ
டொன்று வொளிர்சொருப வுண்மைஞா னக்கலேயே.

613. ஈனக் கடைநாயென் றெள்ளா தென்னையாண்ட
ஞானப் பிரானென்னை நாளும் பெரிதுவந்து
வானப் பரசொரூப வாழ்வா வழங்கியது
நானற் றொளிர்சொருப ஞானானு பூதியே.

614. அப்பாற்கப் பாலா மதீதன் அடியோமுக்
கிப்பாற்கிப் பாலா வெழுந்தருளி, உள்ளத்தைத்
துப்பான சொந்த சொரூபஞா னானுபவ
வைப்பாக மாற்றி வழங்கினு னின்னருளே.

615. ஏங்கி விடயமண்டின் றெய்த்தேனைப் பாழினின்று
வாங்கிமலர்ச் செம்பதத்தில் வைத்தருளிக் கற்பனையற்
றோங்கும் பரமார்த்த வுண்மைஞா னானுபவத்
தீங்கனியார் வித்தான் சிவசொருபக் கேவலனே.

616. தன்னியல் பான சதாசிவ வுண்மையைமற்
றன்னியம் போல வலமந்தே னுள்ளுணர்வில்
உன்னிய லென்னியல் என்னிய லுன்னியலென்
றன்னபர மார்த்தஞா னானுபவஞ் சேர்த்தானே.

617 பன்றியே போலமலப் பாழா முடலுலகத்
தென்று மிடும்பைக் கிலக்கா வுழன்றேனைத்
துன்றுமெய்ஞ் ஞான சொரூபப் பரசிவத்தா
டொன்றியே வாழவுணர் வூட்டினன்ஞா * னட்டியனே.

* ஆட்டியன் — செல்வன்.

618. ஈனமா வுற்றகுற்ற மெல்லா மிகப்பமெய்ஞ்
ஞானமே மிக்கதொரு நற்குணமா நல்கினன்,
ஊனவகங் காரப்பா மூத்தையுணர் வின்றேல்மற்
றேனேயகுற் றங்க ளெழாத்திறத்தா லுள்ளத்தே.

619. அவக்கேட னகப்பா ழைம்புலமே தேர்ந்து
பவக்கா ரிருளிற் படிந்து கிடந்தேன்;
சிவக்கே வலஞான ந் தேற்றிக் கொடுத்தான்
சிவக்கே வலமாத் திகழ்சிற் பரனே.

620. இத்தனுவே நானென் றெழுந்த வகந்தைமதி
பொய்த்தொழியப் பொங்குசிவ போதவுணர் வூட்டினன்
சுத்தப் பரசிவமாத் துன்றுங் குருரமண
முத்தன் றனேயடைந்த மூர்க்க வடியேற்கே.

## ௩௬. முக்தி

(குறள்)

621. அதீதமாத் துன்று மனுதிமுத் திப்பே
றிதாவெனத்தேர் வித்தா னிறை.

622. மோனப் பரசொருப முத்தித் துலக்கமே
ஞானமா நண்ணிற் றகத்து.

(வெண்பா)

623. உத்தியோ கம்பிறி தொன்றுமின்றி யாண்டவருட்
பத்தியே நானென்றும் பண்ணலுற—முத்தியுறு
புத்தியோ கத்திற் புணர்த்தியே தன்சொருப
சித்தியடை வித்தான் சிவன்.

624. இலேயாகத் தன்னின்மற் றேதுமற நோக்கிக்
குலேயா திருத்தல் குணமென்—றுலேயாத
மோனவருட் கேவலமா முத்தி சொரூபநிலே
நானற் றெளிர நல்கி னன்.

625. அற்பனு மென்னகத்தே யாண்டா னருளியசச்
சிற்பரான் மானுபவ சித்தியால்—கற்பனு
புத்தி விகற்பமறப் பொங்குசிவக் கேவலமே
முத்தியா மோன முதல்.

626. மனக்கவலை தீர வழங்கினன் சற்றுந்
தனக்குவமை யற்ற தயாளு—எனக்குத்
தருமார்த்த காம சமத்தமுமாப் பொங்கும்
பரமார்த்த வுண்மைப் பதம்.

627. இறைவ னடியே னிதயத்திற் புக்கு
மறவிப் பிரமாதம் மாற்றி—அறிவா
வொளிர்சொருப மோன வுணர்ச்சிகூர் சாந்தித்
தெளிவியல்பா முத்திசேர்த் தான்.

628. மோன வருட்பதமே முத்திநிலை யென்றுமகிழ்ந்
தீனவருக் குண்மைசொன்ன வென்னிறைவன்—வான வருக்
காரவொண்ணு மோன வருட்பரமா முத்தியொளி
யூரவெனக் குய்த்தா னுளத்து.

629. மோனகுரு வள்ளலா மூர்த்தி யருளினன்
தானிகரில் லாத தனித்தலைமை—ஞான
துரந்தரரா யாங்கள் சுகானுபவம் பொங்க
நிரந்தரமா முத்தி நிலை.

630. கருத்தினு லொன்றுங் கருதாது சும்மா
விருத்தலே வுண்மை யியல்பாத்—தெரித்தபடி
மோனமா மந்தமுழு முத்திப் பதத்தைநான்
ஞானமா நண்ணவும்வைத் தான்.

631. வித்தகமா மோனம் விளங்கு சொரூபவருட்
புத்தகமே சாதனைக்குப் போதியதாய்—முத்தியுணர்
வூட்டி மனத்தை யுளத்தி லொடுக்கிமிகக்
காட்டினு னேர்சற் கதி.

632. சிவமாக வென்மெய் சிறந்தொளிரத் தானேர்
நவமான செஞ்சுடரா நண்ணித்—தவஞான
மோனவியல் வாழ்வொளிகூர் முத்தசொரூ பானுபவம்
யானடையச் சேர்த்தா னினிது.

(கொச்சகக் கலிப்பா)

633. சுத்தப் பரசிவமாத் துன்று சொரூபவருள்
வித்தைக் கதிபதியா மேவுங் குருரமணன்
சித்தக் கலக்கமறத் தேற்றினு னுள்ளத்து
நித்தமுத்தி யாகநிகழ் ஞேய சொரூபமே.

634. ஊனமற்ற வுண்மையா வுள்ளத் தொளிர்சொருப
மோனம் பரமார்த்த முத்தியாத் துன்றுவித்தான்
ஈனனே னுள்ளத் தியற்சிற் பரவெளிவாழ்
வானமோ னுனுபவ மார்வித்த வம்மானே.

635. போத சொரூபமாப் பொங்கு பரஞ்சோதி
பாதவொளி யாலகத்திற் பாசவிருள் பாற்றலால்,
ஏதமில்பே ரின்ப வியற்சிற் பரானுபவ
மோதவுணர் வுள்ளமா முத்தியில்வாழ் வித்தானே.

636. தருமார்த்த காமந் தலைவணங்கும் மோனப்
பரமார்த்த வுண்மைப் பதவாழ் வளித்தான்
குருமூர்த்தி யானவருட் கோமான் அறிவில்
மரமாத் திரிந்தமட மத்தனே னுக்கே.

637. ஞான சொரூபமே நாட்டமாப் பொங்குசுப
மோன வுணர்வான முத்திப்பே ரின்பநிலை
யானெனது மாள விருப்புணர்வு மாத்திரமாத்
தானெனைநன் காண்ட தயாபரன்பா லித்ததே.

## ௬௭. சாந்தி

(குறள்)

638. திரமா வடியேனைச் சேர்த்தா னிறைவன்
பரமான சாந்திப் பதத்து.

(வெண்பா)

639. பரமார்த்த வுண்மைப் பதமான சாந்தி
யுரமாத் தெளித்தா னுளத்தே—தருமார்த்த
காமங்க ளெல்லாங் கருத்தினின்று கற்பனையாப்
போய்மங்க மூத்திப் புலத்து.

640. தேனுந்து சாந்தி திளைப்பவென் னுள்ளத்தே
யானந்த மூர்த்தி யருளினன்—மோனந்
தழைத்தகுரு நாதன் சதாசிவமா வுள்ளம்
பழுத்த வருட்சிற் பரன்.

641. ஓர்வருத்த மின்றி யுபசாந்தி சேரவுளத்
தாவரித்தா னென்னை யருள்வெளியாய்—ஜீவரைத்தன்
சேமப் பதநிலையிற் சேர்த்தருளச் சேர்ந்தபரந்
தாமப் பெருமான் ஜகத்து.

642. இகத்தே பரஞ்சேர்ந் திரண்டுமொன் றாக
வகத்தே யருளினு ணுண்டான்—மகத்துவமிக்
கான்ற சொரூபஞா னனுபவ சாந்தியில்வே
ரூன்ற லுறுதி யுயிர்க்கு.

643. செய்வதொன் று மற்றவருட் சித்தோப சாந்தவொளி
யுய்வகையா லுள்ளத் துதவினன்—தெய்வமாத்
தன்னடியைப் பேணுந் ததீயர்க் கபரிமித
நன்னயஞ்செய் நல்ல சிவன்.

644. உஞ்சலெனப் பல்கதியூ டோயா துழன்றவுயிர்ச்
சஞ்சலந்தீர் சாந்தபதச் சால்பளித்தான்—அஞ்சியடை
தஞ்சனே னெஞ்சிற் சதாசிவமாந் தற்பதமாக்
கொஞ்சிக் குலாவுங் குரு.

645. மனோதீத மானவருள் வாழ்க்கை மனத்தா
டெனுதுநா னற்ற வியல்பே—எனுதுநா
னென்னுமனச் சிந்தை யெழாதமைந்த சாந்தவுணர்
வென்னகத்தி லீந்தா னிறை.

646. உய்த்துணரும் புத்திக் குறுதியா வுள்ளத்து
மொய்த்தொளிரும் மோன முழுமுதலைப்—புத்தமுத
நீர்மைசேர் சாந்தி நிறைவா லுபாசிக்கும்
கூர்மை யளித்தான் குரு.

(கொச்சகக் கலிப்பா)

647. நீக்கமற்ற வுண்மை நிலையான சொச்சொருப
நோக்கமென் னுள்ளத்து நூக்கலால், வாக்குமனத்
தாக்கற்ற சாந்தி சதாமுத்தி யாவொளிர்மெய்
யாக்கமென் ஞண்டா னடியேற் கருளியதே.

648. கல்லா மயக்கக் கவலறத்தீர் சாந்தியொளி
நல்லான் குருரமண நாத னுவந்தளித்தான்;
எல்லா நலனுமொருங் கெய்திலன்ன சாந்தியுயிர்க்
கில்லா தொழியின்மற் றெந்நலத்தா லென்பயனே.

649. கற்பனைதீர் சுத்தவருட் கைவல் லியவுருவா
வுற்பத்தி நாசமற வுள்ளத் தொளிர்சொருபன்
சற்பத்தி யோகத் தவமான சாந்தியுணர்
வற்பத் தியேனுக் கருளா லளித்தானே.

650. முயற்சிசேர் மோக முனைப்பற் றொழிய
இயற்சிற் பரவெளியே யென்னுருவா வுள்ளத்
தயர்ச்சியறப் பொங்குமோ னநுபவ சாந்தி
நயச்சிறப்பு நல்கினன் ஞானப் பிரானே.

651. பண்டுபோ லென்றும் பாரற்பரமா வுள்ளவிறை
தொண்டனுக்கோர் வாழ்வு துலங்கக்காட் டிக்கொடுத்
கண்டுகொண்ட வாழ்வு கடவுளியல் வாழ்வாக [தான்;
வுண்டு தினைத்தே னுபசாந்த போகமே.

652. துன்பமொரு சற்றுந் தொடராத் துரியமாந்
தன்பதத்து நிற்கலுறு சற்பத்தி யானமெய்
யன்பிலா தேனுக் கருளினு ஞண்டவன்பே
ரின்பவருள் வாழ்வா வியல்சொருப சாந்தியே.

## ௯அ. பேரின்பம்

(வெண்பா)

653. ஆண்டவனே பொல்லா வகந்தையைச்செற் றென்னுயி
ரீண்டுவதா வின்ப மினிதளித்தான்—பூண்டவருட் [ருக்
சக்கர வர்த்தி தருமதுரை யென்னுளத்தோ
* ரக்கரமாத் தானொளிரம் மான்.

*அக்கரம் (அக்ஷரம்) — அழிவற்றது, சுத்தான்ம சொரூப மான மெய்ப்பொருள்.

654. ஒழுக்கமெனக் குண்மை யுணர்வொளியே யாகப்
பழக்கமளித் தாண்ட பகவன் இழுக்கலுரு
தன்புமயப் பேரின் பறிவுருவா வுள்ளுறைந்தே
தன்பொறுப்பா வோம்புகின் றுன்.

655. கள்ளமனக் கண்கலக்கம் பேரவருட் பேரின்ப
வெள்ளமா வென்னுள் வெளிப்பட்டான்—தள்ளருதன்
னற்புதமா முண்மை யருட்பரமாந் தன்சொருபச்
சிற்பதமா வென்னைச் செறித்து.

656. அகத்தே யருள்விளங்க வாண்டா னடியைத்
தகத்தேடு சாதனையிற் சாரேன்—ஜகத்தாடு
பட்டுக் கிடந்தேன் பராற்பரனென் னுருயிரைத்
தொட்டுக் கரைத்தான் சுகத்து.

657. வணக்கஞ்சேர் மோனவருள் வாழ்க்கையிலே யென்னை
யிணக்கமுற வாண்ட விறைவன் —கணக்கிலாச்
செல்வமா நீடு சிவானந்த போகமென்
னல்குரவு தீர நல்கி ஞன்.

(கொச்சகக் கலிப்பா)

658. எனக்கே னினிக்கவலை! எய்திஞேர் தம்பா
லனைக்கேயும் பிக்கவரு ளாளன்பாற் சார்ந்தேன் ;
எனக்கேத மற்றபே ரின்ப மளித்தான்
மனக்கேத மற்றொழிய மாற்றும் பிரானே.

659. துன்பக் கலக்கமனச் சூழலினின் றென்னைப்பே
ரின்பவெளி யான வியற்செம் பதத்திலுய்த்தான்
நம்பலுற் ருேர்தந் நலிவகலத் தற்பரமெய்த்
தம்பமாத் தாங்கித் தலையளிசெய் யாண்டவனே.

660. * குணங்கரா மோகக் குடில மனத்தால்
அணங்குதாக் காக வணங்கலுற்றுப் பாழில்
உணங்குமா றென்னை யுடற்றியவூழ் மாய
வணங்கலும்பே ரின்பவருள் வாழ்வுறுவித் தானே

* குணங்கர் – பூத பிசாசம்.

661. அணங்குதாக் கானபா ழாசையால் வட்கி
யுணங்கக்கெட் டேனை யுளங்கனிந்து நோக்கி
நுணங்கும் பரசொருப நோக்கத்தாற் றன்னோ
டிணங்கியற்பே ரின்பவளச் சீர்மையீந் தானே.

662. தேற்றக் கடவசிவச் சிற்பரவாழ் வாகவெனக்
காற்றப் பெரிய வருட்பிரா ஞர்வித்தான்
போற்றக் கடவசிவ போதானு பூதியாச்
சாற்றத் தகுசொருப சச்சிதா னந்தமே.

663. தன்னையலான் மற்றெனக்கோர் சார்பின்மை நானுணர்
றன்னடியே சார்ந்தேன் சரணுகச் சார்ந்தேனுக் [வாற்
கன்னையினு மேலா வருளினு ஞண்டவன்மெய்த்
தன்னியலே யானவருட் சச்சிதா னந்தமே.

664. தெள்ளியசற் போதத் திருவருளா லென்னகத்தில்
வள்ளியபே ரின்ப வளாகமொன்று காட்டினுன்
துள்ளியபே யாட்டச் சுலாவான கற்பனையின்
உள்ளியன்று துன்ப முழந்தேற் குடையானே.

## ௯௬. மனநிறைவு

(குறள்)

665. சிந்தை நிறைவளித்தான் சிற்பரமெய்ப் பூரணனு
மெந்தை ரமண னெனக்கு.

## ௬0. மோனம்

(குறள்)

666. வெறியனுக்கு மோன விகாச மளித்தான்
அறிவொளிமெய் யானவம் மான்.

667. அருட்பரமாம் போத மருதொளிர மோனத்
திருப்பதந் தான்காட் டினன்.

668. *காட்டுக் கடந்தசிவக் கைவல்ய மோனவுணர்
வூட்டமளித் தானுடை யான்.

*காட்டு - எடுத்துக் காட்டு

(வெண்பா)

669. பழையான் புதியான் பராற்பரமா வுள்ளான்
உழையேனை யாண்ட வுடையான்—விழியால்
அவனேநா னாக வகங்குளிரப் பெய்தான்
மவுனோப தேச மழை.

670. அகந்தை மயக்க மறக்கழன்று லன்றி
முகந்துலங்கக் காணவொணா மோனம்—திகந்தமுற
எங்கும் பரக்க விதயத் தலத்திலிருந்
தங்கணன் தானலர்வித் தான்.

671. மோனமே ஞான முடிபென் றுணர்த்தினன்
தானதுவா நின்ற சதாமௌனி—யானெனதென்
றுன்னுமனச் சேட்டை யொழிந்துணர்வு மாத்திரமா
மன்னுமகத் தாந்தன் மயத்து.

672. பற்றற் றொளிர்சொரூபப் பார்வையே பார்வையா
முற்றலுற்ற மோன முனிரமணன்—சற்றுமோ
ரற்றமறக் காட்டி யருளினா னத்துவித
முற்றறிவா மோனப் பதம்.

673. தாய்க்கருணை யாளன் றகவிலா நாயேனுக்
காக்கமிகப் பொங்க வறிவொளியாய்—நீக்கமில்பே
ரன்புசேர் ரின்ப வருட்கடலா மோனவெளித்
தன்பதமே தான்காட்டி னான்.

674. ஞானவரம் பாக நடக்குமதி சாந்தசிவ
மோனவனு பூதியிம் மூடனே—னுானவகத்
தின்பமய மாக வியல்வித்தா ஞண்டபே
ரன்புமய மான வரன்.

675. எந்தையா நல்கினு னெம்பிரா னென்னுளத்தில்
விந்தைசேர் மெய்ஞ்ஞான வெற்றியாற்—சிந்தைத்
தளர்ச்சியறப் பொங்குந் ததாகார மோனக்
கிளர்ச்சியாஞ் செம்பொற் கிழி.

676. அறிவுவடி வானமெய் யன்பாம் பதத்திற்
செறிவுபடு மோனத் தியானம்—பிறிவுபடா
தூற்றெடுக்க வென்னிதயத் தூடுருவ நோக்கியெனக்
கேற்ற மளித்தா னிறை.

677. இகத்தி லிருண்ட வெனக்குப் பரத்தின்
சுகத்திலே வாழ்வு துலங்க—மகத்தா
மவுனவருட் காட்சி வடித்துக் கொடுத்தான்
சிவனு வொளிர்தே சிகன்.

678. எல்லாஞ்செய் வல்ல விறைவனருட் பார்வையே
யல்லா லெனக்கோ ரறிவில்லை—சொல்லா
லுணர்த்தவொணு வுண்மை யுளந்தானே யாகப்
புணர்த்தினுன் மோனப் புலம்.

679. குருந்தமூ லத்திற் குருபரனு முன்னு
ளிருந்தமூ தாதைரம ணேசன்—திருந்தவே
மெய்ஞ்ஞான மோனவருள் விஞ்சை புகட்டினுன்
அஞ்ஞானஞ் செற்றென் னகத்து.

680. கல்லாத மோகக் கருத்தி லிருந்தமருட்
பொல்லாங் கொழியப் பொருத்தினுன்—எல்லாங்
கடந்ததா யெங்குங் கலாதீத யாகப்
படர்ந்தொளிரு மோனப் பரம்.

681. அன்புமய மானரம ணுரியனென் னுருயிர்பே
ரின்பமய மாக வினிதளித்தான்—துன்பமயப்
பாசா ணவந்தீர் பரவெளியாந் தன்சொரூப
நேசானு பூதி நிலை.

682. பத்தியுணர் வூட்டிப் பராவமுதாந் தன்சொருப
முத்தியொளிர் மோனநிலை கூட்டினன்—வித்தகமெய்ஞ்
ஞான சொரூபகுரு நாதனகண்டவருள்
வானமா வென்னுள் மலர்ந்து.

683. அரண்புக் கவர்க்கு மகன்றுய்ய வொண்ணு
மரண நினைவுமற மாறச்—சரண்புக்க
இம்பரோ முக்களித்தா னும்பருங்கா ணுதபெருஞ்
செம்பொருளா மோனச் சிறப்பு.

684. சிவசொருபக் காட்சித் தெளிவான மோனக்
கவசமென் னுருயிர்க்குக் காப்பாச்—சிவசொருப
வாண்டா னளித்தா னருட்செம் பதத்திலெனக்
கீண்டாது மோக விகல்.

685. அன்றுநா னுக வகந்தை யதன்பொருளாத்
துன்றுமகந் தன்சிற் சொரூபத்தோ—டொன்று
மசிபதத்து மோனஞா னுனுபவ மீந்தான்
பசுபதியாந் தெய்வப் பரன்.

686. கருத்தொருமித் துள்ளங் கலந்தவுணர் வின்றி
யொருத்தரு(ம்)நத் தாதநுட்ப வொட்பம்—திருத்தமா
வுள்ளத் தொளிர வுபாயமா மோனவருள்
வெள்ளத் தொளிவீசி னன்.

687. இகத்தே பரங்காண வேழையேன் ஞான
முகத்தே யருளினன் மோனப்—அகத்தே
மடுத்த வநாதி மயக்கமறத் தன்னை
யடுத்தவனு மென்னையாண் டான்.

(கொச்சகக் கலிப்பா)

688. ஒன்ருன மெய்யுணர்வா லொன்றிலன்றித் தன்னுடுமற்
றென்ருலுந் தன்னியல்பா வொன்றவொணு வோரியல்
நன்ருகத் தன்னடியே நம்பியடைந் தேனிதயத் [பான்
தொன்ருன மோனவுணர் வுள்ளூரக் கூட்டினனே.

689. ஊன வகந்தை யுணர்வோ டுலகெனச்சுட்
டேனை விகற்பவுணர் வெல்லாமுந் தாங்கரப்பத்
தானவிர்சற் போத சதாசிவமாத் தங்குசுப
மோனமெனக் காண்டான் முடித்துக் கொடுத்ததே.

690. பூட்டியெனைச் சுட்டறிவாற் பொய்ம்மாயக் கற்பனையில்
வாட்டியபா ழாணவப்பேய் வல்லாண்மை கெட்டொழிய
வீட்டியல்வாழ் வாக விளங்கும்மோ னனுபவம்
காட்டினன் ஞானவருட் கண்மணியா வென்னகத்தே.

691. ஜாட்டியமா மோகத் தமங்கெடவுள் ளூடுருவு
நாட்டமாக் கூர்த்தமெய்ஞ் ஞானவிசா ரத்திறத்தால்
வீட்டியல்வாழ் வான விசுத்தமோ னனுபவ
மூட்டின னுள்ளத் தொளிவெளியா வுள்ளானே.

692. தானாக வென்னைத் தலைப்படக்கண் ணோக்கியமெய்ஞ்
ஞானாகா ரப்பிரான் ஞாதுரு ஞே யங்கடந்தோன்
ஆனாத சுத்த வருள்வெளியா வுள்ளத்து
மோனாநு பூதி முகப்பித்தான் சேவடிக்கே.

693. எண்ணமற்ற மோன வியல்பா லினிதிருக்க
வண்ணப் பணித்தென்னை வாழ்வித் தருளினான்,
பண்ணற் கரியசிவ பாக்கியமா வென்னகம்புக்
குண்ணிலவு பாத வொளிசே ருடையானே.

694. அருள்வெளியே வாழ்வா வகந்துலங்கு மோனப்
பொருள்வளமே யாண்டான் பொலிய வளித்தான்
மருள்வளர்வெம் பாச மனத்தால் வறங்கூர்ந்
திருளுலகப் பாழி லிடர்ப்பட்டே னுக்கே.

695. பத்திமையில் லாத படிற்றடியே னுள்ளத்திற்
புத்தமுத மோனானு பூதியுணர் வூட்டினன்
அத்தமியா வுண்மை யறிவொளியா நு தன்னடிக்கீழ்
நித்தமுத்தி யான நிலைகாட்டி யாண்டவனே.

696. பரம சிவத்தையே பற்றறத்தான் பற்று
முரமான மோன வுணர்ச்சியே மாறாத்
திரமான சுத்தவருட் செல்வமாத் தேற்றித்
தரமிலே னுக்களித்தான் சற்குருசீ மானே.

697. மாழ்கா தடியேன் மயக்கமனக் கற்பனைசெற்
றாழ்வா தனையுடற்றி யுள்ளத்திற் பேரின்ப
வாழ்வா வொளிர்சொருப வண்பதமா மோன நிலை
சூழ்வா ரொளிவெளியாத் துன்றுவித்தா னுண்டவனே.

### ௨௧. கைவல்யம்

(வெண்பா)

698. குருரமணு வென்றெருகாற் கூறியதே கொண்டு
தெருமரல்செற் றென்னிதயஞ் சேர்ந்து—பரமசிவ
ஞானுனு பூதி நலங்கிளரக் கைவல்யந்
தானுன தன்மையளித் தான்.

(கொச்சகக் கலிப்பா)

699. உலகங் கடந்தவோ ருண்மையென் னுள்ளத்
திலகக் கொளுவலா லெம்மா னளித்தான்
சுலவுமனக் கற்பனையாச் சூழுலக மோகக்
கலகமறு சுத்தவருட் கைவல்யப் பேறே.

700. உண்மையா மோனவுண வொட்பமே தானெனக்குத்
திண்மைசேர் சுத்த சிவக்கே வலவாழ்வா
வண்மைசே ராண்டான் வழங்கினன் அவ்வாழ்வு
நுண்மையிலு(ம்) நுண்மை நுனிக்கவொணு
நுண்மைத்தே.

701. சதிக்கா ரவிச்சை யறத் தன்னருட்கண் ணேக்கால்
உதுக்காணென் றுள்ளத் தொளிர்சொருபங் காட்டிப்
பதுக்கான கைவல்யம் பாலித்தான், சேர்சற்
கதிக்கான ஞானக் கழற்செம் பிரானே.

## 9. அளித்தலும் பயனும்

### க. குருபக்தி

(வெண்பா)

702. அளித்தா னருட்காட்சி யான்மானு பூதி
திளைத்தேன் சொரூப சிவத்தே—புளித்தொழியப்
புன்புலத்து வேட்கை பொருந்தியது தன்மயமெய்
யன்புகுரு நாதன் பதத்து.

## உ. அகந்தை யழிவு

(வெண்பா)

703. எம்பெருமா ளுகை வெனக்களித்த மோனவருட்
செம்பொருள்வாழ் வூடு சிறிதுமில்லை—இம்பரும்பர்
என்னுமா மோக விருட்பா ழுருவெளிநோக்
கென்னதியா னென்னும் மயல்.

704. தெய்வவாழ் வாகச் செறிந்த சிவபதத்தா
டுய்வதா வோருறுதி நல்கினன்—செய்வதா
வெண்ணியவென் மோக வியற்கைசேர் பொய்யகந்தைத்
திண்ணெனவு தீர்ந்ததா லோய்ந்து.

குறிப்பு :— தீர்ந்த தால் என்பதில் 'ஆல்' அசை நிலை.

705. நானற் றியல்சொருப ஞானனு பூதியெனக்
கூனமற வாண்டா னுதவலால்—ஊன
வுடலகந்தை யானபா மூத்தை யொழுக்கப்
படரொழிந்து நின்றேன் பரத்து.

(கொச்சகக் கலிப்பா)

706. பாண்டிநா டாளும் பரஞ்சோதி கண்ணேக்காற்
றாண்டியே யென்னறிவைச் சொக்க வசீகரித்துக்
காண்டியெனக் காட்டியதன் கைவல் லியவடிவில்
மாண்டதுநா னென்னும் மயக்க வகந்தையே.

## ௩. அற்றவை

(வெண்பா)

707. பம்பிமனம் பாழிற் படாதபடி தன்பதத்தை
நம்பினேற் குண்மையொளி நல்கினன்—செம்பரமாந்
தெய்வப் பதவொளியிற் சித்தக் கலக்கமறப்
பொய்விகற்பம் போயிற் றொழிந்து.

708. மோனக் கருவான முத்தன் குருரமணன்
ஞானக் கருவூல நல்கினன்—ஊனக்
கருவா தனைசேர் கடும்பிறவித் துன்ப
வெருவரல்விட் டோட மனத்து.

709. நானெனும்பொய்ம் மோக நடலைக்கூத் தோய்வுறமெய்ஞ்
ஞானமா மோன நிலை நல்கினன்—போனகமாத்
தன்சொருப சாந்திநான் சந்ததமுந் துய்த்தலாற்
புன்சிலுகு தீர்ந்தேன் புலத்து.

710. நவநிதிக்கும் மேலாமெய்ஞ் ஞான நிதி வற்றாத்
தவநிதியெங் கோரமணன் றந்தான்—அவனியிலே
என்மயக்க மான விளிவரல்போய் வாழ்கின்றேன்
தன்ம தயாநிதிதாள் சார்ந்து.

711. தன்பதமே மிக்க சதாமுத்தி யாகவெனக்
கின்பநிலை யீந்தா னிறைரமணன்—அன்புருநான்
யானெனதென் றேங்குமிரு பற்றும் பசுபாச
வூனமகன் றுற்றே னுளத்து.

குறிப்பு :— அன்புருநான் உற்றேன் என இயையும்.

## ச. சொரூப வியல்

(வெண்பா)

712. அறிவான மோனமே யாண்டா னெனக்குக்
குறியாகக் கொள்ளக் கொடுத்தான்—குறியாம்
அதுதற் குறியா வகமகமென் றுள்ளம்
பதிவுற் றெளிர்சொருபப் பண்பு.

713. புல்லவொணுத் தன்சொருப போதானு பூதியெனக்
கில்லையென தென்னிதயத் தேல்வித்தான்—கல்லைப்
பிசைந்தான் கனியாகப் பெட்புறுமெய் யன்பா
லிசைந்தேன் சொரூப வியல்.

714. சிவசொரூபச் செல்வன் சிவபதத்திற் செம்மாண்
பவிசளித்து வாழப் பணித்தான்—அவசமுறக்
கெட்டழியே னன்னியத்தில், கேழ்கிளருந்
பெட்டொழுகப் பெற்றவடி யேன். [தன்சொருபம்

715. மாலுறவாஞ் சீவ மனோமாயை பொய்த்தொழிய
வாலறிவாந் தன்சொருப வாழ்வளித்தான்—வாலறிவாத்
துன்று மதீத சொரூபமே யானதெனக்
கென்றுமுள வென்மெய் யியல்பு.

(கொச்சகக் கலிப்பா)

716. ஒன்றுங் கொடான்போல் உடையான் முழுமுதலாத்
துன்றுமொன் ருன சொரூபானு பூதிதந்தான்
என்றுமொன் ருக விருந்தொளிர்மெய்ஞ் ஞானவருள்
வென்றியிற்பல் வேறுவகை வேற்றுமையும் போயிற்றே.

## ௫. சிவ நிலை

(வெண்பா)

717. சிவதரும மின்னதெனத் தேருக் கடையேற்
கவிர்தருமெய்ஞ் ஞான மளித்தான்—தவறுபட்
டெல்லாந் தணந்தொழிய வென்னுளத்தா டெய்தியது
நல்லசிவ வுண்மை நலன்.

718. குறியொன் றறிந்துகுறிக் கொள்ளாக் கடையேற்
கறிவே குறியா வளித்தான்—அறிகொன்
றறியா வகந்தையே ஞெணவப்பே யோடச்
செறிவாக நின்றேன் சிவத்து.

719. வாழ்வுசிவ மாக வழங்கின னென்னுளத்தே
தாழ்வசைவு தாக்காச் சதிராண்மை—ஊழ்வகையா
லூனவுடற் கன்றி யுணர்வுருவாப் பொங்குமுயிர்க்
கானவசை வுண்டோ வகத்து.

## ௬. அகத் தெளிவு

(வெண்பா)

720. மகத்தான தெய்வ மகேச னடியேற்
ககத்தெளிவு பொங்க வளித்தான்—தகத்தேர்
பரம்பொருளாற் பெற்ற பவிசின்முன் மற்றோர்
தரும்பவிசாம் பொற்பரிசி லென்.

## ௭. அருள் வாழ்வு

(வெண்பா)

721. குபேரனுக்குச் செல்வங் கொடுத்தவருட் பிச்சன்
அபாரவருட் பார்வை யளித்தான்—குபேரசம்பத்
தோர்பொருளன் ருக வுளத்தொளிர்கம் பீரவருட்
சீர்வளர்வாழ் வுற்றேன் செழித்து.

722. சார்தலுறத் தக்க சமாதி யெனக்கியல்பா
ஆர்தலுற வுள்ளத் துதவினன்—பேர்தலற்ற
வுண்மைஞா னனுபவ வூற்றுப் பெருக்கத்தால்
வண்மைபெற மல்கிற்று வாழ்வு.

723. புலங்கடந்த மெய்யன் புவியிற் சிவமாப்
பொலிந்துநின்ற ஞானப் புகழோன்—மலிந்தசிவ
ஞானசித்தி நல்கின னானவகப் பேயாட்டந்
தானசித்து வாழ்வுதனைத் தேன்.

724. மோனமாந் தெய்வ முறையாலே தன்பதத்து
ஞானவழி பாடியல்பா நல்கினன்—வானளவ
முற்றும் பரபக்தி மூண்டொளிர்பா தானந்தப்
பெற்றியால் வாழ்வுபெற் றேன்.

(கொச்சகக் கலிப்பா)

725. அதியற் புதமான வாண்டான் அடியேற்
கிதயத் தியல்பா வியைந்த சொரூபப்
புதையற் பழம்பொருள் பொற்ப வளித்தான்;
பிதிர்வற்ற வுண்மைப் பெருவாழ்வுற் றேனே.

726. தானேதா னாகத் தழைத்தவருட் கைவல்ய
மோனநு பூதி முகப்பரிய முத்தியா
ஞான ரியனெனக்கு நல்கலா லுள்ளத்தில்
வானன சுத்தவருள் வாழ்வு மலர்ந்ததே.

அ. இதய வெளி

(வெண்பா)

727. வரமா வொளிர்சொருப வாழ்வாக மன்னுந்
திரமான வாசமுறச் சேர்ந்தேன்—பரம
கதியருள்சற் போதகுரு காட்டிக் கொடுத்தான்
இதயவெளி யாமெய் யிருப்பு.

க. கைவல்யம்

(வெண்பா)

728. ஞானவருட் பார்வைமிக நல்கினன் மெய்ப்பதத்து
மோனவியல் வாழ்க்கையுற மூடனேன்—ஊனவுடற்
பற்று மகந்தைப் பசையற்றுக் கைவல்ய
முற்றே னுணர்வா முளத்து.

(கொச்சகக் கலிப்பா)

729. பன்முகமா வோடிப் பதைத்தடியேன் பாழ்படா
துன்மனிவாழ் வாகவோங் கொட்பநுட்பக் கேவலத்துத்
தன்மயமா மோனவருட் சால்பளித்த தத்துவன்மெய்த்
தன்மையே யன்றிமற்றோர் தன்மைநான் காணேனே.

## ௬௦. அத்வைதம்

(வெண்பா)

730. வித்தகமெய்ச் செல்வனை நான் மேவினேன் மேவினேற்
கொத்ததொரு வித்தை யுதவினான்—பொய்த்தொழிய
வித்தை யனைத்து மவித்தையா வென்னுளத்தா
டத்துவித மாவொளிர்வ தால்.

731. சொருபத் தியல்பாற் சுடருமெய்ஞ் ஞானப்
பரபத்தி தந்தான் பரமன்—சொருபமே
யாகநீ டற்புதமோ ரனுபவத் தால்வழிபட்
டேகனா நானியல்கின் றேன்.

## ௬௧. சாந்தி

(வெண்பா)

732. சும்மா விருத்தல் சொரூபானு பூதியெனப்
பெம்மா னளித்தான் பிரம்மபதம்—சும்மா
இருந்தொளிர்வ தாந்தன் னியற்பதத்தே சாந்தி
பொருந்தியதென் னுள்ளம் பொலிந்து.

733. ஒன்று கலந்த வுணர்வினா லன்றியுயிர்
வென்றுகொள வொண்ணா விழுப்பதத்தை—மன்ற
வுளத்தா டளித்தா னுடையா னுணர்வாற்
களித்தே னமைதி கலந்து.

(கொச்சகக் கலிப்பா)

734. காண வொண்ணாதவருட் கைவல் லியக்கடவுள்
வாணன் சொரூபமே வாழ்வா வெனக்களித்தான்;
மாண வகந்துலங்கு வாழ்வாமம் மெய்ந்நிலையிற்
றுணுவா நின்றதுப சாந்த சதாசிவமே.

கஉ. **பேரின்பம்**

(வெண்பா)

735. மிக்கநன வாக விளங்குசிவக் கேவலமாத்
தொக்க சொரூபச் சுடர்ப்பதத்தே—சொக்கவெனக்
கன்புணர்ச்சி தந்தா னருளாள னென்னிதயத்
தின்புணர்ச்சி மீக்கூர வே.

736. தவராஜ ராஜகுரு சாமி யளித்தான்
சிவஞான மோனவருட் செல்வம்—அவமான
புன்மயக்க வாழ்க்கை புளித்தொழியத் தித்தித்த
தின்பமய மான வியல்.

737. கல்லாதே னல்லேன் கலைஞனே யாயினுமென்
னல்லாப் பகன்றிலே னவ்வறிவால்—சொல்லறநன்
காண்டா னருளறிவா லல்லாப் பகன்றதோ
டீண்டினன்மெய் யின்பா மியல்பு.

738. காயம் பரவெளியாக் காணு மனுபூதி
யாயவருள் வாழ்வளித்த வாண்டவற்கு—நேயமிகப்
பெற்ற மனத்தாற் பிரம்ம சுகாம்புதியா
வுற்றதென் மோன வுணர்வு.

## 10. கண்ணோக்கமும் பயனும்

க. **அடிமை யாதல்**

(கொச்சகக் கலிப்பா)

739. இனைத்தெனவொண் ணுதபே ரின்பமய மாக
மனத்தைக் கவர்ந்த வசீகரக்கண் ணோக்காற்
றனித்தலைவ னை சதாசிவனுக் கேநான்
அனைத்துவிதத் தாலு மடிமையா னேனே.

உ. **அரண்**

(வெண்பா)

740. என்னைப் பிரியா திதயத் திருந்துவிளங்
கென்னப்ப னெம்பிரா னென்னிறைவன்—நன்னர்க்
கருணையா லென்னைக் கடைக்கணித் தாண்ட
வருணையான் கண்ணோக் கரண்.

### க. சற்பக்தி

(குறள்)

741. வித்தகமெய்ஞ் ஞான குரு வீட்சணத்தாற் சேர்ந்ததெனக்
குத்தமசற் பத்தி யுணர்வு.

(கொச்சகக் கலிப்பா)

742. பண்பா டிலேன்பாற் பரிவுணர்ச்சி பொங்கவருட்
கண்பார்த் தருளிமனக் கண்கலக்கம் மாற்றினன்
விண்பா லியோகெய்து விஞ்சைத் திறந்தெளிய
நண்பாம் பரபத்தி நண்ணக் கிடைத்ததே.

743. நிரம்பியசற் பத்தி நிலைப்பட்ட நெஞ்சர்
விரும்புறுமெய்ஞ் ஞானவருள் வித்தகன்கண் ணோக்கால்
இரும்பியல்சே ரென்னுயிர்செம் பொன்னா யிலங்க
அரும்பலர்ந்த வுள்ளத் தலர்ந்ததுமெய் யன்பே.

744. மாயாசத் திக்கு வசப்பட்டு நானெனதென்
றோயா துலகப்பா லூடமுந்தும் மாயவகப்
பேயான வென்னகத்திற் பெய்தவருட் கண்ணோக்கால்
நேயானு பூதி நிலைதெரித்தா னண்டவனே.

### உ. அகப்பே யழிவு

(குறள்)

745. பட்டனருட் பார்வை பதிதலா லுள்ளத்திற்
கெட்டதகப் பாழ்ம்பேய்க் கிறி.

746. குருவருட் பார்வைக் குலாவாற் குலைந்த
துருவற்ற மோகவகப் பேய்.

747. தேசிகன்கண் ணோக்கந் திருவருட்காப் பாத்திகழ்வாற்
பாசவகப் பேய்பட் டது.

748. ஆண்டவன்கூ *ரான்ம வருட்பார்வை யாலகத்து
மாண்டதுநா னென்னும் மயக்கு.

* ஆன்ம வருட்பார்வை – ஆன்ம சொரூபமான அருட்
பார்வை.

(வெண்பா)

749. ஆண்டகுரு நாத னருட்பார்வை யென்னகத்தே
தூண்டுசிவ ஞானச் சுடரொளியில்—மாண்ட
தனுதிநெடுங் காலமா வாண்டுவந்த தேக
மனுதி நா னென்னும் மயக்கு.

(கொச்சகக் கலிப்பா)

750. காண்டலரு மோனவியற் கைவல்யக் காட்சியா
லாண்டவன் கண் ணேக்கமெனக் காக்கமா வுள்ளுணர்
தூண்டவொளிர் சுத்தத் துரீய சொரூபத்தில் [வைத்
மாண்டதுநா னென்னு மயக்கவகப் பேய்மதியே.

751. நானற் றெளிர்சொருப ஞானமே ஞானமா
மோனவுணர் வுள்ளத்து மூண்டெழவுள் ளூடுருவி
ஈனமற வாண்ட விறைவன்கண் ணேக்கிலற்ற
தூன வுடலா வுருத்த வகந்தையே.

752. தோன்றுலகக் கற்பனு சொற்பனத்து மாழ்குங்கால்
ஏன்றெனை நன் காண்ட விறைவனருட் பார்வையென்
ஊன்றலுற்ற வாற்ரு லுளங்கிளரப் பொங்கொளியில்[பால்
மான்றவகங் கார மனக்கலக்கங் கெட்டதே.

753. ஆர்ந்தவெளி யானஞா னுதித்தன் தன்னடியைச்
சேர்ந்தநான் சற்றுஞ் சிறுமைப் படாதுமிகக்
கூர்ந்தவருட் பார்வை குலாவலா லுள்ளத்திற்
பேர்ந்தது நா னென்னுமகப் பேய்க்கலக்கப் பீடையே.

754. ஒருவா தியல்சொருப வுண்மைஞா னத்தாற்
கருவா தனைக்கலக்கக் கற்பனையற் ருேயக்
குருவாக வாண்டவருட் கோமான்கண் ணேக்கால்
அருவா வொழிந்தே னகந்தையுருக் கெட்டே.

755. கருத்தடங்கக் கல்லாது கற்பனையிற் பாய்ந்து
மரித்தலுற்ற தீனனேன் மாட்டிரங்கி யுண்மைப்
பரத்திலே யென்மனத்தைப் பற்றுவித்த வாண்டான்
குருத்துவஞ்சேர் நோக்காற் குலைந்ததகப் பாழே.

756. செஞ்செவே யாண்டவருட் சிற்பிரான் கண்ணேக்கால்
விஞ்சைசேர் சுத்த வெளியா மலர்ந்தவுளத்
தஞ்சவோ வன்றி யவாவவோ யாதுமறத்
துஞ்சியது நானெனும்பொய்ச் சூதா மகந்தையே.

757. களியுறுபா சத்திற் கலங்கியே நானென்
றளியனு மோகித் தழுங்கலுற்றேன் மாட்டுத்
தெளிய விளங்குசிவச் செம்மலருட் கண்ணேக்
கவோ லகன்றதுபா ழாசையகப் பேயே.

758. சுருள்வா தனைத்தொகைசேர் சூனியப்பாழ் மோக
விருள்விலக வுள்ளத் திறைவன்கண் ணேக்கால்
வெருள்விகற்பந் தீர விளங்கு சொரூப
வருள் வெளிக்கட் காணு தகன்றதகப் பேயே.

### ௫. மரு ளறல்

(வெண்பா)

759. ஒழியாப்பே ரின்பத் துவகைசேர் சாந்தி
கழியா தியல்சொருபக் காட்சி—விழியால்
அருளியவென் னுண்டா னருட்பதமே பற்றி
மருளொழியப் பெற்றேன் மனத்து.

760. காண்டா வனத்தைக் கதழெரிகொண் டாற்போல
மாண்டெரிய வெம்பாச வாசனைசெற்—றுண்டான்
அருட்பார்வை யாலே யடியடைந்து பேத
மருட்பார்வை தீர்ந்தேன் மனத்து.

### ௬. மய லறல்

(குறள்)

761. மெய்த்தவவாழ் வென்னுள் விளைத்தபிரான் கண்ணேக்
பொய்த்ததுமா மோகப் புலம். [காற்

762. அருட்பார்வை யானபிரம் மாத்திரத்தாற் பொன்றிற்
றிருட்பா முலக வியல்.

(கொச்சகக் கலிப்பா)

763. சும்மா விருப்போர்க்கே துங்கமோ னநுபவச்
செம்மாப் பருள்சொருபன் செங்கணன் கூர்நோக்கால்
உன்மாத மானபா மூத்தையகப் பேயோடு
பொய்ம்மா லவிச்சையிருள் பொன்றக் குலைந்ததே.

764. சுத்தப் பரமே சொரூபமென் றோராது
மெத்தப் பதைத்தேன் விசித்திரப்பாழ்ங் கற்பனையில்;
வித்தகமெய்ஞ் ஞான விரூபாட்சன் வீட்சணத்தாற்
பொய்த்ததுமா யக்கனவென் புத்திப் புலத்திலே.

எ. வினை யறல்

(குறள்)

765. குவிந்த வினைசற் குருவருட்கண் ணோக்கால்
அவிந்த தறவே யகத்து.

அ. பாச மறல்

(குறள்)

766. குற்றமற்ற மோன குருமூர்த்தி கூர்விழியா
லற்றதுவெம் பாச வறிவு.

(கொச்சகக் கலிப்பா)

767. சித்தமல மான செருக்காற் சிதடனய்த்
தத்துவங்கா ணாதுலகச் சற்பனையில் வீழ்ந்தேற்கு
நித்தமுத்தி யாந்தன் னிஜசொரூபந் தேற்றியநல்
லத்தனருட் பார்வையா லற்றதுபொய்ப் பாசமே.

768. ஒருமைசே ருண்மை யுணர்வொளியால் வஞ்சக்
கருமயல்சேர் பாசக் கலக்கமற வாண்டா
னருளியமெய்ஞ் ஞான வருட்கண்ணோக் கென்னு
ளுருவலுற்ற மாட்சி யுரைக்கப்பாற் றன்றே.

769. கடையவனென் றென்னைக் கடியாதே யாளா
வுடையபிரா னென்பா லுவந்தருளிச் செய்த
தடையற்ற சுத்தவருட் சைதன்ய நோக்கப்
படையினு லற்றதுவெம் பாசவிருட் பாழே.

770. கள்ள மயக்கமறக் காணுங்கண் ணோக்கத்தால்
உள்ளந் தெளியவெனக் குண்மையுணர் வூட்டினுற்
குள்ளன்பு முற்றமுற் றூட்டாக வுற்றதால்
எள்ளளவும் பாசவுணர் வில்லா தொழிந்ததே.

771. கொடியனு மென்னைக் குரூரமா நோக்கா
தடியனு வேற்றவரு ளங்கணு ணோக்கால்
மிடியனுன் பாச வெறும்பா ழிருட்கார்
விடியலா யுண்மை விழுப்பமுற் றேனே.

### ௯. துன்ப மறல்

(குறள்)

772. வினைக்கேட ஞனவருள் வித்தகன்கண் ணோக்கால்
*எனைக்கே தழுமின் றெனக்கு.

*எனைக்கேதழும்—எந்தத் துன்பமும்.

(கொச்சகக் கலிப்பா)

773. மலிந்தசிவா னந்த வளங்கிளர்மோ னத்தாற்
பொலிந்தமெய்ஞ் ஞானப் புராணன்கண் ணோக்காற்
கலைந்திடமா மோகக் கலக்க விருட்கார்
தொலைந்ததுவெம் பாசமனத் துன்ப மறவே.

### ௧௦. மல மறல்

(குறள்)

774. கண்ணோக்க மானவருட் கங்கையாற் போயிற்றென்
மண்ணோக்க மான மலம்.

குறிப்பு:- ஆண்டவன் அருட்கண் ணோக்கமான கங்கா ஸ்நானத்தால்.

775. கலங்கலற்ற சுத்தவருட் கங்கைநீ ராடித்
துலங்கலுற்ற தென்னு ருயிர்.

(கொச்சகக் கலிப்பா)

776. தரமிலா நாயேன் சதிர்க்கவென் னுள்ளத்
துரமான வுண்மையுணர் வூட்டியகண் ணோக்காற்
புரமான மும்மலமும் பொன்றுவித்தான் சுத்தப்
பரமா வொளிர் சொருபப் பார்ப்பானென் பாலே.

777. ஓராதா ருள்ளத் தொளிக்குமெய்ஞ் ஞானவொளிப்
பேராள னை பிரான்சற் குருரமணன்
கூரார்ந்த கண்ணோக்கங் கோத்தலா லுள்ளத்திற்
காரா ணவப்பாழ்ங் கலியிருள்கெட் டுய்ந்தேனே.

கக. **சந்தாப மறல்**

(வெண்பா)

778. சாந்தியொளி பொங்கித் ததும்புமுகக் காட்சியாற்
றீர்ந்ததுசந் தாபமென் சித்தத்தே—காந்தமா
மன்னுயிரை முற்ற வசீகரிக்கும் பேரின்ப
நன்னயஞ்சே ரன்பே யவன்.

(கொச்சகக் கலிப்பா)

779. செடிசே ருடலிற் செருக்குங் களிசேர்
கடையான வென்னைக் கடைக்கணித்த வாற்றால்
உடையான்பே ரின்ப வுணர்வொளிசே ருள்ளத்
தடையா தகன்றதுபா ழாசைப் பசாசே.

780. காண்டலரு மோனவருட் கண்ணோக்கா லூடுருவி
யாண்டவனுக் கூறு வகந்தை யறக்கழிவால்
ஈண்டலுற்ற வேகான்ம போத வியற்பதத்தில்
வேண்டவோ வன்றி வெறுக்கவோ யாதுமின்றே.

### கஉ. வேசற வறல்

(வெண்பா)

781. வருத்தமின் ருக மகிழ்ச்சிசேர் வாழ்வு
திருத்துமெய்ஞ் ஞானவருட் செல்வன்—குருத்துவமீக்
கூர்சொருபப் பார்வைக் குலாவான் மயக்கமற
வேசறவு தீர்ந்த தெனக்கு.

### கங. மோக மறல்

(வெண்பா)

782. பரஞ்சோதி நோக்கம் படர்தலா லென்மேற்
பெருஞ்சோக மோகமறப் பெற்றேன்—விரிஞ்சு
புலன்களின்மேற் சென்றமனம் போத சொரூப
நலன்கெழுபே ரின்பமாய் நான்.

(கொச்சகக் கலிப்பா)

783. தேசமார் சேவடியென் சிந்தையிலும் புந்தியிலும்
வாசமா வைத்துகந்த வாலறிவன் கண்ணேக்கால்
கோசவகங் காரக் குடிலமனத் தாக்கணங்கோ
டீசலுற்ற மோகப்பா ழேசறவு தீர்ந்ததே.

குறிப்பு;- ஈசுதல்-ஒட்டுதல், பற்றுதல்.

### கச. கலக்க மறல்

(வெண்பா)

784. மனேமயவாழ் வாமிம் மகிதலத்தே மாழ்கி
அனேதரவா நின்றே னகத்தே—இனேதயமாக்
காரிருளாம் பாசக் கலக்கமறக் கண்ணேக்கிப்
பேரருள்செய் தானெம் பிரான்.

### கரு. கற்பனே யறல்

(கொச்சகக் கலிப்பா)

785. மூண்டவகங் கார முனேப்பற் றொழியவகத்
தாண்டபரஞ் சோதி யடிகளருட் கண்ணேக்கால்
தீண்டவிரண் டற்ற சிவக்கே வலவுண்மை
காண்டலினென் மோகமனக் கற்பனேயற் றேய்ந்ததே.

786. யாவ ரகத்து மியல்பா வகமகமென்
றுர்வமீக் கூர வமர்ந்த சொரூபனருட்
பார்வையா லுள்ளம் பரவெளியாப் பொங்கலாற்
கார்வளர்மா மோகமனக் கற்பனையற் றேய்ந்ததே.

787. சிற்பரா சத்தித் திறத்தா லிதயத்துத்
தற்பரமா மோனச் சதிராட்சி செய்யாநின்
றற்பனு மென்னையடிக் காண்டபிரான் கண்ணேக்காற்
கற்பனு சத்திவலி கண்டிக்கப் பட்டதே.

788. தனுவாதி யாகத் தடுமாற லூற்றேற்
கினிதாக வாண்ட விறைவன்கண் ணேக்கால்
அனுபூதி யாக வவிர்ந்த சொரூப
நனவூடு பொய்த்ததுபொய்ஞ் ஞாலக் கனவே.

789. துவித மயக்கமறத் துன்றுமெய்ஞ் ஞான
சவிதாவா வாண்டசிவ சற்குருதன் னேக்கால்
விவிதவிஞ் ஞான விபூதியினம் மோகங்
கவிதலுற்ற மூலமனக் கற்பனையா யிற்றே.

## கசு. கர்த்ருத்துவ மறல்

(கொச்சகக் கலிப்பா)

790. அஞ்சலென் றாண்ட வருட்பிரான் கண்ணேக்கால்
என்செயலொன் றின்றி யெலாமே யிறைசெயலாத்
தஞ்சனே னுள்ளஞ் சதிர்க்க விளங்கலான்
முஞ்சியது பாழ்த்தமதி மோகக்கர்த் தத்துவமே.

## கஎ. மனமாய மறல்

(குறள்)

791. கலகமன மாயையற நோக்கினன் கண்ணல்
உலககுரு வானவுடை யான்.

## கஅ. மனோ நாசம்

(குறள்)

792. ஆண்டவன்கண் ணேக்கா லருட்சிற் பரவெளியா
மாண்டதுநா னென்னும் மனம்.

793\. பாசமறக் காணும் பரசொருபன் பார்வையாற்
கோசமனக் கோட்டமற் றேன்.

(கொச்சகக் கலிப்பா)

794\. வெட்கலுறத் தக்க வியாமோகப் பாழகப்பேய்
கொட்கலா லுற்றமனக் கொந்தளிப்பற் றேய்ந்தொழிந் [தேன்
உட்கியகப் பேயொழிய வுள்ளம்புக் காண்டுகொண்ட
பட்டன்மெய்ஞ் ஞானவருட் பார்வை பதிந்தாங்கே

795\. மூலவகப் பாழிருளின் மோகித்துக் கண்கலங்கும்
மாலறிவை மாற்றி மனோதீத மாண்படைந்தேன்
வாலறிவே தன்மெய் வடிவா விதயத்திற்
சால விளங்கலுற்ற சற்குருகண் ணோக்காலே

## ௧௯. கிரந்தி பேதம்

(குறள்)

796\. வள்ளலருட் பார்வையால் வாழ்கின்றேன் சிச்சடப் [பாழ்ங்
கள்ளமயற் கட்டுக் குலைந்து.
குறிப்பு: பார்வையாற் கட்டுக்குலைந்து வாழ்கின்றேன் எனக்கூட்டுக.

(கொச்சகக் கலிப்பா)

797\. எத்தகைய சாதனையுஞ் செய்திலா வேழையேற்கு
வித்தகமா மோன வெறுவெளியாத் தீர்ந்தவொரு
முத்தனருட் பார்வை முகத்தலா லுள்ளத்திற்
பொய்த்ததுநா னென்னுமயற் பூட்டான சிச்சடமே.

## ௨0. அன்னிய மறல்

(கொச்சகக் கலிப்பா)

798\. தன்னியல்பாத் தன்னிலொளிர் சச்சிதா னந்தசிவத்
தன்னியமொன் றில்லை யகமிதமென் றுற்போல;
மன்னியமெய்ஞ் ஞான வரோதயன்கண் ணோக்கத்தால்
என்னியல்பா வந்த வியல்பு விளங்கியதே.

## உக. ஜீவ போத மறல்

(கொச்சகக் கலிப்பா)

799. சுத்தசிவத் தன்மை துலங்கவென் னுள்ளத்தில்
வித்தகமெய்ஞ் ஞான விளக்கா விளங்கலுற்ற
முத்த சொரூபகுரு மூர்த்தியருட் பார்வையாற்
பொய்த்ததகந் தாஜீவ போத மயக்கமே.

800. துளங்கு மனத்தாற் சுழன்றுநா னெய்யா
துளங்கிளர வாண்டா னுருவியகண் ணோக்கால்
விளங்கநன் ருக விசுத்தசிவத் தன்மை
களங்கமாஞ் சீவக் கலக்கமற் றேனே.

801. காண்டகுசற் போதவருட் கைவல்ய மாட்சிசே
ராண்டவன்கட் பார்வையெனக் காரா வமுதமா
வீண்டலா லுள்ளத் தியற்பரமோ னனுபவம்
மூண்டதுநா னென்னும்பாழ் மோக முனைப்பறவே.

## உஉ. பந்த மறல்

(கொச்சகக் கலிப்பா)

802. வான வருள்வெளியா வைகு சொரூபமெய்ஞ்
ஞான குருபார்வை நண்ணலுற்றுங் குள்ளத்து
மோனவுணர் வொட்பநுட்ப முத்தியா மூண்டொளிர்
ஊனவுடற் பந்தவுணர் வோய்ந்த தியற்பரத்தே. [வால்

## உக. பிறவி யறல்

(வெண்பா)

803. பின்ன மிலாதவருட் பேரறிவா மோனவொளி
என்னதியல் பாக விதயத்தே—என்னிறைவன்
கூட்டியகண் ணோக்கக் குளிர்ச்சியால் வெம்பிறவி
வாட்டமறத் துன்னியதென் வாழ்வு.

பிறவி வாட்டம்—பிறவித்துன்பம், சம்சார தாபம்.

(கொச்சகக் கலிப்பா)

804. தெள்ளத் தெளிந்த சிவத்திலே நானெனும்பொய்க்
கள்ள வகந்தையறக் கண்டபிரான் கண்ணேக்கால்
உள்ளத்தே சுத்த வுணர்வுருவா வூறுசிவ
வெள்ளத்தே வீந்ததென் வெம்பிறவித் துன்பமே.

805. ஞானகுரு நாதன்செய் நல்லவருட் கண்ணேக்கால்
ஊனமயக் கான பிறப்பிறப்பற் றேய்ந்தொழிந்தே
யானற்ற மோன வியல்பா விதயத்துத்
தானவிர்மெய்த் தன்மைசால் சாந்தானு பூதியிலே.

806. சேமமா வுள்ளசிவச் செம்பதமே மிக்கபரந்
தாமமா வாழ்வு தழைத்தொளிர வுள்ளத்திற்
காம வெகுளிமயக் கங்கடிந்தான் கண்ணேக்காற்
பேய்மனே மாயப் பிறவிமயல் பேர்ந்ததே.

## உஎ. கால பய மறல்

(குறள்)

807. கோல குருவருட்கண் ணேக்க முற்றேன் மெய்ம்மறதிக்
கால பயங்கடந் தேன்.

## உஅ. அமுதத்துவம்

(வெண்பா)

808. அமிதமா மோன வருள்வெளிநோக் காலே
யமுத சொரூபமா வாண்டான்—சமுக
மடைந்தபல் லோரு மகண்டானு பூதி
யடைந்தொளிர நோக்குமம் மான்.

809. திளைத்தற் குரிய சிவானுபவ சாந்தி
விளைத்தற் கவதரித்த மெய்யன்—அளித்தவருட்
பார்வையா லென்னைப் பராவமுத மாக்கினன்
பாவியா மென்பாற் பரிந்து.

கொச்சகக் கலிப்பா)

810. ஓதருமெய்ஞ் ஞான வொளியே சொரூபமாத்
தேர்தரவென் னுள்ளுணர்விற் சேர்ந்தியல்வாழ் வான
கூர்தருகண் ணோக்கக் குலாவால் விளங்குசிவச் [பிரான்
சீர்தருமென் னுண்மைத் தெளிவு சிவாமுதமே.

811. ஓவாதென் னுள்ளத் தொளிர்சொருப வுண்மையாற்
சாவாத வாழ்வு தலைப்படலுற் றேனடியேன்
ஏவா வெனைப்பணிகொண் டின்பவுருத் தேர்வித்த
தாவா விறைரமண சற்குருகண் ணோக்காலே.

812 அவசத்தில் என்னையணைத் தாண்டவன் கண்ணோக்கால்
சிவசத்தி யாகத் தெளிந்தவென் சித்தக்
கவசத்திற் சாவகற்றுங் காவலுறக் கண்டேன்
நவசக்தி என்னுயிர்க்கு நண்ணியது தானே.

### உசு. மெய்க் காட்சி

(கொச்சகக் கலிப்பா)

813. காண்பா னிலாமற் கலந்து விளங்கியது
மாண்பா ரதீதவியல் வாழ்வான மெய்க்காட்சி
வீண்பாவ மான விகற்ப மயக்கமனக்
கோண்பா ழறக்குலையக் கூர்த்தகுரு நோக்காலே.

814. மோன வுணர்வொளியான் முற்றுங் கவர்சொருப
ஞானமென் னுள்ளத்து நண்ணுவித்தான் கண்
[ணோக்கால்
யானென் றெருமுதலுண் டென்றமயல் சாய்ந்தொழியத்
தானென் றியவொருமெய்த் தன்மைநலஞ் சாற்றரிதே.

### உஎ. சற் கதி

(வெண்பா)

815. காட்டிக் கொடுத்தவருட் கண்மணியின் கண்ணொளியில்
வீட்டுக்கோர் வாயில் விளங்கலால்—வீட்டுப்
புலந்தன் சொரூபவருட் போதமே யாகக்
கலந்ததுதா னேசற் கதி.

(கொச்சகக் கலிப்பா)

316. வடித்தளித்த மோன மவுனூப தேசப்
படிப்பினையா லென்னைப் பராங்கதியிற் சேர்த்தான்
எடுத்தருள வென்னை யிருட்பாழ்விட் டேற
மடுத்தபரஞ் சோதி வசீகரநோக் காலே.

குறிப்பு:- ஏற எடுத்தருள எனவும், நோக்காலே வடித் தளித்த எனவும் இயையும்.

317. சந்நிதிசார்ந் தோரகத்திற் சாட்சாற்கா ரானுபவ
மெய்ந்நலன்சேர்க் கின்றவருள் வித்தகன்மெய்க் கண்
[ணோக்கம்
பொய்ந்நவைசேர் பாசவிருட் பொக்கமறப்போக்கு
செந்நெறியா வென்னைச் சிவகதிசேர் வித்ததே. [மொளிச்

௨அ. விழிப் புறல்

(குறள்)

318. குருநாதன் மோனக் குறியா லடைந்தேன்
வெருவா வியல்சேர் விழிப்பு.

௨௯. துரீயம்

(கொச்சகக் கலிப்பா)

319. சுற்றுமுற்று நோக்கிச் சுழன்று கலங்கலுற்றேற்
கற்றமறப் பொங்குஞா ஞதித்தன் சாதித்த
பற்றற சுத்தவருட் பார்வையாற் பாழ்கரக்க
முற்றியது சிற்பரமா மோனத் துரியமே.

320. தன்னிலே தானுந் தழைத்தொளிர்சற் போதவருள்
வன்னமா வான்ட வரோதயன்கூர் கண்ணேக்கால்
என்னதுநா னற்ற வியற்சிற பரானுபவந்
துன்னியது மோனத் துரியவெளி யாகவே.

321. கள்ளமனத் தாபக் கவல்கடிந்த கண்ணேக்கால்,
துள்ளலரு சுத்தத் துரீய சொரூபமா
வுள்ளுணர்வி லென்னை யுணர்த்தினன் மெய்யாக
நள்ளலுற் ருரை நழுவவிடாப் பெம்மானே.

822. சுத்தவருட் சிற்பதத்தே தூங்காமற் றூங்குகின்றேன்
மத்தமனப் பாச மயக்கக் கலக்கமற
அத்தமியா ஞான வருட்பிழம்பா வாண்டபிரான்
புத்தமுதக் கண்ணோக்கம் பொங்கலாற் புந்தியிலே.

## ௯0. அருள்வெளி

(குறள்)

823. மோனந் தெளிந்த முனீந்திரன்கண் ணோக்கிலருள்
வானந் துலங்கிற்று மன்.

(வெண்பா)

824. காருயிரை வெள்ளுயிராக் காணும் பரமசிவக்
காருணிக ஞனவருட் கண்ணுளன்—வீரியமெய்ஞ்
ஞானவொளி சான்றகுரு நாதனருட் பார்வையால்
வானவெளி யாய்த்தென் மனம்.

825. தூண்டுமெய்ஞ் ஞான சொரூப குருரமணன்
கீண்டுமன மாயைக் கிழங்கழிய—நீண்டவருட்
கண்ணோக்கா லென்னைக் கடைக்கணித்தான் சுத்த
விண்ணோக்கிற் றென்றன் விழி. [வருள்

826. நோக்கியமெய்ஞ் ஞானக்கண் ணோக்கமே யாக்குசிவ
பாக்கியமா நாயேன் படைத்தபயன்—தாக்கி
யடர்த்தென்னைத்தன் பாதத் தடக்கினன் பார்வை
யிடத்தொளிர்வ தென்மெய் யியல்.

827. அத்தன் னியலே யமிர்தத் துவமார்ந்த
சுத்தவரு ளான சொரூபமாய்—முத்தமா
மோன வியற்பரமா முற்றுங் கடந்தவெறு
வானமா வைகு வது.

(கொச்சகக் கலிப்பா)

828. தோன்றுலகக் கற்பனையிற் றேய்ந்துழன்ற பேயேனை
ஆன்ற வகன்பெருவாழ் வான சுவானுபவத்
தூன்றுவித்த வாண்டா னுறுதிசேர் கண்ணோக்காற்
பூன்ற வருள்வெளியாப் பொங்கியதென் னுண்மையே.

829. கோச வகப்பேய்க் குடிலமனத் தால்விளைந்த
பாசபந் தக்கற் பனையறக்காண் சிற்பரமெய்த்
தேசன்கூர் வாள்விழியாற் சிச்சடம்பே தித்தலால்
ஆசகல்பே ரின்ப வருள்வெளியாத் தீர்ந்தேனே.

830. அடியனேன் வாழ்வுக்கோ ராதரிச மாகப்
படியிலே நின்றவருட் பார்ப்பான்கண் ணோக்கால்
அடியனேன் கண்டே னருள்வெளியா வுள்ளத்
திடையறா தோங்கு மியற்சிற் பரமே.

831. தடையான பாசத் தடுமாற்றஞ் செற்ற
வுடையான்கண் ணோக்கா லுருத்தெளிந்தேன் மோகப்
படையாது மென்முற் படரகில் லாவா
றடியே னருள்வெளியா வார்ந்தமைந் தேனே.

குறிப்பு: உரு, சொரூபம்

832. கைவல்ய ஞானவருட் கற்பகமா வுள்ளபிரான்
உய்வதே நோக்குவா ருள்ளத் துணர்வொளியாய்ப்
பொய்வளர்வெம் பாசமறப் போக்குமோர் நோக்கினால்
ஐவளர்வாழ் வாவெற் கருள்வெளியா நின்றானே.

833. கற்பனைதீர் சுத்தவருட் கைவல்யப் பெற்றியே
சிற்பரமாத் துன்று சிவானுபவச் சீர்மையென்பர்;
தற்பரமா மந்தநிலை சற்குருதன் கண்ணோக்கா
லற்பனே னுள்ளத் தருள்வெளியாப் பொங்கியதே.

834. தண்மைசேர் சாந்தி தழைத்திடவென் னுயிருக்
குண்மைநிலை யுள்ளத் துணர்த்தினான் கண்ணோக்கால்
வண்மைசேர் சுத்தவருள் வானமே யென்னுருவா
நுண்மைசேர் கைவல்ய நோக்கங் கிளர்ந்ததே.

835. பேசற் கரிய பெரும்பிரான் கண்ணோக்கால்
மாசற் றொளிர்சொருப மாட்சிநான் கண்டுகொண்டேன்
வீசுற்ற மாயா விலாசமாங் கற்பனையிற்
பாசப் படாமலருட் பாரவெளி விஞ்சியதே.

836. மத்தமனம் மாயமாத் தான்கரக்க மத்தனேன்
சித்தமே சுத்தவருட் சிற்பரமா நோக்கினன்;
அத்தமியா மோன வருள்வெளியே யான்றபர
வித்தகமெய்க் கண்ணு விளங்கவாழ் கின்றேனே.

837. உள்ளக் குளிர்ச்சியரு வுண்மைஞா னனுபவ
வெள்ளவருட் பார்வையொளி வீசுமோர் தேசனல்
உள்ளத் தனுதியா வுற்றமலப் பாழிருள்கெட்
டுள்ளலற வுள்ளுசிவ யோகவெளி யுற்றதே.

838. ஊகமனக் கற்பனைசே ரூன வகங்கார
மோகமறச் செற்றகுரு மூர்த்தியருட் கண்ணேக்கால்
ஏக சொரூப மிதயத் திலகியது
பாகமற்ற சுத்தப் பரவெளிதா னாகவே.

839. அருட்கட் டளையா லடிக்கடிமை யாக்கி
மருட்கட் டறுத்தகுரு வாள்விழிநோக் கத்தால்
வெருட்கற் பனைதீர் வெறுவெளியா முண்மைப்
பொருட்கட் பொருந்தியதென் புத்தித் தெளிவே.

840. தானேதா னாகத் தழைத்தொளிர்சச் சிற்சொருப
வானேநா னவதன்றி மற்றெதுவு நானல்லேன்,
கோனான சற்குருதன் கூர்நோக்காற் கட்டவிழ்ந்து
மோனனு பூதி முகக்கலுற்ற வாற்றலே.

841. ஈடுயர்வில் லாமெய் யிறையோன் பதம்பெறத்தற்
கூடலுற்ற வென்னைக் குறிவைத்துக் கொல்வான்போ
லூடுருவு நோக்கா லுளந்திறக்க வொட்பநுட்ப
வீடு விசுத்த வெளியா விளங்கியதே.

842. மத்தமனக் கற்பனையின் மாழ்கலுற்ற பேயனேற்
கத்தனருட் பார்வை யகங்கிளரப் பொங்கலாற்
பித்தலாட் டக்கனவு பேர்ந்தொழிய வென்னுருவு
சுத்தவெளி யாகச் சுடர்விட் டொளிர்ந்ததே.

843 புன்செய் நிலமான புல்லியே னுள்ளத்தை
நன்செய் நிலமா நலங்கிளர மாற்றியவென்
மஞ்சன் குருரமணன் மாட்சிசேர் கண்ணேக்கால்
விஞ்சைசேர் சுத்த வெளியா விளைந்தேனே.

844. காரா ணவச்சிறைதன் கண்ணுற் கடுவெளியாப்
பேரா வொழியப் பிரான்கூர்த் தருளினன்
சீரா வொளிர்சொருபச் சிற்பரமே யுள்ளமாப்
போராநின் றென்னைப் புதுக்கியது பொற்பவே.

845. துள்ளுமகப் பேய்விளியச் சுட்டெரித்தான் கண் [ணேக்காற்
கள்ளமன மாயைக் கலக்கமற வுள்ளுணர்வு
தெள்ளமுத மான சிவசொருப சுத்தவருள்
வெள்ளவெளி யாக விளைந்ததனு பூதியே.

## ௩௧. ஒளி வெளி

(வெண்பா)

846. பிரமாதத் தாலழிந்த பித்தனேன் சித்தக்
கருமாயக் கள்ளமறக் கண்டான்—அருளாற்
சிதாபாச மானமருட் சித்தமலந் தீரச்
சிதாகாச மானேன் சிறந்து.

847. ஒளிக்கொளியா முண்மை யுணர்வா லடியே
னிளிவரல்கெட் டின்பநிலை யெய்தக்—களிவளர்செங்
கண்ணு லெனது கருத்தைக் குடைந்துகண்டான்
உண்ணு ரமுதவொளி யூற்று.

848. ஓங்குசிவ ஞான வொளிப்பிழம்பாங் கண்ணேக்கால்
ஈங்கிதயத் தூடுருவ நோக்கினன்—ஆங்கே
யருட்சோதி யாக வகங்கிளர்மெய்ப் பாதப்
பொருட்சோபை பொங்கிற் றுலகு.

(கொச்சகக் கலிப்பா)

849. அந்த ரியாமியா வாண்ட வருட்பிரான்
விந்தையிலும் விந்தை விசுத்த வொளிவெளியாச்
சொந்த சொரூபந் துலங்குவித்த கண்ணேக்காற்
பந்தபா சக்கற் பனைகழன்று போனதே.

850. தெளிவான சுத்தசிவச் சிற்பிரான் கண்ணேக்
களைவா லரும்பரவாழ் வார்ந்தே னடியேன்,
களிசேர் மயக்கக் கடும்பாழ்ஞ் சிறைவிட்
டொளிசேர் வெளியே யுறையுளா வுற்றே.

851. புரமான மூன்றுமறப் பொங்கு துரீயப்
பரமோப சாந்தப் பதத்திலே யென்னைத்
திரமாக வைத்தவருட் சிற்பரன்கண் ணோக்கம்
உரமா வுளத்தை யொளிவெளியாக் கிற்றே.

852. பம்பிப் பரந்துலகப் பாழிலுழன் றேனுக்கு
நம்பத் தகுந்தகுரு நம்பனருட் கண்ணோக்கால்
*இம்பரும்ப ரெல்லா மிதய வெளியொளியில்
வம்பியல்சேர் மாய மனோமயமா மாழ்கிற்றே.

*இம்பரும்பர்–இம்மை மறுமை.

853. விஞ்சைசே ருண்மை விளங்கவகத் தென்னுருவாச்
செஞ்செவே யாண்டவருட் சிற்பரன்கண் ணோக்கத்தால்
வஞ்ச மயக்க மனக்கற் பனையகல
நெஞ்ச மொளிவெளியா நின்றதுகாண் மன்றவே.

854. வேண்டவொன் றில்லா விழுப்பதமா முண்மைநிலை
காண்டியென் றுள்ளத்தில் கைவல் லியசொருபந்
தூண்டிஞன் பார்வை துரீய வொளிவெளியா
மூண்டுநின் றென்னைமுழு முற்ற விழுங்கியதே.

855. நள்ளற் குரியமெய்ஞ் ஞானகுரு நாட்டத்தாற்
றுள்ளு மகப்பேய்த் துடிப்பான சேட்டையறத்
தெள்ளத் தெளிந்தவருட் சிற்பரவாழ் வெய்தலா
லுள்ளத் தொளிவெளியே யென்னுருவாப் பற்றியதே.

856. மூடுமகங் கார முனைப்பறவென் னுள்ளத்து
நீடுபரஞ் சோதியா நின்றபிரான் கண்ணோக்கால்
வீடுபே றுன விசுத்தப் பரவெளியென்
னூடுபே ராம லொளிவளரத் துன்றியதே.

857. விண்ணோக்க மான விசுத்தவருட் சிற்பரன்மெய்க்
கண்ணோக்க மென்னுட் கலத்தலால் ஐம்புலப்பாழ்
மண்ணோக்க லுற்றவென் மத்தவகப் பேய்மனந்தன்
னுண்ணோக்கி மோன வொளிவெளியாப் பொங்கியதே.

858. சீர்மைசேர் ஞானவருட் செம்பிரான் கண்ணோக்கக்
கூர்மையா லென்னைக் குறிக்கொண் டருளலாற்
கார்மயல்சே ருனமனக் கற்பனையற் றேயவுளத்
தோர்மைசே ருண்மை யொளிவெளியாப் பொங்கியதே.

859. மோனமே வாயிலா முத்திப் பரசொருப
ஞானந் தெரித்தகுரு நாதனருட் கண்ணேக்காற்
றீன மயக்கச் செருக்கான சிச்சடப்பா
மூனமற வுள்ள மொளிவெளியாப் பொங்கியதே.

860. போதவடி வானகுரு புங்கவனுஞ் செங்கணன்செய்
ஓத வொணுத வுதாரவருட் பார்வையாற்
பேதமறப் பொங்குசிவப் பெட்பான வொட்பவுணர்
வோர்தகவு மற்றவென் ஞூத்தைமனத் துற்றதே.

## ௯௨. நிஷ்டை

(வெண்பா)

861. வெருவந்த மாயா விலாசமே நாடிப்
பருவந்து நான்பாழ் படாது—சொரூபந்
தலைப்படவே வாள்விழியாற் ருக்கினுன் றன்கண்
ணிலைப்படுவ தாயிற்றென் னெஞ்சு.

862. இன்பமே யன்பா வியல்சொருப வுண்மையே
நம்பனுரு வாகவொளிர் ஞானநிஷ்டை—நம்பனருட்
பார்வையா லென்னகத்திற் பற்றலாற் சிற்சொருப
வோர்மையே பக்தி யுணர்வு.

(கொச்சகக் கலிப்பா)

863. ஆன்றகுரு நாத னருட்பார்வை யாலகம்புக்
கூன்றலுற்ற வாற்ருல் உஞற்றின்றி யேயடியேன்
மூன்றுமொன் ருக முயங்குமியல் வாலறிவே
சான்ருக நின்றேன் சதாசார நிட்டையிலே.

864. பட்டனருட் பார்வை பதிந்தவாற் ருலகத்திற்
கெட்டதுநா னென்னுங் கிரந்தியாஞ் சிச்சடப்பேய்
எட்ட வொணுத வியற்சிற் பரசொருப
நிட்டையே வாழ்வா நிலைத்ததென் னுருயிர்க்கே.

## ௯௩. சொரூப சாட்சாற்காரம்

(குறள்)

865. உலப்பற்ற வுண்மையென் னுள்ளுணர்வாப் பொங்கக்
கலப்புற்ருன் கண்ணு லிறை.

(வெண்பா)

866. அன்புப் பணிகொண் டடியேனை யாண்டவன்பே
ரின்பவருட் பார்வைக் கிலக்காகி—இன்பதுன்ப
தொந்தக் கலக்கமறத் துன்றுசொரூ பானுபவச்
சந்தவியல் பெற்றேன் சதிர்த்து.

867. பகவனருட் பார்வை பதிதலா லுள்ளத்
திகல்படுவெம் பாசபந்த மின்றாய்ப்—பகல்போற்
பரவெளியா வெங்கும் பரந்த சொரூப
வுருவிளங்கப் பெற்ற துணர்வு.

குறிப்பு: பகல் போல் விளங்கப் பெற்ற தெனக்கூட்டுக.

868. பற்றற்ற மோனவருட் பார்வையா லென்னிதயத்
துற்றொளிர்சீ ராண்டா னுருவொளியால்-சுற்றுமுற்றுங்
கண்டறிந்த யாவுமனக் கற்பனையாப் பேர்ந்தொழிய
விண்டலர்ந்த தென்மெய் யுரு.

(கொச்சகக் கலிப்பா)

869. சித்தமலந் தீரத் திருவருட்கண் ணோக்கியே
சுத்தவிஞ் ஞான சொரூபசாட் சாற்காரப்
புத்தகமொன் றேதான் புகட்டினு னுள்ளுணர்விற்
சத்தங் கடந்தசிவ சற்குருதற் சார்ந்தேற்கே.

870. ஆளா வடைந்தேனுக் காண்டா னருள்விழியாற்
கோளாம் பிரமாதக் கூற்றுதைத்த சிற்பரமெய்த்
தாளே சொரூபமாச் சாட்சாற்கா ரங்கிளர்ந்த
நாளே பிறந்தநன் ளுளாச் சிறந்ததே.

குறிப்பு:- விழியாற் கிளர்ந்த என வியையும்.

871. மானுபி மான மயக்கமறத் தேற்றியமெய்ஞ்
ஞானு ரியன்செய்த நல்லருட்கண் ணோக்கத்தால்
மோனு பூதியா மூண்டதகத் தான்றசிவந்
தானு வொளிர்சொருப சாட்சாற்கா ரத்தெளிவே.

872. வென்றிசே ராண்டவன்கூர் வித்தகக்கண் ணோக்கத்தால்
ஒன்றும் பரமசுப யோக வருட்பெருவாழ்
வென்றென்று முள்ளத் தியல்பா விளங்கலாற்
றென்றுதொட்ட சொந்த சொரூபவியல் சார்ந்ததே.

குறிப்பு:- வென்றி—அருள்வெற்றி; நோக்கத்தால் விளங்கலால் எனவும், விளங்கலாற் சார்ந்தது எனவும் கூட்டுக,

873. வீடுபே றாக விளங்கு சொரூபமா
நீடுமென் னுண்மைநிலை நேர்படநான் கண்டுகொண் [டேன்
கேடுபடா வுண்மைக் கிளரொளியா வுள்ளத்திற்
பீடுபெற வாண்ட பிரானருட்கண் ணோக்காலே.

874. மாறு வகந்தையற மாற்றியே தன்னருளுக்
கூறு வடியேனை யுண்டொழித்தான் கண்ணோக்கால்
வேறுசை யான விசுத்தப் பரசொருபங்
காணுநின் றேனடியேன் கைவல்யத் தன்மையிலே.

875. அங்கமகம் புத்தியா லாழ்ந்துலகக் கற்பனையிற்
பங்கமுறு தாண்டான் பரங்கருணைக் கண்ணோக்கால்
மங்கலவாழ் வாக மகிழ்சிறக்க வுள்ளத்திற்
பொங்கியது சுத்தவருட் போத சொருபமே

876. ஓர்மையா லாண்டவன்கூ றொட்பநுட்பக் கண்ணோக் [காற்
கார்மயல்வெம் பாழ்கழியக் கண்கூடாக் கண்டுகொண் [டேன்
கூர்மைசே ருண்மைக் குலாவான சுத்தவருட்
சீர்மையா லோங்குமென் சிற்பரமெய்த் தன்மையே.

877. மோகப் புலக்கடலின் மூழ்கலுற்ற மூர்க்கனே
னுகத்தே புக்க வருட்பிரான் கண்ணோக்கால்
தேகவகப் பேய்க்கலக்கந் தீர்ந்தொழியச் சிற்பரமே
யாகத் திளைத்தே னடியேன் சொரூபமே.

878. பற்றலரு மோனப் பதத்திலே பாழகப்பேய்
அற்றொழியச் செற்றவல் லாளனருட் பார்வையால்
இற்றெனவொண் ணாத வியற்சிற் பரசொருபம்
பற்றியதென் னுண்மையாப் பட்டப் பகல்போலே.

879. முனைத்த வகப்பேய் முனைப்பாலே பாழிற்
றுனைத்துழல் சீவத் துவங்கரக்க வுள்ளத்
தினித்த சொரூப வியல்கண்டு கொண்டேன்,
தனித்தத் துவமான சற்குருநோக் காலே.

880. என்னதுநா னென்றசெருக் கிற்றொழியத் தன்னடிக்கீ
ழென்னைத்தா னாக வியக்கலுற்றான் கண்ணோக்காற்
பின்னியமா மோகப் பிணக்காங் கிரந்தியறத்
துன்னியது ஞான சொரூபானு பூதியே.

881. எந்த வுபாதியுமென் றென்றுமெனக் கின்றான
சொந்த சொரூபந் துலங்கவென் னுள்ளுணர்வில்
விந்தையா வாண்டவருள் வித்தகன்கண் ணோக்கத்தாற்
பந்தமுத்தி யற்றவியல் பற்றியது முற்றவே.

882. கர்த்தத் துவம தியாற் கண்கலங்கிக் கற்பனையு
டெய்த்துக் கழிந்தேற் கிறைவன் கடாட்சத்தாற்
புத்திக் கலக்கமறப் பொங்கு சொரூபவருள்
வித்தைத் தெளிவான மெய்த்தவஞ்சார் வுற்றதே.

883. இரண்டற்ற சுத்த வியற்சிற் பரமாத்
திரண்ட சொரூபத் திறங்கண் டமைந்தேன்
மருண்ட வகப்பேய் மனக்கற் பனையால்,
வெருண்டவென்பா லாண்டவன்கூர் வித்தகநோக் காலே.

884. முத்தன் குருரமண மூர்த்தி முழுமுதலாம்
வித்தகன்கண் ணோக்கால் விசைத்தென் னுளத்தெழுந்த
சுத்தவருட் போத சொரூபானு பூதியின்மற்
றெத்தகைய கற்பனையு மில்லா தொழிந்ததே.

885. உள்ளாத வுள்ளமா வுள்ளவியற் சிற்பரமே
தள்ளாத வென் சொருபத் தத்துவமாக் கண்டுகொண்
[டேன்
துள்ளா ணவப்பாழ்த் துடுக்கறச்செற் றென்னையடிக்
குள்ளாக வாண்ட வுடையான்கண் ணோக்காலே.

886. வெருவரலுக் கேதுவாம் வேற்றுமையை மாற்றித்
திருவருட்கண் ணோக்கஞ் செழித்தலால் உள்ளக்
கருவிளக்க மாகக் கலந்தவனு பூதி
பருவரலாம் பாசப் படர்கெடநீ டிற்றே.

887. பொய்த்தொழிய மோகப் புடித்திரய பேதங்கொல்
வித்தகன்சற் போதவருள் வீரியஞ்சேர் பார்வை
மைத்தவகங் கார மனக்கற் பனைகெடஎன்
மெய்த்தன்மை யாக விளங்கிற் றருட்பரமே.

888. பெருமைசேர் சத்தப் பிரம்ம சொரூபத்
தொருமைசே ருண்மை யுறவெனக்குத் தன்னோ
டருமையாத் தேற்றியவென் னாண்டவன்கண் ணோக்
பரம சொரூபவியல் பற்றிற் றுளத்தே. [காற்

889. இருட்பா ழறவே யிதயத் திகப்ப
அருட்பூ ரணமா வகந்தெளிந்த வுண்மைப்
பொருட்பாக் கியமாப் பொலியுமனு பூதி
குருப்பார்வை கூடலாற் கூடலுற் றேனே.

890. ஆண்டவனுக் கொப்பாவா ராருமில்லை; பல்பிறப்பா
வீண்டியமெய்ப் புண்ணியத்தால் யானவனைக் காணலுற்
தூண்டவொணாத் துங்க சொரூபானு பூதியகத் [றேன்;
தீண்டலுறத் தூண்டினு னின்னருட்கண் ணோக்காலே.

891. தொன்றுதொட் டுள்ள சொரூபவியல் வாழ்வகத்து
முன்றிரோ தான முனைப்பாற் கரந்ததுபின்
நன்று விளங்கியது ஞான சொரூபவருள்
வென்றிசே ராண்டான் விசுத்தநோக் கத்தாலே.

892. படர்ந்தியல்ப வெல்லாம் படக்காட்சி யாகக்
கடந்து விளங்குசிவக் கைவல்ய வுண்மை
தொடர்ந்தியல்சொந் தான்ம சொரூபமே யாக
வடைந்ததுநல் லாண்டா னருட்கண்ணோக் காலே.

893. ஊணமா வென்னுயிரை யுட்கொண்ட வொட்பநுட்பச்
சோணகிரிப் பெம்மான் சொரூபவருட் பார்வையால்
ஆணவத்தோ டாவரண விட்சேப மற்றிடலும்
மாண விளங்கிற்றென் மாட்சிசே ருண்மையே.

894. ஆதமிலி நாயே னகங்கிளரப் புக்கொளிரும்
போத சொரூபவருட் புண்ணியன்கண் ணேக்கத்தாற்
போத சொருபானு பூதியுளம் பொங்கலுற்றேன்
பேத மயக்கவகப் பீழையறப் பேர்ந்தேனே.

895. சிற்பரா சத்தித் திறத்தாலென் னுள்ளத்திற்
கற்பனு மோகமறக் கண்டபிரான் கண்ணேக்காற்
சொற்பரமன் ருன சொரூபானு பூதியெழப்
பொற்புறவாழ் கின்றேன் புரண வுணர்வாலே.

896. பொன்ருத வுண்மையாப் பொங்குசிவ பூரணத்தை
நன்ருன சுத்தமெய்ஞ் ஞானகுரு நாட்டத்தாற்
றென்ருன சொந்த சொரூபமாத் தோய்தலுற்றேன்
ஒன்றையிரண் டாக வுறழ்ந்தவகப் பேயேனே.

897. ஆன்றகுரு நாத னருட்கண்ணேக் கென்பாலே
யூன்றலா லுள்ளத் துபசாந்த போகமுற
மான்ற மயக்க மனக்கற் பனேயகன்று
பூன்ற சொரூபானு பூதி புணர்ந்ததே.

898. கருமமோ கக்கார் கழன்றெழியக் காணும்
பரமசிவ மான பகவனருட் கண்ணேக்
குருவலாற் கூர்த்தொளிரவ் வுள்ளுணர்விற் கற்ப
துருமமா வுள்ள சொரூபஞ்சார்ந் தேனே.

குறிப்பு:- அவ்வுள்ளுணர்வு – அழகிய உள்ளுணர்வு,
கற்பதுருமம் – கற்பகத் தரு.

899. ஈட்டத் தமத்தி லெழுந்தியல்யா னென்னுமனக்
கோட்டப் பசாசைக் குலேத்துத்தன் னுண்மையுருக்
காட்டிக் கொடுத்தவருட் கண்மணியின் கண்ணேக்கிற்
றேட்டுக் குரிய திரவியஞ்சேர் வுற்றேனே.

900. நெஞ்சாரத் தன்னே நினேயுமெய் யன்பரகத்
தெஞ்சா வொளிப்பிழம்பா வேய்ந்தவருட் கண்ணேக்
நஞ்சான மோக நவைப்படுபா ழைம்புலத்திற் [கால்
றுஞ்சாது ஞான சொரூபமா வுய்ந்தேனே.

## ௯௪. ஐக்கியம்

(குறள்)

901. கற்பனு மோகக் கருத்தறச்செற் றுண்டவன்பால்
அற்புதமா வொன்றிற் றறிவு.

902. இருமைதீ ருண்மை யிறைவன்கண் ணேக்கால்
ஒருமையுணர் வுற்ற துளத்து.

903. தானு வொளிர்சொருபத் தன்மையா மோனமே
வானுன சுத்தவருள் வைப்பு.

(வெண்பா)

904. சிற்பரமா நின்றகுரு சீடனே னுள்ளத்து
டற்புதமா நோக்கி யருளியதாற் – கற்பிதமா
மோக வகந்தை முனேப்பற்று நானவனே
டேக சொரூபமா னேன்.

905. உள்ளமே யுண்மை யொளியாகக் கண்டபெரு
வள்ளலருட் பார்வையே வைகுந்தம்—உள்ளவெனக்
கன்னியமில் லாத வகண்டவருட் சிற்பரமா
மன்னியநல் லுண்மைசேர் வாழ்வு.

(கொச்சகக் கலிப்பா)

906. மோகாந்த காரத்து மூல முனேயான
தேகான்ம பாவமறச் செற்றவருட் கண்ணேக்கால்
ஏகான்ம வுண்மை யியல்விளங்க வாண்டவனே
டேகாந்த மாக வியைபுற்றே னின்புறவே.

## ௯௫. கைவல்யம்

(கொச்சகக் கலிப்பா)

907. இருளகப்பா ழாக வியல்விகற்பம் மங்கத்
தெருள்வளக்கண் ணேக்கவிறை சேர்ந்தவென் னுள்ளத்
தருள்விளக்க மான வமைதியுணர் வூறப்
பொருள்வளக்கை வல்லியமாப் பொங்கியது வாழ்வே.

908. ஓலக்க மாகவென் னுள்ளத் தமர்ந்தவருட்
கோலக்கம் பீர குருநாதன் பார்வையால்
ஆலிக்கும் மோகக்கா ராணவப்பாழ் கெட்டுடைய
மேலைக்கை வல்யவியல் வீடுவெளி யாயிற்றே.

909. அருவருக்கத் தக்க வகப்பே யறிவாற்
பருவரற்பட் டேங்கிநான் பாழ்படா துண்மைத்
திருவருட்கை வல்யஞ் செழிக்கவென்னை யாண்ட
குருவருட்கண் ணோக்கக் குலாக்கூ றரிதே.

910. வீணனென் றென்னை வெருதே குணஞ்சான்ற
மாணவனு வாண்ட வரோதயன்செங் கண்ணோக்கா
லாணவப்பா ழான வவிச்சையற வுள்ளத்திற்
காணலுற்ற வுண்மைசிவக் கைவல்யத் தன்மைத்தே.

911. ஓமெனவே யுள்ளத் துறைசொருபன் கண்ணோக்காற்
சேமவாழ் வான சிவானுபவஞ் சேரவெனக்
கேமுறவே யுள்ளத் தியைந்ததுதற் பூரணமாக்
காமுறவே தக்கவருட் கைவல்யக் காட்சியே.

912. ஆண்டவன்கண் ணோக்கா லகப்பா ழறக்கெடலாற்
காண்டலுற்றேன் சுத்தவருட் கைவல்ய மோனநிலை
ஈண்டியபே ரின்ப வியல்வாழ்வா வுள்ளத்து
மூண்டதுசுத் தாத்துவித முற்றமுழுச் சிற்பரமே.

913. சாற்றற் கரிய சதாசிவமா வென்னுளத்தில்
வீற்றிருக்க லுற்றவருள் வித்தகன்கூர் கண்ணோக்கால்
மாற்றற் கரிய மயக்கவிருட் பாழ்ம்பிறப்பை
மாற்றிக் கலந்தேன்கை வல்லியமெய்த் தொல்லியலே.

914. ஆட்செய்யப் பெற்றேனுக் காண்டவன்கண் ணோக்கத்
சாட்சியா வுள்ளவருட் சைதன் னியமேமெய்க் [தாற்
காட்சியா வுள்ளங் கலந்தொளிர்சாட் சாற்கார
மாட்சியிலே கைவல்ய வாழ்வு மலர்ந்ததே.

915. எம்பிரா னென்னுள் ளிதயத் தெழுந்தருளி
வம்புறுபொய்ம் மாய மனப்பா ழிருள்கடிந்த
செம்பிரா னுணர்சிவச் செங்கதிரோன் கண்ணோக்கால்
மொய்ம்புறுமெய்க் கைவல்ய முத்திநலம் பொங்கியதே.

916. ஈண்டியசற் போத வியற்பரத்தில் விந்தையா
மூண்டெழுந்த மோக முனைப்பாம்பொய்த் தோற்றமற
வாண்டவன்கண் ணோக்கா லவிர்ந்ததுமற் றுணவத்
காண்டலரு சுத்தவருட் கைவல்யக் காட்சியே. [தோர்

917. துள்ளுங் கருத்தாற் சுழல்சொப் பனத்தோற்றத்
துள்ளங்க லாய்த்தேனுக் கொள்ளியோன் கண்ணோக்
உள்ளங் கலந்த வொளிப்பிழம்பிற் பொய்ம்மாயக் [கால்
கள்ளங் கரக்கவருட் கைவல்யஞ் சேர்ந்ததே.

குறிப்பு: அங்கலாய்த்தல் - துக்கித்தல்.

918. கைவல் லியமெய்க் கடவுட் பெரும்பதங்கண்
டுய்வுற்றே னுள்ளத் துறுதிபெற நோலாதேன்,
உய்வுள்ளு வாரிதயத் துள்ளுணர்வாய் மோனவருள்
செய்வள்ளி யான்செய் திருக்கடைக்கண் ணோக்காலே.

## கூ. சிவாநுபவம்

(குறள்)

919. சித்தந் தெளிந்தேன் சிவானுபவத் தேறலுண்டேன்
அத்தனங் கண்ணோக்க மார்ந்து,

920. செஞ்செவே சுத்தசிவச் சீர்மையொளிர் வித்தகருள்
விஞ்சைகூ ராண்டான் விழி.

921. ஒளிவெளியா வுள்ள வொருத்தன் கடாட்சத்
தெளிவால்வாழ் கின்றேன் சிவத்து.

(வெண்பா)

922. இன்பவுணர் வூற விதயத்தே யாண்டவன்பெய்
யன் புமய மோன வருட்பார்வை—என்பரமன்
ருக வளித்த தருட்பரமாத் துன்றுசிவ
போக வுணர்ச்சிப் பொலிவு.

923. கருணை விளங்குதிருக் கண்ணு லடியே
னிருளைத் துரந்த விறையோன்—அருளி
லழுந்தியவென் சித்தத் தனந்தசிவ போக
மெழுந்தது நன்கார வெனக்கு.

(கொச்சகக் கலிப்பா)

924. நவநாத சித்தர் நயக்கும்மெய்ஞ் ஞானத்
தவராஜ ராஜ தயாமூர்த்தி நோக்கால்
பவமாய மோகமனப் பாசங் குலேந்து
சிவஞான சித்தியாற் சேர்ந்ததுமெய் வாழ்வே.

925. திடப்படத்தற் சேர்ந்த திருத்தொண்டர் தம்முட்
கடைப்பட்ட நாயேன் கருத்தில் விளங்கிற்
றடிப்படையா நின்றேங் கதீதசிவத் தன்மை
உடைப்பிரான் கண்ணேக் குளங்கலத்த லாலே.

926. ஏன்றெனை நன் காண்ட விறைரமணன் கண்ணேக்கால்
ஆன்றவருள் வாழ்வா வகங்கிளரப் பொங்குவது
மான்றவகங் கார மனப்பாழ் கரந்தொழியப்
பூன்றசிவந் தானுப் புணர்ந்தவனு பூதியே.

927. உந்தி யெழுந்தபா மூத்தையகப் பேயுணர்வு
நொந்தவகத் தூடுருவி நோக்கினன் கண்ணேக்காற்
சிந்தை கடந்த சிவத்திலே சுத்தவருள்
விந்தைசேர் தாதான் மியவுணர்வால் வாழ்ந்தேனே.

குறிப்பு: நொந்துதல் - அழிதல்; கண்ணேக்கால் வாழ்ந்தேன் என வியையும்.

928. பாசமா மோகவகப் பாழ்ங்கனவாங் கற்பனையின்
பூசலா லுள்ளம் புழுங்கி யழுங்கினேன்,
கோசமறக் கண்டவருட் கோமான் குலாநோக்காற்
றேசனு வுள்ளந் தெளிந்தேன் சிவமயமே.

929. நன்ருன யாதோர் நலமுமிலா நாயேற்குக்
குன்ருத மோனவருட் கோமான் கடாட்சத்தால்
ஒன்ருக வுள்ளத் தொளிர்சொருப மெய்யுணர்வு
பொன்ருத சுத்தசிவ போகமாப் பொங்கியதே.

930. பொய்ம்மா லனைந்தவகப் பொச்சாப்பாம் போதமுனைப்
பம்மா வகன்றொழிய வங்கணுற் செற்றருள்செய்
யம்மானுக் காளா வடைந்தேன் சிவசொருபச்
செம்மாண் பதமடைந்து செம்மாக்க லுற்றேனே.

931. *வட்டனேன் மத்தமன மாசற் றிதயத்திற்
பட்டனருட் பார்வையாற் பற்றுமற் பற்றியது
துட்டவகங் காரமனச் சூதற்றார் தம்மகத்தில்
வெட்டவெளி யாக விளங்கும் பரசிவமே.

*வட்டனேன்– சூதனேன் [வட்டு – சூதாடு கருவி]

932. சேறுற்ற சித்தக் கலக்கமறச் சிற்பரமாத்
தேறத் தெளிந்த சிவானுபவம் பொங்கலுற்றேன்
மாறுற்ற சிச்சடமா மாயமனம் வெவ்வேறாக்
கூறுற் றொழிவாற் குருவருட்கண் ணோக்காலே.

933. ஊனென் றுயிரென் றுளமுணர்வென் றரிருளென்
றூனவனைத் தூடுருவி யாண்டவருட் கண்ணோக்கால்
ஊனமொன் றில்லா வுதாரப் பரசிவமே
நானென் பதன்பொருளா நண்ணக் கிடைத்ததே.

934. ஆரியன்கண் ணோக்கா லடியே னகத்தலர்ந்த
கூரியமெய்ஞ் ஞானக் குலாவா லகமகமென்
றோரியல்பா வுள்ளத் தொளிர்ந்ததுசற் போதவருள்
வீரியஞ்சான் றோங்கு விசுத்தப் பரசிவமே.

## ௯௭. பிரம்மாநு பூதி

(கொச்சகக் கலிப்பா)

935. காணக் கடவசிவக் கைவல் லியமியல்பாப்
பேணக் கிடைத்தேன் பிரம்மானு பூதியா
மாணக் கடவ மனோதீதச் சிற்பரமெய்த்
தூணமாஞ் சோண சொரூபன்கண் ணோக்காலே.

936. ஆதரங்கொண் டாருக் கருள்வடிவ மானசிவ
தாரகமா வுள்ள சரண்ணியன்சற் போதகுரு
நோதகவு தீர்தருகூர் நோக்கா லிதயத்திற்
பேதமற்ற சுத்தப் பிரம்மமா நின்றனே.

937. பட்டன் சொரூபவருட் பார்வையா லுள்ளத்திற்
பிட்டனேன் சுத்தப் பிரம்மானு பூதிபெற்றேன்;
கட்டறுமெய்ஞ் ஞானக் கடவுட் கதிரொளியால்
விட்டதுகா ராணவப்பேய் வேசறவாம் பாசமே.

938. மரண ஜனன மயக்கமாச் சேர்கா
ரிருணலிய லுற்ற விகப்பா ழிகப்ப
அருணகிரி யாண்டா னருட்கண்ணேக் கால்வல்
லரணமா வுற்ற ததீதப் பரமே.

939. *புகாப்புகா வாகப் புசித்தறிவைப் பொய்யைச்
செகாச்செகாச் சின்னபின்னஞ் செய்தருளி யாண்டான்
பகாப்பகா முற்றமுழுப் பார்வையாங் கூர்மை
தகாத்தகா வென்னையுமத் தற்பரமாக் கிற்றே.

*புகா – உள்ளத்திற் புக்கு

## ௩அ. ஞானனுபூதி

(குறள்)

940. பரமனருட் பார்வையாற் பாசமறப் பற்றிற்
றெருமைசே ருண்மை யுணர்வு.

941. பார்ப்பான்கண் ணேக்காற் பரிபாக முற்றவெனக்
கோர்ப்பா லடைந்த துணர்வு

குறிப்பு:- ஓர்ப்பு - விசாரம்; உணர்வு - மெய்யுணர்வு.

(வெண்பா)

942. வண்மைபெற வாழ்வு மலர்ச்சியுற வென்சொருபக்
கண்மணியின் பார்வை கலத்தலால்—உண்மயல்போய்
நல்லசிவ யோக நலங்கிளர்ஞா னனுபவம்
புல்லியதென் புந்திப் புலம்.

943. பூசலிட் டார்க்குமனப் பொல்லாங் கொழிந்துசிவ
நேசமுற் றுர்ந்தமன நிம்மதியாற்—பாசமறு
ஞானவாழ் வென்னுளத்து நண்ணியது சற்குருதன்
மோனவருட் பார்வை முகத்து.

944. விளங்கு சொரூபவருள் விஞ்சையா லன்ப
ருளங்கொள்ளே கொண்ட வுடையான்—களங்கமில்சற்
போதவருட் பார்வையொளி புந்தியிற்சந் தித்தலின்ஞா
னுதவன்று னுயிற் றகம்.

945. களிபெருக்கும் மோனவருட் கண்ணு வடியே
னுளமுருக்கி யுள்ளுணர்வா வுற்றுன்—எளியருக்கு
வற்றுப்பே ரின்ப வளஞ்சுரக்கும் போதவருட்
பற்றுக வுள்ள பரன்.

(கொச்சகக் கலிப்பா)

946. சித்த மலத்தாற் செருக்கிமனக் கற்பனையூ
டெய்த்தொழிந்த பொல்லே னிதயத்தை யூடுருவி
அத்தனருட் பார்வைபுக் காங்கே பரமார்த்த
வித்தகமெய்ஞ் ஞான விபூதி விளங்கியதே.

947. உறுதிப் பொருளொன் றுணரா துயிரூழ்த்
தறவைப் பிணமா வழிந்தவென் னுள்ளத்
தறிவுப் பிழம்பான வான்மானு பூதி
பெறுவித் தருளியதோர் பெம்மான்கண் ணோக்கே.

948. எதிர்ந்தபுலஞ் சற்று மிரண்டுபடா தென்னோ
டிதம்படவொன் றாக வியல்வுறமெய்ஞ் ஞானப்
பதந்தனிலென் வாழ்வைப் பதிவித்தா னுண்டான்
அதெந்துவெனும் மோன வட்ருபார்வை யாலே.

949. என்னை யகலா விறைவனருட் கண்ணோக்காற்
றன்னை விடாத சுதாமோன ஞானமுற்றேன்
அன்னியமாம் பேத மகந்தைமனக் கற்பனையே
என்னுருவு காணி லியற்சிற் பரவெளியே.

950. சுத்தசிச் சத்தித் துலக்கத்தா லன்றிமற்
றுய்த்தறிய வொண்ணுத வுண்மைப் பரசிவத்திற்
புத்தமுத ஞானு பூதி புணர்ந்ததெனக்
கத்தனருட் பார்வை யகங்கிளர்ந்த வாற்றுலே.

951. மங்குலக வாழ்விலே மட்கிமனங் கொட்கலுற்ற
வெங்களைநன் காண்டபே ரின்பவருட் செம்பிரான்
அங்கணோக் காலிதயத் தாசாபா சங்கழலப்
பொங்குசிவ ஞானு பூதியில்வாழ் கின்றேமே.

குறிப்பு:—கொட்கல் - சுழலுதல்.

952. சோண சயிலச் சுடர்விளக்கத் தத்துவமா
வீணனே னுள்ளத்தில் விஞ்சைசேர் கைவல்யங்
காணவே காட்டியவென் கண்மணியின் கண்ணேக்காற்
பூண விளைந்ததுசற் போதானு பூதியே.

953. உண்மெணக் குருகவென் னுள்ளமுறை சுத்தவருள்
வண்ணப் பிரான்சொருப மாட்சிசேர் கண்ணேக்காற்
பண்ணக் கடவதெல்லாம் பண்ணி முடிந்தாங்கு
நண்ணிற் றுபசாந்த ஞானனு பூதியே.

954. மோன வுணர்வொளியா மூண்ட சொருபவருள்
வானமா வென்னை வளைத்தபிரான் கண்ணேக்கால்
யானென்னு மீன மகன்றெழியக் கைவல்ய
ஞான விபூதியா நண்ணியதென் னுண்மையே.

955. அண்மையிலே யென்னை யமர்த்திக்கொண் டாண்டவன் [கூர்
நுண்மைசேர் நல்லருட்கண் ணேக்கால் அடியேனுக்
குண்மையிலே யாவு மொடுங்குஞா னனுபவ
வண்மையே கைவல்ய வாழ்வா மடுத்ததே.

956. காரா ணவப்பாழ்ங் கலக்கமனக் கற்பனையென்
றோரா துலகியனா டோகையாற் பாழ்த்தனுற்றேற்
காரா வமுதஞா னனுபவம் பொங்கியது
சீரான சுத்தவருட் சீமான்கண் ணேக்காலே.

957. தோற்ற வொடுக்கமற்ற சுத்தப் பரசிவமாத்
தேற்ற மியல்சொருபத் திட்பஞா னனுபவம்
மாற்ற மனங்கழிந்த மாண்பா லியன்றதகத்
தாற்ற வருள்வெளியா வாண்டவன்கண் ணேக்காலே.

958. குருமூர்த்தி யான குகேச னளித்த
பரமார்த்த ஞானவருட் பார்வைமீக் கூர்வாற்
றருமார்த்த காமத் தடுமாற்றந் தீர்ந்தாங்
கரைமாத் திரையி லடங்கலுற் றேனே.

959. எப்பொழுது முள்ள வியல்பாமென் னுண்மையைமற்
றிப்பொழுதே நோக்கி யிதயத் தருட்பரமா
நிற்பதொரு மோனமெய்ஞ் ஞேயானு பூதிநிலை
அற்பனே னுர்தலுற்றே னண்டவன்கண் ணேக்காலே.

960. ஆனந்த மோன வருட்சிற் பரவெளியிற்
*போனந் தெளிந்த புலவோன்கண் ணேக்கலால்,
ஊனந் தருபா ழுடலுலகத் துன்பமறு
ஞானந் தழைத்தேனேர் நல்லசிவத் தன்மையிலே.

* போனம் (போனகம்)–நுகர்ச்சி, அனுபவம்

961. சிரிப்பாணி யாகநான் சித்துருவன் சீமா
னரிப்பாள னுகமருண் டல்லலுற்றுங் கென்னை
மருட்பாழிற் சீவனு மாழாந்து நொந்தேன்
குருப்பார்வை யாலிதயங் கூடிற் றுணர்வே.

குறிப்பு:—'சித்துருவன் நான் சிரிப்பாணியாக மாழாந்து நொந்தேன்' என வியையும்.

962. உணர்வோ டொழிவி லொடுங்கின லன்றிப்
புணர்வரிய வுண்மைப் புலங்கண்டு கொண்டேன்
தணவலரு தற்பரமெய்த் தத்துவமா வுள்ளத்
தணவலுற்ற வாண்டா னருட்கண்ணேக் காலே.

963. தெரிவரு ஞானச் செழுந்தீப் பிழம்பாங்
குருவருட் பார்வை குலாவலின் மோகக்
கரவுசே ருன்மத்தக் காரா ணவங்கெட்
டுரவுசே ருண்மை யுணர்வுபெற் றேனே.

964. நஞ்சியல்சேர் மோக நவைப்பா முலகியல்கண்
டஞ்சியடைந் தேனை யநட்பரிவாற் கண்ணேக்கி
வஞ்சவகங் கார மயக்கமனக் கற்பனையை
விஞ்சியமெய்ஞ் ஞான விழுப்பதத்திற் சேர்த்தானே.

## கூக. அறிவுறல்

(குறள்)

965. வெறுவெளியா வுள்ளவருள் வித்தகன்கண் ணேக்கா
லறிவுருவா நின்றே னகத்து.

966. உணர்வு தெளிந்தே னுடையா னருளேக்
கணவலுற்ற வாற்ரு லகத்து.

(வெண்பா)

967. மேவியதெய் வீக வியன்கருணே யாலெனக்குச்
சேவியனு வாய்த்த சிவரமணன்—பார்வையாற்
கள்ள வகந்தைமதி கற்பனேயாப் பேரவுளத்
துள்ளதே யாயிற் றுணர்வு.

968. சிற்பரமா வுள்ளவருட் சீர்மையாற் சேர்ந்தோரைக்
கற்பகமாக் காக்குங் கடப்பாட்டால்—இப்புவியிற்
ருேன்றியவென் ஞண்டான் சொரூபவருட் பார்வையால்
ஆன்றமையப் பெற்ற தறிவு.

969. சிவசொருப மோனத் தெளிவாலே யன்றி
எவருமறி யொண்ணு வியலான்—அவனியில்வந்
தாண்டகுரு நாத னருட்பார்வை யால்வெளியாய்
ஈண்டவறிந் தேனவ் வியல்.

(கொச்சகக் கலிப்பா)

970. பிறிதி னியைபு சிறிதுமற்ற பெட்பால்
அறிவு பரிசுத்த மாகத் துலங்கப்
பெறுவதே வுண்மைப் பெருந்தவமாக் கண்டேன்
அறிவுருவா வாண்டவரு ளங்கணன்கண் ணலே.

971. என்னே யறியா திதயத் துறைந்தபிரான்
றன்னே யறிந்து தழைத்தேன் சதாசிவமாத்
துன்னு சொரூப சுவானுபவ மோனவுணர்
வென்னிலெழக் கண்ட விறைவன்கண் ணேக்காலே.

## ௭௦. பரமார்த்த பதமுறல்

(வெண்பா)

972. ஆளா வடைந்தே னடிகளருட் பார்வையால்
மீளா விழுப்பதத்து மேவலுற்றேன்—மாளாத
சாந்தி நிறைந்த தடங்கருணேக் கண்ணேக்கக்
காந்திமய மாய்த்தென் கருத்து.

(கொச்சகக் கலிப்பா)

973. அன்புருவா வாண்ட வருட்பரமன் பார்வையால்
துன்பவின்ப தொந்தமனச் சூதற் றெளிர்தரும்பே
ரின்பமா மோன வியற்பரமார்த் தப்பதத்தில்
அன்புருவா நானு மமைந்தே னமுந்தவே.

974. *வற்பாருக் கொப்பாம் மலத்தைக் குலைத்தென்னை
நற்பாலுக் குய்த்தவன்மெய்ஞ் ஞானவருட் பார்வையால்
அப்பாலுக் கப்பாலா மந்தப் பரமெனக்கின்
றிப்பாலுக் கிப்பாலா வெய்திற் றிதயத்தே.

*வற்பார் - வன் பார், கடினமான பாறை.

975. ஆதமிலி நாயேனை யாண்டவன்கண் ணோக்கத்தாற்
கேதமகல் சுத்தவருட் கேழ்கிளர்வாழ் வுள்ளமா
வேதவே தாந்த விழுப்பொருளா மோனவியற்
பாதவொளி பற்றப் படைத்தேன் பரத்துவமே.

குறிப்பு:- வாழ்வே யுள்ளமாகப் பாதவொளி பற்ற என வியையும்.

## சக. முக்தி

(வெண்பா)

976. ஆர்வக் குரோத மனைந்தவகப் பேய்கரப்பச்
சேர்வதாய் ஞான சிவானுபவம்—பாவக்
கறையகற்றி யாண்டவருட் கண்மணியின் பார்வைச்
சிறையிலுற்றேன் மோனமுத்திச் சீர்.

977. வஞ்ச மனக்கலக்கம் மாற்றுந் தயாநிதிதன்
விஞ்சையருட் பார்வையென்மேல் வீசினன்—விஞ்சையா
லிம்மையிலே யம்மைவந் தீண்டலா லிம்மைமற்
றம்மையாச் சேணகன்ற தால்.

(கொச்சகக் கலிப்பா)

978. சக்தி நிபாதமாத் தன்னந் தனிப்பரமெய்
யத்தனருட் பார்வை அகத்தே முகத்தலாற்
பொய்த்தொழிய மோகப் புணர்ப்பான புன்பிறவி
நித்தசித்த முத்தி நிஜானுபவ மாயிற்றே.

979. பங்கமில்பே ரின்பப் பாவெளியாத் தன்னுருவு
தங்குமுணர் வான்ற சதாமுத்தித் தன்மையென்பர்;
சிங்கமே போன்றவருட் சிற்பரன்கூர் கண்ணேக்கா
லங்கமகம் புத்தியறக் கூடியதத் தன்மையே.

980. ஆண்டவன்கண் ணேக்க மகங்கிளரப் புக்கதால்
ஈண்டவெதும் முன்னியற்று தேனுக் கிதயமே
காண்டகுமெய்ஞ் ஞானவருட் கைவல்ய பூமியா
மூண்டதுமோ னத்துரிய முத்திப் பெருநலமே.

981. சுற்றுமுற்று நோக்கிச் சுழன்றமனச் சுட்டறிவை
வெற்றறிவாச் செற்றகத்து வீற்றிருந்தான் கண்ணேக்
அற்றமற்ற சுத்த வருட்சிற் பரவெளியா [கால்
முற்றலுற்ற வாழ்வுபர முத்திப் பெரும்பதமே.

982. நீக்கமற்ற வுண்மை நிலையான மோக்கவுணர்
வாக்கமாத் தேக்க வகங்கிளரப் பொங்கியது
சூக்கமா மோன சொரூபானு பூதியா
மீக்கிளர்பே ரின்பவருள் வித்தகன்கண் ணேக்கமே.

983. நீக்கமற்ற வுண்மையே ஞேயப்பே ராக்கமாம்
மோக்கவுணர் வுள்ளத்து மூண்டெழக்கண் ணேக்கி
சூக்கமா வோங்கு துரீயப் பரவெளியாக் [னென்
கோக்கலுற்ற விஞ்சைக் குலாச்சேர் சொரூபனே.

984. பேய்க்கலக்க மானவகப் பீழையைச்செற் றுண்டவன்கூர்
நோக்கமகத் தூடுருவி நுண்மைசால் விண்மயமாய்
நீக்கமற்ற வாக்கமா நீடும் பரமசுப
மோக்கவுணர் வான முழுப்பரமா முற்றியதே.

985. சித்தக் கலக்கச் செருக்கான பாசபந்தக்
கர்த்தத் துவக்கார் கழன்றெழியப் பொங்கியது
சுத்தப் பரதத் துவசொருப முத்தியொளி
அத்தனருட் கண்ணேக் கடைவாலென் னுள்ளத்தே.

986. ஈசனுந் தேசன் இருண்டமனக் கற்பனையூ
டீசலா டுற்றபா ழூத்தை யென் வாத்தியாய்ப்
பாசமாங் கோசவகப் பாழ்வலையை வாள்விழியால்
வீசலால் என்சொருப வீடு விளங்கியதே.

குறிப்பு:- தேசன் வாத்தியாய் வீசலால் என வியையும்.

987. ஈட்டமா நின்ற விருட்பாழிற் கற்பனையாங்
கோட்டவகங் காரமனக் கோசபந் தங்குலைய
நாட்டமா வாண்டவன்மெய்ஞ் ஞானவருட் பார்வைகூர்
வீட்டுணர்வா லுள்ளம் வியாபிக்க லுற்றதே.

988. கேடகன்ற சுத்தசிவக் கேண்மையாற் றன்னடியைக்
கூடலுற்ற வென்னையறக் கொல்வான்போற் கண்ணோக்
கூடுருவ நோக்கியகத் துள்ளா லுணர்வுருவா [கால்
வீடுபே றாக விளங்கு சொரூபனே.

989. வாட்டுங் கவலைகளான் மாழ்காது சிச்சடப்பொய்க்
கூட்டங் குலைந்தறக்கூர் கோமான்கண் ணோக்கத்தால்,
மீட்டிங்கு வாரா விசுத்தவருட் சிற்பரமெய்
வீட்டின் குலாவா விளங்கலுற்ற துள்ளமே.

990. மாக்காதல் பொங்க மனம்புக்க வாண்டவன்கண்
ணோக்கே யமுத நுகர்வா வுயிர்தளிர்ப்ப
மூர்க்கமா மோக முருட்டுமுனைப் பற்றுணர்வு
மோக்கமே யாக முழுமுதல்வாழ் வுற்றதே.

991. ஊடாடிப் பல்வே றுலகுகளில் யானுருத்து
நாடோடி யாக நலங்குலைந்து மாழ்காது
தாடாளன் மெய்ஞ்ஞான சற்குருதன் வீக்ஷணத்தால்
வீடான சுத்த வெளித்தன்மை மேவியதே.

சஉ. **பூமா**

(கொச்சகக் கலிப்பா)

992. எங்கோ வலைந்துழன்ற வென்னைத்தன் னின்னருளால்
எங்கேபோ கின்றாய்நீ யிங்கேவா வென்றகத்துட்
பொங்கவொளிர் சுத்தவெளி பூமாவாக் காட்டியெனக்
கங்கணு லாண்டா னருளியதோ ரற்புதமே.

குறிப்பு: எங்கோ – மாயா விலாசமான கற்பனுப் பிரபஞ்
சத்தில் என்றபடி.

### ௪௩. அருணேக்கு

(வெண்பா)

993. ஒளிசேர்ந்த வுண்மை யுணர்வாம்பே ரின்பக்
களிசேர்ந்த மோனக் கருத்தால்—அளிசேர்ந்த
நோக்கமீக் கூர்சொருப நுண்ணியான் கண்ணெளியே
யாக்கமா நின்ற தகத்து.

(கொச்சகக் கலிப்பா)

994. அங்கணு வென்பா லருளாயோ வென்றேனுக்
கெங்கணுங்கண் ஞான வியற்சிற் பரஞ்சோதி
என்கணெடு தன்கண் இருவேறின் ருவொளிர்நோக்
கிங்கெனக்கு மல்க வெனைக்கண்ணேக் குற்றுனே.

995. துன்பவின்ப வாழ்க்கையொரு சொப்பனமா மங்கவகத்
தன்புமய மான வருள்வெளியாஞ் சிற்பரமெய்
யன்பளிப்பா வாண்டா னடியேற் கருளியபே
ரின்பவருட் பார்வையென் றென்று மிகவாதே.

### ௪௪. உலகு பரமாயிற்று

(கொச்சகக் கலிப்பா)

996. அகிலங் களுமோர றிவுமய மாகத்
தொகவிளங்கல் சுத்தத் துரியவியல் பென்பர்;
பகவ னருள்விளக்கப் பார்வையால் அந்த
நிகிலவிஞ் ஞேய நிலை விஞ்சியது நெஞ்சே.

### ௪௫. அருளாட்சி யுறல்

(கொச்சகக் கலிப்பா)

997. உராத்துணைத்தே ராத்தோன் றுலகமயல் சாயப்
பராற்பரமா வாண்டவருட் பார்ப்பான்கண் ணேக்கால்
இராப்பகலில் லாத வியற்சிற் பரத்துக்
கொராதிக்க முற்றே னுபயமற் றேனே.

998. மறவிதீ ருண்மை வளமான சுத்த
வறிவே சொரூபமா வாட்சியுறப் பெற்றேன்,
குறிகுணந்தீர் ஞான குருவருட்கண் ணோக்காறு
பிறிவுபடச் சிச்சடம் பேதித்த தாலே.

### சசு. சிற் பரம்

(கொச்சகக் கலிப்பா)

999. பெறலரும்பே ருன பிரானருட்கண் ணோக்காற்
பிறவியென்ற மாயப் பெருங்கலக்கம் பேர
அறிவுதெளிந் தேனுக் கனுபவமா முண்மை
செறிவுதரு சுத்த சிவச்சிற் பரமே.

1000. உலக்கலரு முண்மை யொளிப்பிழம்பாஞ் சோண
மலைக்கடவு ளான மகோதயன்கண் ணோக்காற
கலக்கமா மோகவகக் கார்கரக்க வுள்ளத்
திலக்கமுற்ற தான்ம வியற்சிற் பரமே.

### சஎ. அருள் வாழ்வு

(குறள்)

1001. வண்மைசேர் சுத்தவருள் வாழ்வகத்திற் கூட்டியது
நுண்மைசே ராண்டவன்கண் ணோக்கு.

1002. வண்மைசேர் சுத்தவருள் வாழ்வாகப் பொங்கியது
நுண்மைசே ராண்டவன்கண் ணோக்கு.

(வெண்பா)

1003. மத்தனேன் மூட மனக்கலக்கங் கண்டிரங்கி
அத்தனருட் பார்வை யருளலாற் - பொய்த்த
மருட்சூ னியத்து மடாதுநா னுய்ந்தேன்
அருட்பூ ரணவாழ் வகத்து.

1004. கொடியனேன் மோகக் குருடனேன் கள்ளக்
கடியனேன் பாவக் கலியேன்—அடியனேன்
ஜீவியமே தெய்விகமாச் சீர்திருந்தக் கூரத்தவருட்
பார்வையிலே யாயிற்றென் வாழ்வு.

1005. மருட்கே வலத்தே மயங்கிநான் சுத்த
வருட்கே வலத்தை யயர்த்தேன்—அருட்கேயோர்
தாயகமா நின்றபெருந் தம்பிரான் கண்ணேக்கா
லேயறிவுற் றேனவ் வியல்.

1006. போதனையி னுண்மைப் பொருளறிந்தே னுண்டகுரு
நாதனருட் பார்வையொளி நண்ணலால்—சாதனைநான்
செய்திலே னுருயிர்க்குச் சிற்பரமாந் தெய்வவருள்
உய்தியா வுற்ற துளத்து.

1007. என்னு ருயிருக் கிறைவன் சொரூபவருட்
பொன்னுன வாழ்க்கையென் புந்தியிலே—தன்னு
லடைந்து *விளங்க லருட்பார்வை யென்னுட்
குடைந்தொளிர்மெய்க் காட்சிக் குலா.

*விளங்கல் - விளங்கக் காரணம்.

1008. காண்ட வருசொரூபக் காட்சியா மோனநிலை
ஈண்ட வெளிதா விதயத்தே—ஆண்டவன்கூர்
சுத்தவருட் பார்வைச் சுடரொளியே யென்னகத்திற்
புத்தமுத வாழ்க்கைப் புலம்.

(கொச்சகக் கலிப்பா)

1009. மாலறிவா மோக மனக்கலக்கப் பிழைதீர்
வாலறிவா மோன வசீகரவாழ் வுள்ளத்து
மூலபண் டாரமா முற்றியது சுத்தவருட்
பாலனம் பூண்ட பரஞ்சோதி நோக்காலே.

1010. அதியப் பிரானின் னருட்பார்வை வற்று
நிதியவைப் பாக நிறைந்த வுணர்வால்
இதமிக்க யாதுமில்பே ரின்பவெளி யான
விதயப் பரமா விருந்தொளிர்கின் றேனே.

1011. தீனவகங் காரச் சிறுமைசேர் சிந்தையற
மோனவருள் வாழ்வா முதிர்ந்து பழுத்ததுமெய்ஞ்
ஞானகுரு நோக்கமென் னள்ளிதயத் தாணவப்பா
மூனமறப் பொங்கு முதாரவெளி யாகவே.

1012. அணங்குதாக் கென்றறியா தாணவப்பாழ் மோகத்
திணங்கலுற்ற வாற்று லெனைக்கெடுத்துக் கொண்டேன்;
அணங்கலற வாண்டா னருள்விழியாற் பாசக்
குணங்கர் குலைந்தொழியக் கூடியது வாழ்வே.

1013. எள்ளற்கே தக்க விழிசினேன் சுத்தவருள்
வெள்ளத்தே ஞுக விளைந்தேன் உடலுருவாத்
துள்ளித் துடித்துழல்பொய்ச் சூதா மகந்தைமனக்
கள்ளக் கலிகடிந்த கண்மணிகண் ணேக்காலே.

1014. கவ்வியமா மோகக் கராக்கடுவாய் நின்றென்னை
யுய்வித் தருளியவோ ரொள்ளியான் கண்ணேக்காற்
செவ்விதா வான்ற சிவக்கே வலவுணர்வு
திவ்வியவாழ் வாகத் திருந்தலுற்ற தென்னகத்தே.

குறிப்பு:- இச்செய்யுள் கஜேந்திர மோக்ஷத்தைக் குறிப்பாக வுணர்த்தும் ஏகதேச உருவகம்.

1015. ஒன்றையிரண் டாக வுறழுமனக் கற்பனையை
வென்ருெளிர்மெய்ஞ் ஞான விளக்கமாங் கண்ணேக்
ஒன்றியகந் துன்று முடையான் பதவொளியில் [கால்
மன்றவாழ் கின்றேன் மனமிதய மாகவே.

1016. மாழ்கலுற்ற வஞ்சு மயக்கமனத் தேனுக்குச்
சூழ்தலுற வெங்குந் துரீய சொரூபவொளி
வாழ்வுசிவ மாக மலர்ந்ததருட் கண்ணேக்காற்
பாழ்வளர்வெம் பாசமறப் பாற்றியவாண் டான்பாலே.

1017. ஊனவகப் பேயை யுடற்றி யொழித்தமெய்ஞ்
ஞானப் பிழம்பான நம்பனருட் கண்ணேக்கம்
மோன வுணர்வாக மூண்டகத்து முற்றமுழு
வானளவப் பொங்குசுப வாழ்வா விளைந்ததே.

1018. நுண்மைசேர் கைவல்ய நோக்கங் கிளர்தலுறத்
திண்மைசேர் சுத்தவருட் சிற்பரன்கண் ணேக்கத்தால்
உண்மையிலே யூன்று முரஞ்சேர் பரயோக
வண்மைசேர் வாழ்வியல்பா வாய்த்த திதயத்தே.

1019. மடந்தருகா ரா ணவப்பாழ் மத்தனே னுக்குத்
தொடர்ந்தொளிர்சற் போத சொரூபமே யாகக்
கடந்ததோர் கைவல்யக் காட்சியா லுள்ளத்
தடைந்த வருட்பெருவாழ் வாண்டவன்கண் ணோக்கே.

1020. துள்ளு மகப்பேய்த் துடிப்பாற் சுழல்வுறுமென்
கள்ள மயக்கக் கருத்திற் கடவுளருள்
வெள்ளம்பாய் வுற்ற விசித்திரமேல் வித்தகமெய்
யுள்ளமா வுள்ளத் தொளிர்சொருபன் கண்ணோக்கே.

1021. உண்ணெணக் குருக வுபாசித் திடாதவெனக்
கெண்ணப் படாதபே ரின்ப வியல்விளங்க
நண்ணிற் றிதயத்து நன்றான சுத்தவருள்
வண்ணப் பிரான்சொருப வாழ்வவன்கண் ணோக்காலே.

1022. ஊடாட லுற்றபா ழூத்தையகப் பேயையுளத்
தாடாது பொன்ற வடர்த்தபிரான் கூர்நோக்கால்
வீடாக மன்ற விளங்குசிவக் கேவலத்தில்
வாடாத சுத்தவருள் வாழ்வெனக்கு மல்கியதே.

1023. மருட்பாச மான மயக்க வுலக
விருட்பா ழடர்த்த விறைவன்கண் ணோக்கா
லருட்பார வாழ்வா வவிர்ந்த திதயத்
திருப்பாக வுள்ள வியற்சிற் பரமே.

1024. இமைத்தலற்ற சுத்த வியற்சிற் பரமா
யெமைத்துலக்க லுற்ற விறைவன்கண் ணோக்கால்
அமர்க்களமா மோக வகத்திற் செகத்தே
சமித்தலா லார்ந்ததுகாண் சாந்தவருள் வாழ்வே.

1025. நானறக்கண் டிக்குறுமெய்ஞ் ஞானகுரு நாட்டத்தால்
ஊனமற்ற சுத்த வுணர்வே சொரூபமா
யீனமறப் பொங்கிற் றியல்வாழ்வு சுத்தவருள்
வானமா மோனம் மனத்து மலர்ந்திடவே.

1026. மருளிலே யாழ்ந்து மனோமயத்தோற் றத்தில்
வெருளுறு நின்ற வெறியனேன் வஞ்ச
விருள்கெடச்செற் றுண்ட விறைவன்கண் ணோக்கால்
அருளே பொருளா வகந்தெளிந் தேனே.

1027. விந்தைசேர் சுத்தவருள் வித்தகன்கூர் கண்ணோக்கால்
அந்தமில்கண் ணுக வவிர்சொருபச் சிற்பதத்திற்
பந்தமுத்தி யானவகப் பாழ்ங்கற் பனைகரக்கச்
சந்தவியல் வாழ்வாத் தரித்ததுமெய்த் தற்பரமே.

1028. அண்மையிலே வைகி யணுக்கத்தொண் டாற்றினேற்
குண்மையுணர் வான வொளிப்பிரான் கண்ணோக்காற்
றண்மைசேர் சாந்தித் தடங்கடலா வுள்ளத்தில்
வண்மைசேர் சுத்தவருள் வாழ்வு மலர்ந்ததே.

1029. சுத்தப் பரசிவத் தோற்றப் பொலிவான
வித்தகத் தன்மை விளங்குமொளிக் கூர்விழியாற்
சித்தக் கலக்கச் செருக்கறப்பெற் றுங்ககத்திற்
புத்தமுதத் தூங்கவருட் போகவுணர் வூறியதே.

1030. யானெனது சற்று மிலாமல் வெறுவெளியா
யானியல வாண்டவன்கூ ரின்பவருட் பார்வையாற்
சூனியம்போற் றேன்று சொரூபவருட் பூரணமே
மானியமா வுள்ளத்து வாழ்வு மலர்ந்ததே.

குறிப்பு - அருட்பார்வையால் வாழ்வு மலர்ந்தது என வியையும்.

1031. வருந்தியதூ மன்றி மகிழ்ந்ததூ மெல்லாம்
பரிந்தவகங் காரமனப் பாழ்ங்கற் பனையாத்
துரந்தென்னை யாண்ட துரந்தரன்கண் ணோக்காற்
பொருந்தியது சுத்தவருட் பூரணமெய் வாழ்வே.

1032. உண்மை யுணர்வா லுணர்வில் விகாரமற்ற
வண்மைசேர் வாழ்வுமதோன் மத்தவருள் வாழ்வாகத்
திண்மைசேர் சுத்த சிவலோகச் சீர்மையுற்றேன்
நுண்மைசே ராண்டவன்கண் ணோக்கா லிதயத்தே.

1033. மருட்சிப் படர்கூர் மனப்பேய் கரக்க
வருட்சிற் பரமாக வாண்டவன்கண் ணோக்கால்
இருட்சற் பனைதீ ரிதயந் தெளிந்தேன்;
பொருட்செப்ப வாழ்வுசிவ பூரணமாந் தானே.

1034. நிற்கலுறு மோன நிலைவிளங்க வுள்ளத்திற்
சிக்கெனவந் தாண்டவருட் செம்மல் கடாட்சத்தாற்
பொக்கமறப் பொங்குசிவ பூரணத்தில் வாழ்கின்றேன்
பொய்க்கனவிற் புக்கழுந்திப் பொற்பிழந்த நாயேனே.

1035. மீக்கிளர்மெய்ஞ் ஞான விசுத்த சொரூபவிறை
நோக்கலுற்ற நோக்கா லிதயத்தே யூடுருவித்
தேக்கலுற்ற சுத்தவருட் சீர்சால் சதாசிவசற்
பாக்கியமே வாழ்வாப் பரானுபவம் பற்றியதே.

1036. அலையலுற்ற மோன வருட்பரன்கண் ணோக்காற்
களிவளர்மோ காணவப்பேய்க் கார்கரக்க வுள்ளத்
தொளிர்தலுற்ற வுண்மை யுணர்வூ டுயிர்க்கு
விளைதலுற்ற பேறு விசுத்தசிவ மாண்பே.

1037. துன்றிறை ருள்ளந் துலங்க வொளிர்சொருபன்
வென்றிசே ருண்மை விளக்கமாங் கண்ணோக்கால்
ஒன்றியே யுள்ளத் துறுதிசேர் வாழ்வுற்றேன்
மன்ற மலர்ந்தவியல் வாழ்வுசிவ பூரணமே.

1038. உண்மையிலு முண்மையா வுள்ளத் தொளிர்சொருப
வண்மைசேர் வாழ்வு மலர்ந்திடக்கண் ணோக்கினன்
தண்மைசேர் சித்தோப சாந்த வருட்கடலாத்
தெண்மைசேர் சுத்தசிவச் சிற்பரமெய்த் தற்பரனே.

1039. தானான வென்னைத் தடுமாறி நான்பிறிதோ
ரூனா ருயிர்போல வூழ்த்துணர்வு பாழ்த்தொழிந்தேன்;
ஞானா ரியனான நம்பனருட் பார்வையால்
வானா வொளிர்சொருப வாழ்வு மலர்ந்ததே.

1040. எண்ணமற்ற மோன வியற்சிற் பரசொருப
வண்ணமா வாழ்வு மலர்ந்திடக்கண் ணேக்கினன்
கண்ணதுதா னந்தமிலாக் கண்ணு விதயத்து
நண்ணியெனைத் தானு நடாத்தலுற்ற வாண்டவனே.

1041. பொங்குசிவ பூரணத்துக் கெத்தரத்தேன் மத்தனேன்
பங்கமற்ற சுத்தவருட் பாரப் பரசொருபம்
மங்கலவாழ் வாக மடுத்திடவென் னுள்ளத்துத்
தங்கியது சிற்பரமெய்த் தற்பரன்கண் ணேக்கமே.

1042. ஒள்ளியமெய்ஞ் ஞான வொளிப்பிழம்பாங் கண்ணேக்
கள்ள மகற்றிக் கலந்தவாண் டானருளாற் [காற்
றெள்ளியே னகத் தெளிந்தேன்சுத் தாத்துவித
வெள்ளவருள் வாழ்வா விளங்கும் பரசிவமே.

1043. உந்துமகங் காரப்பா ழூத்தையுணர் வாலுலகத்
தந்தரமா மாழ்கலுற்றேற் காண்டவன்கண் ணேக்கத்
சிந்தனையெல் லாமடங்கச் சிற்பரமா மோனவருள் [தாற்
வந்தடுத்த சந்தமனம் வைகுந்த மானதே.

1044. எளியேன்யா னென்னு மிளிவர வில்லேன்
தெளிவான சுத்தவருட் சீமானு வுள்ளேன்
வெளியாக வென்மெய் விளங்கலா லுள்ளத்
தளியார்ந்த வாண்டா னருட்கண்ணேக் காலே.

### ௬அ. திரிவடி வாழ்வு

(குறள்)

1045. பாழவித்து ஞானப் பரமசிவச் செம்பதத்தில்
வாழவைத்த தாண்டவன்கண் ணேக்கு.

(கொச்சகக் கலிப்பா)

1046. கரவான மோகமனக் கற்பனையை மாற்றித்
திரமான வுண்மைத் திருவடிவாழ் வுற்றேன்
உரமாக வென்னையுளத் தூன்றுவித்த வாண்டான்
பரமான சுத்தவருட் பார்வைசேர் வாலே.

### சக. உப சாந்தி

(வெண்பா)

1047. கொந்தளிப் பற்ற குணதீத மோனவருட்
சந்தப் பரமோப சாந்தபதம்—சொந்த
சொரூபமே யாகச் சுடர்வித்த தாண்டான்
விரூபமெய்ஞ் ஞான விழி.

(கொச்சகக் கலிப்பா)

1048. இருவினைமுற் றீடழிய வென்னகம்புக் காண்ட
குருவருளா லின்பதுன்பக் கோட்டமறக் கண்டேன்;
மருவுசுப சாந்தி வளம்பெருக வுள்ளத்
துருவியது மோன வுடையான்கண ணோக்கே.

1049. துற்றக் கடவா துரீயமா மோனநிலை
பற்றக் கிடைத்தேன், பரமோப சாந்திபெற்றேன்,
மற்றற்ற சுத்தவருள் வானமா வாழ்வொளிரப்
பெற்றுக் களித்தேன், பிரான்கடைக்கண் ணோக்காலே.

1050. அற்றமற வாண்ட வருட்பிரான் கண்ணோக்கால்
இற்றெனநான் சற்று மிசைக்க வொணாதபடி
முற்றமுழுத் தன்மை முகத்தலா லுள்ளுணர்விற்
பற்றியது சுத்தப் பரமோப சாந்தியே.

1051. போக சொரூபானு பூதியே வேட்டுநின்ற
தாகவிடாய் தீரத் தழைத்ததுப சாந்தியுளத்
தாகமகம் புத்தியா லார்த்தெழுந்த வாணவப்பாழ்
வேகமறக் கண்டவருள் வித்தகன்கண் ணோக்காலே.

குறிப்பு:- போக சொரூபானு பூதி – சிவ போகமான சொரூபானுபூதி.

1052. கள்ளங் கரவகலக் கண்டபிரான் கண்ணோக்காற்
றெள்ளுங் கழலே சிவகதியாத் தேர்ந்தேனுக்
குள்ளங் கலங்கா வுரஞ்சே ருபசாந்த
வெள்ளங் கடலாக மேன்மேல் விளைந்ததே.

1053. உண்மை தெளிந்தே னுபசாந்தி யானசுப
வண்மைசேர் வாழ்வு வளங்கிளரப் பொங்கலுற்றேன்
மண்மிசைவந் தென்னை வசீகரமா வாண்டுகொண்ட
நுண்மைசே ராண்டவன்கண் ணோக்கா லடியேனே.

1054. சிறுக்கனு வுள்ள செருக்கனேன் மத்தக்
கிறுக்கனு மாயையிற் கெட்டழிந்தே னுள்ளத்
தெறிக்கலுற வீசியதன் னின்னருட்கண் ணோக்கால்
மறுக்கமில்சாந் தானுபவ மாண்பதஞ்சேர்த் தானே.

1055. துங்கமா வுள்ள சொரூபச் சுடர்விழியால்
அங்கமகம் புத்திமய லற்றொழிய நோக்கினான்
சிங்கலரு மோனவருட் செங்கணான் சேவடியிற்
பங்கமில்சாந் தானுபவம் பற்ற விளைந்ததே.

குறிப்பு;– சிங்கலரு - குறைவற்ற; பற்ற - மிக, நிரம்ப.

1056. பார மனக்கற் பனையிற் பறந்துவெகு
தூர முழன்று சுழன்றழன்றெய்த் தேனுக்குக்
கோரமனோ வேகங் குலைந்தொழியச் செற்றவருள்
வீரன் விழியால் விசிராந்தி யுற்றதே.

குறிப்பு:- பரந்து எனவும் பாடம்.

1057. உளங்கலந்த வுண்மையில்யா னூன்றுவே னுகக்
களங்கலந்த பாசமறக் கண்டவன்கண் ணோக்கால்
விளங்கியமெய்ஞ் ஞான விபூதியிலே யான்ற
வளங்குலவு சாந்திசேர் வாழ்வுதிளைத் தேனே.

1058. ஏன்றுகொண் டாண்ட விறைவனருட் கண்ணோக்கால்
ஆன்றசிவ போகமா வார்ந்ததெனக் கைம்புலமாத்
தோன்றுமனப் பாழிற் சுவையுணர்வு மங்கவகத்
தூன்று சொரூப வுணர்வான சாந்தியே.

1059. திண்மைசேர் வஞ்சச் செருக்கறச்செற் றுண்டுகொண்ட
நுண்மைசே ராண்டவன்கண் ணோக்கால் அடியேனுக்
குண்மை விளக்கமா வுள்ளத் தொளிர்சொருப
வண்மைசேர் சாந்தியே வாழ்வா மடுத்ததே.

1060. பந்த முத்திக் கற்பனையைப் பாற்றியசற் போதவருட்
சந்தக் குருகடாட் சத்தாலே சாந்திபெற்றேன்
அந்தமில்பே ரின்பமா வான்ற வனுபவஞ்சால்
சொந்தத் துரீய சொரூபப் பதத்திலே.

1061. அல்லா ணவப்பா ழகப்பேய் முனைப்பறக்கொல்
வல்லாளன் கூர்த்தவருள் வாள்விழி நோக்கத்தால்
எல்லே யிதயத் தியல்பா விளங்கியது
பொல்லா மயக்கமனப் பூசலற்ற சாந்தியே.

1062. மாழ்கா தடியேனிம் மாயாஜா லப்புரட்டிற்
சூழ்வா ரொளிசேர் துரீய சொரூபவிறை
பாழ்வா தனையின் படர்கெடக்கூர் கண்ணோக்கால்
வாழ்வா மலர்ந்ததருள் வண்மைசேர் சாந்தியே.

1063. சீரியமெய்ஞ் ஞானத் திருவருட்சீர் வாழ்க்கையெனக்
கோரியல்பா வென்று முளஞ்சுரக்க நோக்கினன்
கூரியகண் ணோக்கக் குளிர்ச்சியால் ஆசுரவெங்
கோரமனத் தாபமறக் கூடியது சாந்தியே.

1064. எண்ண வொணாத வியற்சிற் பரசொருப
வண்ணமா வாண்டவருள் வள்ளற் பிரான்கண்ணோக்
குண்ணு ரமுதவுணர் வூற்று வுளங்கிளர்வாற்
றண்ணு ரமைதி தழைத்த தடியேற்கே.

1065. பற்றற் றியல்சொருபப் பார்ப்பான்முன் உள்ளுணர்விற்
பற்றலுற்ற மோனவருட் பார்வையாற் பாசமறப்
பற்றியது சுத்தப் பரமார்த்த சாந்தியெனக்
கற்றமா மோகவகப் பாழற் றவிர்பதத்தே.

௫௦. பேரின்பம்

(குறள்)

1066. பரமோப சாந்தவியற் பார்ப்பான் கடாட்சம்
பரமோதங் காட்டியதென் பால்.

(வெண்பா)

1067. பற்றற் றொளிர்சொருபப் பார்வையா மோனமே
கற்றொழுகும் போதவருட் கல்வியால்—வெற்றிபெறக்
காட்டியவென் னண்டான் கருணைக்கண் ணோக்க
கூட்டியதோ ரின்ப வுணர்வு. [மௌனக்

1068. பரமான மோனவருட் பார்வையென் னுள்ளத்
துாமாக வூன்றலா லுய்ந்தேன்—திரமா
வொளிருங் குருபாத வுண்மைப் பதத்தில்
வளரும் பரமசுகம் வாய்ந்து.

1069. அனவரத மன்பா லடியார்க் கருள்செய்
கனவரதன் வாழ்விற் கலந்தான்—முனிவ
ரகத்தி லறிவா வகமகமெ◌ன ருர்வம்
நிகழ்த்தலுறு மின்ப நிதி.

1070. ஆக்கமளித் தாண்டா னருட்பார்வை யால்வெளியாத்
தேக்குமகத் தான சிவாம்புதியி—லேக்கங்கூர்
சிந்தை யிறக்க விதயமாச் சேர்ந்ததுதன்
சொந்தவியல் பான சுகம்.

(கொச்சகக் கலிப்பா)

1071. குதிப்புறுமா மோகக் குடில வகந்தைப்
பதைப்பறவே கூர்த்தவருட் பார்வையா லாண்டான்
மதிப்பருஞா னைந்த மாண்பதத்திற் சாலச்
சதிர்ப்படவாழ் கின்றேன் சகஜவியல் பாலே.

1072. நித்தமா முத்தி நிலைகாட்டி யாண்டவன்பால்
அத்தமியா மோன வருள்வாழ்க்கை கண்டுகொண்டேன்;
இத்தமியே னுள்ளம்பே ரின்பவெளி யாகவியல்
வித்தகரு ணாமூர்த்தி வீட்சணத்தின் மாட்சியென்னே.

1073. வேண்டுதல்வேண் டாமைக்கோர் வித்தாக நானென்று
மூண்டவகப் பேய்முனைப்பா மோகக் கலக்கமற
வாண்டவன்கூர் வீட்சணமென் னைசைக்கோ ராசயமா
வீண்டியது வாழ்க்கையிற்பே ரின்பமெழப் பொங்கவே.

1074. விழுமியமெய்ஞ் ஞானவருள் வித்தகன்கண் ணோக்கால்
முழுமுதலாத் தொக்கதோர் முத்திப் பரங்கண்
டொழுகலுற்றே னுள்ளத் துணர்வுசிவ மாகப்
பழுனியபே ரின்பப் பயன்படைத் தேனே.

1075. கள்ளமொன் றுமில்லாக் கடவுட் பரத்திலருள்
வெள்ளவுணர் வான விசிராந்தி வாழ்வுறவெற்
கோள்ளியோ ஞன வுடையான்கண் ணேக்கலால்
உள்ளம்பே ரின்பவுணர் வூற்ரு விளைந்ததே.

1076. அன்பா லடைந்தா ரகத்தை யருட்பொலிவாற்
பொன்போ லொளிவிடச்செய் புண்ணியனுங் கண்ணிய
என்பா லிரங்கி யிதயம்பே ரின்பவியற் [வான்
செம்பரமாக் கண்ணேக்கஞ் சேர்த்தான் செழிக்கவே.

1077. நாட்டிலுமுன் றெய்த்தமட நாயேற்குச் சிச்சடவன்
பூட்டியன்ற மோகமனப் புன்பிறவித் துன்பமகல்
வீட்டின்ப வாழ்வு விளங்கவென் னுள்ளத்திற்
கூட்டியது சுத்தவருட் கோமான்கண் ணேக்கமே.

1078. தெளியவொண் ணுதமலச் சேற்று மனத்தைத்
தெளியவைத் தாண்டான் திருவருட்கண் ணேக்கால்
அளியனேன் மெய்யன் பலரப்பெற் றுள்ளத்
தொளிவளர்பே ரின்பவுணர் வூற்றெடுத் தேனே.

1079. தன்னையே யன்றித் தனக்கயலா யாதுமறத்
துன்னியவே கான்ம சொரூபவருட் பூரணத்தா
டென்னைவிழிப் பித்த விறைவன் கடாட்சத்தா
லென்னதுபே ரின்ப வியல்வாழ் வியைந்ததே.

1080. பணிந்தெழுந்த வென்பாற் பகவன்கண் ணேக்காற்
றணந்தொழிய வொண்ணுத் தனுது சொரூப
வணந்துலங்கு வாழ்வு வசீகரமாப் பொங்க
வணைந்ததுபே ரின்ப வருட்பாக் கியமே.

1081. மூடுமோ கப்பாழை மோசனஞ்செய் கண்ணேக்கால்
ஊடுபே ராம லுளம்புக்குப் பேரின்ப
வீடுபே ருக விளங்கலுற்றுன் சுத்தவருட்
பீடுசே ருண்மைப் பிரானுன பெம்மானே.

1082. ஊடறுக்க வொண்ணு வுதாரப் பரவெளியே
பீடுறுமெய்ஞ் ஞானவருட் பேரின்ப வாழ்வாகக்
கூடியதென் னுள்ளங் குதூகலிக்க வுள்ளொளியா
நீடலுற்ற வாண்டவன்கூர் நேயநோக் கத்தாலே.

1083. கரந்தொழிய மோகக் கலக்க மகத்திற்
பரந்தகன்ற சுத்தவருட் பார வெளியா
இருந்தொளிர்பே ரின்ப வியல்வாழ் வினிது
சுரந்ததகந் தூன்று சொரூபகுரு நோக்கே.

1084. மத்தமனம் பொன்ற வளஞ்சேர் சொரூபவாழ்
வித்தமிலே யுள்ளத் தியல்பா விளங்கவுற
வித்தகன்சற் போத விழியா லருளலாற்
சித்தஞ் சிவமாத் திளைத்ததுபே ரின்பமே.

1085. தகவிலாத் தஞ்சனைத்தன் றண்ணிளிசேர் கண்ணுற்
றகவுபெற வாண்டான் றழைத்தொளிரத் தன்மெய்;
சுகவியல்வாழ் வான துரிய சொரூப
சுகவுணர்வூற் றுகவகந் தொட்டதுதன் னிட்டையே.

1086. கோலங் குலவுசிவக் கோமான் கடாட்சவருட்
சீலஞ் செழித்தவென் சித்தத்திற் சேமஞ்சேர்
மூல வியன்சொருப முத்தியா வாரிவளைத்
தேல வெழுந்ததுபே ரின்பவியற் சிற்பரமே.

இக. மோனம்

(குறள்)

1087. வெருவரல்செற் றென்னுள் விளங்குவது மோன
குருவருட்கண் ணோக்கக் குறி.

(வெண்பா)

1088. பக்குவமா யாண்டான் பரங்கருணைப் பார்வையாற்
சொக்கிமனம் புக்க சொரூபத்தே—தொக்குவளர்
சற்போத மோன சமாதியே யென்னியல்பா
வெப்போது மேய்ந்த தினிது.

1089. படர்கெட் டொழியப் பரமோப சாந்திச்
சுடர்விட் டொளிர்துரிய ஜோதி—சுடர்சொருபப்
பார்வையாற் பாழகந்தைப் பற்றுவிட்டு மோனவருட்
சீர்வளரப் பெற்றேன் சிவத்து.

1090. ஆண்டா னருட்பார்வை பாலித்தான் மோனநிலை
யீண்டவே கூடிற் றிதயத்தே—மூண்டவருட்
பெற்றிசே ரின்பப் பெரும்பதமா மோனவொளிப்
பற்றிலே யற்றதுயிர்ப் பற்று.

1091. மனோதீத மாட்சிசேர் மௌனநு பூதி
எனதிதயத் தூன்றி யெழவே—எனதிதயந்
தாக்கினன் றன்பதத்தாற் றன்மயமா நானடங்க
நோக்கினா னென்னை நுனித்து.

1092. சிற்றம் பலத்தை தயருட் பேரம் பலமாக
முற்றத் திளைக்குமொரு மோனநிலை—பற்ற
அகம்படிமை பூண்டேற் கருளினன்கண் ணாலே
முகம்புரிந்த மோன குரு.

(கொச்சகக் கலிப்பா)

1093. மானுபி மான மயக்கறுக்குங் கூர்விழியால்
ஆனாத சுத்த வருள்வெளியா வாண்டபிரான்
யானாக வென்னை யியல்வித் தருளியதால்
மோனானு பூதியே யுள்ளமா முற்றியதே.

1094. அடியனை வென்னையடிக் காண்டவன்கண் ணோக்காற்
றடையுறுவெம் பாசமறத் தற்பரமாப் பொங்கும்
முடிவிலா வாழ்வான மோனானு பூதி
யடைதலுற்ற வுள்ள மகன்சிற் பரமே.

1095. நோக்கற் கரியவதி நுட்பவொட்பக் கைவல்ய
நோக்கமெனக் காண்டவன்கண் ணோக்காலே பற்ற
றேக்கக் கிடைத்தவருட் சிற்பரமோ னானுபவ [லாற்
மோக்கப் பெருவாழ்வா முற்றமுழுச் செல்வமே.

1096. ஆனா துடலேநா னாக வகங்கரித்து
மானுபி மான மயக்கவலைப் பட்டேற்கு
வானாக வென்மனத்தை மாற்றினன் கண்ணோக்கம்
மோனானு பூதியா முற்றியதென் னுள்ளத்தே.

1097. ஆண்டவனைக் கண்டாங் கடியே னகங்கிளரத்
தூண்டலுற்ற வன்ஞன் சுவானுபவப் பார்வையால்
ஈண்ட வெனக்கினிமற் றேதுமற வுள்ளத்து
மூண்டதருட் கைவல்ய மோனானு பூதியே.

1098. அற்பனே னுக்கென்னை யாண்டபிரான் கண்ணேக்காற்
கற்பனு பேதங் காக்கலுற்ற சுத்தவருட்
சிற்பதமே கைவல்யச் சீர்மைசேர் பூரவாப்
பொற்புறுமோ ஞனுபவம் புந்தியிற்பொங் குற்றதே.

1099. ஈனக் கடையேனை யின்னினிதா வாண்டுகொண்ட
ஞானப் பிராஞன நம்பனருட் கண்ணேக்கால்
வானப் பரவெளியா வைகுசொரூ பானுபவ
மோனந் தலைப்படலான் மூர்க்கனே னுய்ந்தேனே.

1100. கட்டுற்ற வைம்புலப்பாழ்ங் கற்பனு சொப்பனத்திற்
பட்டி மனத்தாற் பதைக்கலுற் றேனுக்குப்
பட்ட னளித்தவருட் பார்வையாற் பற்றியது
முட்டற் றெளிர்சொருப மோனானு பூதியே.

குறிப்பு:- கட்டுற்ற – கட்டாக உற்ற; கட்டு – பாசபந்தம்

1101. அப்பனருட் பார்வை அடியேன் மனத்தாப
வெப்பமா மோக விடாய்தீர் உபசாந்த
மெய்ப்பதவாழ் வுள்ளத்து மீக்கூர வென்றிசே
ரொப்பமா மோன வுணர்வொளியாப் பொங்கிற்றே.

1102. நானதுவா வென்றுமுள ஞானானு பூதிவளர்
மோனமே வாழ்வா முகக்கலுற்றேன் சுத்தவருள்
வானமா வென்னை வளைத்துக்கொண் டாணவப்பா
ழீனமறச் செற்ற விறைவன்கண் ணேக்காலே.

1103. அற்றப் படாவருளா லன்றிமற்றெவ் வாற்றுலும்
பற்றப் படாத பரஞ்சோதி கண்ணேக்கால்
இற்றெனவொண் ணுத வியற்சிற் பரசொருபப்
பெற்றிசேர் மோனப் பெருவாழ் வடைந்ததே.

1104. எங்குமுளா னேனு மிதயத்தி லன்றிமற்
றெங்குமே காணவொணு வீசனருட் பார்வையொளி
பொங்கலா லான்றசிவ பூரணமோ னுனுபவம்
தங்கியது நானெனும்பொய்த் தன்மை கரககவே.

1105. ஆரியன்கண் ணேக்கமே யாரா வமுதாகப்
பூர்க்க லுற்றவென் புந்தியுள்ளே சற்றுமினிக்
கோரிக்கை யின்றுகக் கூடியதோர் தற்பரவாழ்
வாரத் திளைத்ததா லார்ந்ததுமோ னத்திறமே.

1106. மத்த மனத்தால் வறிதுழன்றே னுள்ளத்திற்
புத்தமுத மோனு னுபூதியாப் பொங்குவது
சுத்த வுணர்வாத் துலங்கு சொரூபவருள்
வித்தகவாழ் வாண்டான் விழியால் விளைத்ததே.

1107. அற்புதமோ னந்துலங்க வாண்டபிரான் சுத்தவருட்
கற்பகமா வாழ்விற் கலந்தியல்கண் ணேக்கத்தாற்
பொற்ப விளங்குசிவ பூரணமோ னுனுபவச்
சிற்பதமென் னூடு செழிக்கவியல் கின்றதே.

1108. அற்றமற வாண்ட வருட்பகவன் கண்ணேக்காற்
பற்றற்ற வுண்மைப் பரசிவத்திற் பாசமனக்
குற்றமற்ற ஞானக் குலாச்சேர் சொரூபசித்தி
முற்றலுற்ற வென்னியல்பு மோனப் பரவெளியே.

1109. வானுன சுத்தவருள் வாழ்வே சொரூபமாந்
தானுக வென்னையறத் தாக்கலுற்றான் கண்ணேக்கால்
மானுபி மான மயக்கவகப் பேய்மடிய
மோனுனு பூதி முகக்கலுற்ற துள்ளமே.

1110. சித்தசுத்தி யில்லாச் சிதடப் பகடனேற்
கத்தனருட் பார்வையா லார்ந்ததோர் மெய்ஞ்ஞான
சித்திக் திறத்தாற் செழித்ததென் னுள்ளத்து
முத்தித் திறமான மோனுனு பூதியே.

1111. கதித்தவகப் பேய்முனைப்பாற் காயமே நானு
மதர்த்துலக மாயத்தில் மாழ்கினேன் ஆண்டான்
பதித்தலுற்ற சுத்தவருட் பார்வையா லுள்ளத்
*துதித்தலற்ற மோன வொளிப்பதங்கண் டேனே.

*உதித்தலற்ற மோன வொளிப்பதம்-ஆணவப் பாழான அசந்தைமுனைப்பற்ற அருட்பெரும்பதம்; நானுதியாத் தன்னிழப்பு என்பது மது.

1112. தற்பரமா வோங்கு சதாசிவவாழ் வானசுபத்
துப்புரவா மோனந் துலங்கலுற்றேன் கற்பனை
சொப்பனமே நோக்கிமனச் சூதிலுழன் றெய்த்தமட
வற்பனேன் *சித்திரமா வாண்டவன்கண் ணோக்காலே.

*சித்திரம் - அருட்சித்திரம்.

1113. மண்டியபே ரின்ப மதர்ப்பான மோனநிலை
கண்டுகொண்டே னுள்ளுணர்விற் கைவல் லியச்சிறப்
தொண்டனேன் சொந்தத் துரீய சொரூபவுண்மை [பாத்
விண்டொளிரக் கண்டவருள் வித்தகன்கண்
ணோக்காலே.

1114. கருமயல்சேர் மாயமனக் கற்பனையை மாற்றும்
பரமனருட் பார்வை பதிந்தாங் குளத்தில்
வரமென்னுங் கைவல்ய வைப்பான சுத்தத்
திரமவுனச் சால்பு செழிக்கலுற் றேனே.

1115. அறிவான சுத்த வருட்பரன்கண் ணோக்கால்
வெறிசே ரகப்பேய் விளியவே பாசக்
குறிகுணஞ்சேர் மாயமனக் கொந்தளிப்பற் றோய
நிறைவான மோனநிலை நீடிற் றியல்பே.

1116. அற்புத மான வருட்பிரான் கண்ணோக்கால்
அற்பனே னுள்ளத் தளைந்தியல்பா நீடுவது
கற்பனை முறறக் கடந்து விளங்குசிவச்
சிற்பதவாழ் வான சிவானுபவ மோனமே.

### ௰உ. முற்றவத்தை வியத்தல்

(வெண்பா)

1117. அம்மா னருளியநோக் காலடைந்த தென்னகத்தே
சும்மா விருக்குஞ் சுவத்தநிலை—எம்மாண்
பெருந்தவநான் முற்பிறப்பிற் பேணினே னஃது
பொருந்தவநா யாசமிப் போது.

## 11. ஆண்டவன்பால் அநுபவம்

### க. மெய்யன்பு

(குறள்)

1118. மாய மயக்கமற மாற்றியவென் ஞண்டவன்மெய்ந்
நேயமே யாயிற்றென் னெஞ்சு.

1119. நீளப் படைத்தசிவ நேயமே ஆண்டவன்பா
லாளக் கிடைத்த வருள்.

(வெண்பா)

1120. பெட்புற் றவர்திளைக்கப் பெற்ற சிவானுபவத்
திட்பமெனக் கீந்தவருட் சிற்பரன்பால்—ஒட்பமுறு
மெய்யன் புணர்ச்சி விசைப்ப வகங்கிளர்வுற்
றுய்யலுற்ற தென்றன் னுயிர்.

1121. கூர்மைசேர் மிக்க குணநா கரிகவருட்
சீர்மையா லாண்ட சிவசொருபன்—பார்வையாற்
கோசங் களைந்தவென் கோமாற்குத் தன்மயமெய்ந்
நேசங் கலந்ததென் னெஞ்சு.

1122. வீடுபே றுன விசுத்தவருட் பாதநிழல்
கூடுவதா வென்னைக் குறிக்கொண்டான்—பீடுயர்பே
ரின்பவருள் வாழ்க்கை யெதிர்படக்கண் டென்னிதயத்
தன்புமீ தூர்ந்தே னவற்கு.

1123. பெருமூர்த்தி யான பிரம்ம சொரூப
குருமூர்த்தி யானவருட் கோமான்—தருமாத்தி
காயமா வுள்ளோன் கருத்தா டெனக்குமிக
நேயமா நின்ரு னிறைந்து.

1124. கணக்குவழக் கற்றவருட் கைவல்ய சாந்தி
யிணக்கமுற வுள்ளத் தியல்பாய்—உணக்கலுற்ற
ஜீவன் சிவமயமாச் சித்தந் தெளிந்துமெய்
யார்வமுற்றே ஞண்டான்பதத்து.

1125. புத்தமுத மானவருட் போத வொளிபரப்பி
நித்தமியல் பாகவென் னெஞ்சத்தே—சுத்த
நிருவிகற்ப மோன நிறைவா வுறைவா
னுருவுகப்ப தாமென் னுணர்வு.

1126. நோயிலே பட்டு நுடங்காது நானெனும் பொய்ம்
மாயமா மோகமற மாற்றினுன்—காயமே
கோயிலாக் கொண்டவருட் கோமாற்குத் தன்மயமெய்ந்
நேயமிகப் பூண்டதென் னெஞ்சு.

1127. நல்லநா ளுக நடக்கு மெனக்குநல்ல
தல்லதொன்று மின்றி யகத்திலே—நல்லவாச்
சேர வனைத்துந் திருவருளா லாண்டவற்கே
வாரம் படைத்ததென வாழ்வு.

1128. தேடக் கிடையாத் திரவியமென் பாலிரங்கிக்
கூடக் கிடைத்த குருமணியாய்—மூடக்
கடையேனைத் தன்சொரூபக் காட்சியளித் தாண்ட
வுடையானை நோக்கிற் றுணர்வு.

1129. ஒளிப்பெருக்கா(ம்) மோன வுவாக்கடலாத் தன்னைத்
திளைப்பியா நின்றபெருந் தேவன்—அளப்பருபே
ரின்பப் பதவாழ் வியல்பாக வாகவெனக்
கன்பு மலர்ந்த தவற்கு.

1130. அகத்தே யகமாக வாண்டவனுக் கன்பு
தொகுத்தேனென் சொந்த வுருவாப்—பகுத்த
விகற்பங்க ளானமயல் வேட்கையெல்லா மொன்ருத்
தொகப்பரமாந் தன்சிற் பதத்து.

1131. வாரமெய் யன்பு வளர்கின்ற தென்னையருட்
பாரமா வாண்ட பராற்பரன்பால்—தூரமா
வெண்ணித் தனைநா *னிரங்கையிலென் னுள்ளுணர்வா
அண்ணிற்றவ் வாண்டா னருள்.

*குறிப்பு - இரங்குகையில் என்பது இரங்கையில் என மருவி நின்றது.

1132. அறிவே சொரூபமா வாண்டவருட் பெம்மா
னுறவே யுறுதியாக் கொண்டேன்—உறவாகப்
பற்றியமற் றெல்லாமே பாழ்மயக்கக் கற்பனையா
வுற்றவெறுந் தோற்றமா வோர்ந்து.

1133. வாழ்வொளியா வென்னை வளைத்ததுமோ னனுபவக்
கேழ்கிளர்கை வல்லியமெய்க் கேமநிலை—பாழ்படுமூ
லாணவப்பே யாட்டமற வாண்டா னருட்பதத்தே
மாணவெனக் கன்பு மலர்ந்து.

(கொச்சகக் கலிப்பா)

1134. களங்கமில்சற் போதவருட் கைவல்ய மாக
வளங்கிளர்மோ னனுபவ வாழ்வளித்த வாண்டான்
உளங்கலந்து சுத்த வொளிவெளியா மன்ற
விளங்கலுற்றான் மாட்டு விளைந்ததுமெய் யன்பே.

1135. அந்தமில்பே ரின்ப வருட்கடலா வுள்ளம்புக்
கெந்தமைநன் காண்ட விறைவன் சொரூபத்திற்
சந்தமார் சுத்த சதாசிவமெய்த் தன்மையால்
விந்தைசேர் மெய்யன்பு மேன்மேல் விளைந்ததே.

## உ. கட்டுண்டேன்

(வெண்பா)

1136. கூர்த்தசிவ ஞானக் கொழுந்தாங் குருமூர்த்தி
யார்த்தென்னை வைத்தா னருட்பதத்தே—சீர்த்தபர
முத்தனு வாண்ட முனீந்திரன்பால் விந்தைசேர்
பெத்தனே யானேன் பெயர்த்து.

(கொச்சகக் கலிப்பா)

1137. மனத்தைக் கடந்ததோர் மாண்பா வுளத்துத்
தனித்தொளிர்சச் சிற்பரமே தானுன நானென்
றெனைத்தெரித்தென் மோக விகல்கெடுத்தாண் டானுக்
கனைத்துவிதத் தாலு மதீனமா னேனே.

குறிப்பு :—தானுன நான்-ஆன்மாவான நான்.

## ௬. நேயத் தழுந்தல்

(வெண்பா)

1138. ஆண்டா னருளா லகத்திற் கிளர்தலுற்றுத்
தூண்டுசிவ ஞான சொரூபவொளி—பூண்டமனப்
பாசக் கலக்கமறப் பாக்கியமாத் தேக்குசிவ
நேசத் தழுத்திற்று நேர்.

1139. இன்பவருள் வாழ்வா விதயத் தியல்சொருப
நம்ப னளித்தமெய்ஞ் ஞானனு பூதியால்,
வன்புறுபொய்ம் மாய மனப்பிழைதீர் சிற்பரமெய்
யன்பி லழுந்தினேன் ஆசாபா சங்கழன்றே.

## ௭. எனக்கு அகிலமும் அவனே

(கொச்சகக் கலிப்பா)

1140. காண்டலரு சுத்தவருட் கைவல் லியவடிவா
வாண்டவன் பாலேயென் ஞர்வமுற்றப் பொங்கலால்
வேண்டுபர மார்த்த விபூதியளித் தென்னையடிக்
காண்டவனே யானு னடியேற் ககிலமுமே.

## ௮. தன்னிழப்பு

(குறள்)

1141. பொன்மயமாம் போதவருட் புண்ணியச்செம் மேனிய
கென்னியல்யான் ரேற்றே னியைந்து. [னுக்

1142. காண்பவனைக் காணவருட் கண்ணளித்த வாண்டவன்
மாண்டது நா னென்னும் மயல். [பால்

1143. முற்றமுழுத் தன்மைசேர் மோனவருட் சிற்பரன்பால்
அற்றொழிந்த தென்னு ணவம்.

1144. பரந்தெளிந்த வாற்றுற் பகவன் பதத்திற்
கரந்ததுபா ழாணவக் கார்.

1145. சுத்தப் பரசிவமாத் துன்று சொரூபத்திற்
செத்ததெனக் கூனச் செருக்கு.

1146. அறிவான வுண்மையா வாண்டவன்பால், யானற்
றுறைவதா லுற்றே னுயர்வு.

(கொச்சகக் கலிப்பா)

1147. என்பரமல் லாத வியற்சிற் பரவெளியாந்
தன்பதத்தி லென்னைத் தரிப்பித்த வாண்டவனுக்
கின்பதுன்ப மெல்லா மிழந்தொழிந்தேன் யானறக்கெட்
டன்புசிவ மாக வகம்பொங்கு சாந்தியிலே.

1148. மானுபி மான மயக்கமற வுள்ளுணர்விற்
ருனேநா னாகத் தழைத்தொளிர்சுத் தாத்துவித
மோனனு பூதி முயங்குவித்த வாண்டவன்பால்
யானென வென்னை யிழந்துவாழ் கின்றேனே.

1149. உற்றிடா மூடனே னுள்ளத்திற் கைவல்ய
வெற்றிசே ருண்மை விளக்கமா வுற்றவருட்
பெற்றிசேர் சுத்தப் பிரம்ம சொரூபன்பா
லற்றொழிந்தேன் முற்ற வடியனேன் வேறறவே.

1150. நினைக்கவோ வன்றி மறக்கவோ வொண்ணுத்
தனிக்கே வலசொருப சாட்சாற்கா ரத்தால்
இனிக்கலுற்ற மோனப்பே ரின்பப் பெருவாழ்
வெனக்களித்த வாண்டவன்பா லென்னையிழந் தேனே.

## ௬. பரவெளி

(கொச்சகக் கலிப்பா)

1151. மூடியபா ழாணவத்தே மோகித்த மத்தனேன்
கேடிலா வுண்மைக் கிளரொளிசேர் கண்ணேக்கா
லீடிலா வாண்டவன்பா லெய்தியபே ரின்பவருள்
வீடுகை வல்ய விசுத்தப் பரவெளியே.

## எ. அறல்

(குறள்)

1152. குருத்துவத்தா லாண்டவருட் கோமான்பா லென்னைப்
பொருத்தலுற்றேன் பொக்கமற் றேன்.

1153. இன்பமா மோன வியற்பிரான் பாலற்றேன்
துன்பமனே வேகச் சுழல்.

1154. மான மழிந்தேன் மதியிழந்தே ஞண்டவன்பா
லூன மொழிந்தே னுளத்து.

(வெண்பா)

1155. ஈனந் தவிர விதயத்தே புக்கொளிர்பே
ரானந்த வாரியா மாரியன்பால்—மோனந்
தலைப்பட்ட போதே தருமா தருமந்
தொலைப்பட் டொழிந்தன காண்.

(கொச்சகக் கலிப்பா)

1156. வித்தகமெய்ஞ் ஞான விளக்கமார் சுத்தவருட்
புத்தகமா வென்னுட் பொலிந்துநின்ற வாண்டவன்
அத்தகவே நிற்குறுமான் மானுபவம் பொங்கலாற் [பால்
பொய்த்ததுவெம் பாசப் புணர்ப்பான மாயையே.

1157. பான்மையா லென்னைப் பரிசழித்த வாண்டவன்பால்
வான்மயமாப் பொங்கும் மகத்தா மனுபவத்தால்
ஆன்ம சொரூப வருள்வெளியிற் கெட்டதெனக்
கூன்மயமா நானெனன் றுயிர்த்தமலப் பாழுணர்வே.

1158. தானான மோன சமாதியா லின்பவருள்
வானு விதயத்தில் வைகலுற்ற வாண்டவன்பால்
ஆனாத சாந்தி யகங்கிளரப் பொங்கலான்
மானுபி மான மனக்கவலை தீர்ந்ததே.

(குறள்)

1159. விஞ்சையா லென்னை விடுவித்த வாண்டவன்பால்
முஞ்சியதென் மோக முனைப்பு.

(கொச்சகக் கலிப்பா)

1160. சாகசஞ்செய் வஞ்சச் சதிகாரச் சஞ்சலப்பாழ்
மோகசிந்தை யாவுமுழு முற்றத் தொலைந்தொழித்தேன்
ஏகசிந்தை யாக வயல்சொருப மோனவுணர்
வாகவெனக் குள்ளமர்ந்த வாண்டா னடிகளுக்கே.

1161. உள்ளத்துத் தன்னையென்று லோர்வித் தடியேனைத்
தெள்ளத் தெளிந்தசுயச் சிற்பரமா மோனவருள்
வெள்ளத் தமிழ்த்தியவென் மெய்ப்பரன்பால் யானெனும்
கள்ளத் தனமான கற்பனைதீர வுற்றதே. [பொய்க்

## அ. ஞானுநுபவம்

(குறள்)

1162. ஞானத் தவமியல்பா நண்ணியது சுத்தவருள்
வானமா வாண்டபிரான் மாட்டு.

(கொச்சகக் கலிப்பா)

1163. மலந்தருவாழ் வூடுநான் மட்கா தெனக்கா
நிலந்தனிலே வந்தருளி நீசமனத் தேனைக்
குலந்தருமெய்த் தொண்டரொடு கூட்டினன் மாட்டு
நலந்தருமெய்ஞ் ஞானநிலை நண்ணலுற் றேனே.

## ௯. சிவாநுபவம்

(வெண்பா)

1164. இவன்பொறுப்பென் றென்றுமின்றி யெல்லாம் பரமா
மவன்பொறுப்பே யாமெய் யறிவால்—அவம்படுசிந்
தாகுலமொன் றின்றி யருட்பதத்தே சுத்தசிவ
போகநுகர்ந் துள்ளேன் பொலிந்து.

(கொச்சகக் கலிப்பா)

1165. உள்ளத் தொளிவெளியா வோங்கும் பரசொருப
வெள்ளமென் பாலே விளைத்தவருள் வித்தகன்பாற்
கள்ளமனக் கற்பனைதீர் கைவல் லியந்துலங்கத்
தெள்ளத் தெளிந்த சிவானுபவஞ் சேர்ந்ததே.

1166. துள்ளி யெழுந்து துடித்துப் பதைக்குமனக்
கள்ள வகந்தைக் கசட்டுச் செருக்கழிய
உள்ளத் துணர்வொளியா வுற்ற சொரூபன்பாற்
றெள்ளத் தெளிந்த சிவானுபவம் பொங்கியதே.

1167. நுண்மைசேர் கைவல்ய நோக்கம் படரவெனக்
குண்மை நிலையி லுரம்படவென் னுருயிரை
வண்மைசேர் சுத்தவருள் வாலறிவா வாண்டவன்பாற்
றிண்மைசேர் சுத்த சிவோகந் தெளிந்தேனே.

1168. அவகதியிற் சென்றுநா னுழாது ஞானத்
தவநெறிசா தித்த சதாசா ரியன்மாட்
டவிர்சொருப மாக வடைந்தேன் பரதத்
துவசிவமே மோனத் துரியவொளி யாலே.

## ௧0. பிரம்ம பதம்

(வெண்பா)

1169. சொல்லுவ தெல்லாஞ் சுருதிப் பொருளாகப்
புல்லுவதாம் போதவருட் பூரணன்பால்—தொல்லியல்
நானு ரெனவகத்து நாடி யதன்மூலஞ் [சேர்
டானமாந் தன்மைதழைத் தேன்.

(கொச்சகக் கலிப்பா)

1170. முற்றமுழுத் தன்மையா னென்னை முகந்துகொண்ட
வெற்றவெளி யான விசுத்தவருட் சிற்பரன்பால்
உற்றிடமற் றொன்றுமிலா வொட்பநுட்பக் கைவல்யப்
பெற்றிசேர் மோனப் பிரம்மபதம் பெற்றேனே.

## ௪௪. ஐக்கியம்

(குறள்)

1171. மயக்க வகந்தையற மாய்தலால் யானு
நயக்கலுற்றே னுண்டவனை நான்.

1172. தொக்கமோ னனுபவச் சொக்கன் குனனுபவத்
தொக்கக் கலந்த துணர்வு.

(வெண்பா)

1173. முளைத்த வகந்தை முனைப்படங்க வாண்டான்
விளைத்தவருட் போத விளைவாய்—உளத்தி
லெனக்குந் தனக்கு மியலொருமை சற்றும்
நினைக்கரிதா வுள்ள நிலை.

1174. நானேதா னாக நயக்கவெனக் குள்ளுணர்வாய்த்
தானேநா னாகத் தலைப்படலால்—வானு
வொளிர்சிற் பரமா னுடையானோ டொன்றிப்
பிளவற்ற வென்னியல்பெற் றேன்.

1175. மறைமுடிவா நின்றபெரு மாட்சிசேர் மோன
நிறைமொழியின் செம்பொருளென் னெஞ்சில்—உறு
பொய்த்துவிதம் போகவருட் போதானுபூதியா [மலைவாம்
வுய்த்தவனென் சொந்த வுரு.

1176. நானற்ற நானேமெய்ந் நானாகத் தன்சொருப
மோனவுணர் வென்னுளத்து முற்றலால்—யானற்
றியல்குருக்க ளான விறைரமணன் பாலென்
னியலுருக்கண் டின்பமுற் றேன்.

1177. தன்னிலே யென்னையொரு தன்மயமா வாண்டவன்பால்
என்னியல்யான் பெற்ற வியைபாலே—அன்னியமாம்
பேதபுத்தி யற்ற பிரம்ம சொரூபவருட்
போதமுத்தி யுற்றேன் பொலிந்து.

1178. கலைஞானப் போக்கிற் கழியாது புத்தி
நிலையாகத் தன்பதத்து நிற்க—விலையாவோ
ராவணங்கொண் டென்னை யடிமைகொண்ட வாண்ட
வோர்வணங் கொண்ட துணர்வு. [வன்பா

1179. தன்னியல்பு வென்னைத் தலையளித்த தம்பிரான்
என்னியலா நின்று னிதயத்தே—அன்னியமாம்
பண்டைத் துவிதமொரு பாழ்மனத்தின் கற்பனையா
மண்டிப் படர்ந்த மயக்கு.

1180. கருத்தினின்று மோகங் கழன்றொழிய வென்னுட்
பொருத்தமாச் சேர்ந்தவருட் போதம்—விருத்தமாம்
பேத வுணர்ச்சி பிரிந்தொழிய வாண்டவனோ
டோர்தகவு கூட்டிற் றுளத்து.

1181. கண்ணு ரமுதக் கடலான் பரசொருப
விண்ணைக வென்னை விழுங்கியதால்—கண்ணு
ரமுதநோக் காலவ் வமுதமே யாக
வமைதியுற்றே னுண்டா னகத்து.

1182. சிந்தையற்ற மோனத் தெளிவான சாந்தியிலே
சந்தியா நின்றேன் சதாசிவத்தை—எந்தையாந்
தன்னொடுநா னென்றுத் தழைத்த தனுபூதி
மன்னுமியல் பாக மனத்து.

1183. கண்டிக்க வொண்ணுக் கடவுளா யென்னுளத்து
டெண்டிக்கு மொன்று வியல்வுற்றான்—பண்டைக்
கணக்குவழக் கெல்லாங் கழிந்தொழிய வாண்டாற்
கிணக்கமுற்றேன் யானிரண் டற்று.

(கொச்சகக் கலிப்பா)

1184. நீவாவென் றென்னையென் னெஞ்சினுள்ளே கூவியழைத்
தோவா வருள்செய்த வுத்தமச்சீர் வித்தகனைத்
தேவாதி தேவச் செழியோனைத் தன்பெயரென்
ஞவாய்தித் திக்க நடந்தானைச் சேர்ந்தேனே.

1185. அறிவே சொரூபமா வாண்டதன்றி அந்த
நிறைவினின்று நீங்கா நிலையுமளித் தான்மாட்
டுறவுபிறி வென்ற வுணர்வொழிய யானவ்
வறிவான வுண்மையா வாழ்ந்தொழிந் தேனே.
குறிப்பு:– ஆழ்ந்தொழிந்தேனே – அற்றொழிந்தேனே
எனவும் பாடம்.

1186. மோனமே யாண்டகுரு மூர்த்தி வடிவமென
நானறிந்தேன் சுத்தமெய்ஞ் ஞானவருட் காட்சியால்;
வானவருஞ் சாரு வடிவொடுநா னென்றலுற்றேன்
நானற் றொளிர்சொருப ஞானமோ னத்தாலே.

1187. நயக்கலுறத் தக்கமெய்ஞ் ஞானநாட் டத்தால்
மயக்கப் பிறவியற மாற்றியே யுள்ளத்
துயக்கமறக் கண்ட வொளிப்பிரான் றன்னோ
டயிக்கியமெய்த் தன்மை யடையலுற் றேனே.

1188. குன்றாத சுத்தவருட் கோமான் குருபரனை
நன்றாக வாழ்த்திமெய்ஞ் ஞானனு பூதியுற்றேன்;
ஒன்றான வுண்மையுணர் வுள்ளத் தொளிவெளியா
என்றுதை யோடிறுக வென்னைப் பிணைத்ததே.

1189. ஆரா வியற்கை யவாவறச்செற் றுள்ளத்திற்
பேரா வியற்கைதரும் பெம்மான் சொரூபவருட்
சீரா விளைந்த சிவானுபவப் பெற்றியால்
ஆரா நின் றேனவன்பா லைக்கியமெய்த் தன்மையே.

1190. அன்னிய புத்தி யகன்றொழியென் றுள்ளுணர்விற்
றன்னியலை யென்னியலாத் தானொளிரக் காட்டியே
என்னைக் கலந்த விறைபால்யா னற்றொழிந்தேற்
கென்னி னினிதா வியல்கின்று னன்றேனே.

1191. சுள்ளெறும்பு போன்றகொடுந் துஷ்டமனோ வேகவிடத்
துள்ளலற்ற சாந்தத் துரீயத்தில், யானென்னுங்
கள்ளவகப் பாழைக் கடந்துசிவக் கேவலமா
வுள்ளவனை யுள்ளத் துணர்வுருவா வுற்றேனே.

## ௬௨. அருள் வாழ்வு

(குறள்)

1192. உண்மை யுணர்த்தியெனக் குள்ளொளியா வுற்றவன்
வண்மைசேர் வாழ்வுபெற் றேன். [பால்

1193. இன்பவாழ் வாக வியல்வதுளத் தாண்டவன்பா
லன்புமுற்றப் பெற்ற வறிவு.

(கொச்சகக் கலிப்பா)

1194. உலக மயல்கெடக்கூ றொட்பநுட்ப நோக்கால்
அலகில்பே ரின்ப வருள்வாழ்வு பெற்றேன்
குலவுசிவ ஞானக் கொழுந்தாக வுள்ளத்
திலகு சொரூப விறைரமணன் பாலே.

1195. அளக்க வொணாதசுத் தான்ம சொரூப
விளக்கமா வுள்ளவருள் வித்தகன்பாற் சற்றுந்
துளக்கமறப் பொங்கு சுவானுபவ வாழ்வு
திளைக்கலுற்றேன் யானெனும்பொய்ச் சிச்சடக்கட்
[டற்றே.

1196. மாணா வுலக மயக்கி லுழன்றவென்னை
வாணாள்வீ ணாகாமல் வந்துதடுத் தாண்டவன்பால்
வேணாசை யான விசுத்த வருட்பெருவாழ்
வூணா வொழிந்தே னுணர்விற் கிளர்ந்ததே.

1197. ஒளிவெளியா வுள்ளத் துறைசொருபன் றன்மாட்
டிளிவரல்சேர் சிச்சடக்கட் டிற்றொழிந்த வாற்றாற்
களிவரல்மோ காணவப்பாழ்ங் கற்பனையி னின்று
தெளிதலுற்றேன் கைவல்யச் சிற்பரமெய் வாழ்வே.

1198. தாழ்ந்தடியிற் சென்றடைந்த தஞ்சனேன் பொய்ம்மயக்
தாழ்ந்தழுங்கா வாற்று லகன்பரமா வென்னைமுற்றச்[கத்
சூழ்ந்துகொண்ட சுத்தத் துரீய சொரூபன்பால்
வாழ்ந்திடுகின் றேனகப்பாழ் மத்தமனத் துன்பமற்றே.

1199. கற்பனைசேர் மோகங் கரந்தொழியக் கண்டவருட்
சிற்பரன்பாற் சித்தஞ் சிவமயமாச் சேர்ந்தொளிர்மெய்த்
தற்பரமோ னுபவஞ் சார்தலாற் போதரந்தப்
பொற்புறுவே தாந்தப் பொருள்வாழ்வு பற்றியதே.
குறிப்பு:- சிற்பரன்பால் சார்தலால் என வியையும்.

1200. ஓங்குயர்வாழ் வாக வொளிர்சொருப சாந்தியால்
வீங்குசிவ மான விசுத்தவருட் சிற்பரன்பாற்
பாங்கரா மெங்களகப் பாழா ணவங்குலைய
யாங்களுமா வைகு மியற்பரவாழ் வுற்றேமே.

1201. எற்றென் றிரங்க விடமின்றி யான்றுன்
வற்றெழியக் கண்ட வருட்பிரான் மாட்டெனக்கு
முற்றியதோ ரத்துவித மோனனு பூதியாப்
பற்றியது சுத்தப் பரந்தாம வாழ்க்கையே.

## ௬௱. பேரின்பம்

(குறள்)

1202. காந்த வசீகரக் கண்ணேக்கா லாண்டவன்பால்
ஏய்ந்ததென்பே ரின்ப வியல்.

(கொச்சகக் கலிப்பா)

1203. தடையான பாசந் தகர்ந்தொழியக் கண்ணு
லடியேனை யாண்ட வருட்பிரான் மாட்டுத்
திடஞான மோனந் தெளிதலா லுள்ளத்
தடையலுற்ற தாரவெனக் கந்தமில்பே ரின்பே.

1204. பொறிபுலனே டொன்றிமனம் பொக்கமுறு துண்மை
யறிவொளியா வுள்ளத் தவிர்சொருபன் மாட்டு
நிறைவுறுபே ரின்ப நிலைகண்டேன் பாசக்
கிறியுறுபா ழாணவப்பேய்க் கேதந்தீர்ந் தேனே.

### கச. சாந்தி

(குறள்)

1205. மாயமனக் கற்பனையை மாற்றியவென் ஞண்டவன்பாற்
றேயலுற்றேன் சாந்தி சுகம்.

(வெண்பா)

1206. மோனமெனக் கான்ற முழுமுதற் செம்பொருளா
ஞானவருட் பேரின்ப நண்ணலால்—ஊனமனப்
புன்பிறவித் துன்பமறப் பொங்குமுப சாந்தியுற்ற
தென்பிறவி யாண்டா னிடத்து.

(கொச்சகக் கலிப்பா)

1207. ஈனவகப் பேயே னிதயத்திற் கைவல்ய
வானப்பே ரின்ப வளநா டடைவித்து
மோனவருட் செம்பொன் முடிசூட்டி யாண்டவன்பா
லூனமறப் பொங்கிற் றுபசாந்த போகமே.

1208. காந்திசேர் சுத்தவருட் கண்ஞேக்கா லுள்ளம்புக்
கேந்திழையார் மையலினின் றென்னைநன் குய்வித்த
சாந்தியுரு வான சதாசிவன்மாட் டார்வமெழக்
காந்தமா வென்னைக் கலந்ததுப சாந்தியே.

### கடு. மோனுநுபூதி

(கொச்சகக் கலிப்பா)

1209. சுத்தப் பரசிவமாத் துன்று நிஜசொருப
பத்தியுணர் வுள்ளூறப் பாலித்த வாண்டவன்பாற்
சித்தங் கரைந்தொழியச் சிற்பரமெய் வாழ்வாகப்
புத்தமுத மோனுநு பூதியுளம் பொங்கியதே.

1210. தானுன வுண்மைநிலை தப்பாது சுத்தவருள்
வானுக வென்மனத்தை மாற்றியநல் லாண்டவன்பால்
ஆனு வருள்வாழ் வகங்கிளரப் பொங்குசுப
மோனுநு பூதியா முற்றியதென் முற்றவமே.

1211. சுற்றுமுற்று நோக்கிச் சுழலுமனப் பேயேனுக்
கற்றமற்ற வுண்மை யறிவொளிசே ராண்டவன்பாற்
பற்றலுற்ற சுத்தவருட் பார்வையா லுள்ளத்து
முற்றியது சிற்சொருப மோனானு பூதியே.

### கக. முக்தி

(குறள்)

1212. மோனப் பிரான்பாலே முற்றியதென் னுள்ளத்து
ஞானமார் முத்தி நலன்.

(வெண்பா)

1213. துரியவருள் வாழ்வாத் துலங்கியதே யுள்ளத்
தரிய வதீதநிலை யாக—விரியலுற்று
மோனவியற் சிற்பரமா முத்திப் பெரும்பதவாழ்
வானதெனக் காண்டவன் பால்.

1214. திருத்தியுற்றேன் முற்றத் திருவருளா லுள்ளத்
திருத்தியதால் யானவனே யென்னும்—பிரத்தியபிஞ்
ஞானமளித் தாண்டகுரு நாதன்பா லத்துவித
மானபர முத்திய டைந்து.

குறிப்பு:- முத்தியடைந்து முற்றத் திருந்தியுற்றேன் என இயையும்.

(கொச்சகக் கலிப்பா)

1215. தூண்ட வொணாத துரீய சொரூபமா
வீண்டவென் றென்று மியல்பா வுளத்தொளிர் நல்
லாண்டவன்பாற் பெற்றே னகில சுகங்களுமா
மூண்டொளிர்ஞா னானுபவ முத்திப் பெருநலமே.

## 12. ஆண்டவன் சந்நிதி மாட்சி

(குறள்)

1216. அங்கணனா வாண்ட வருட்பிரான் சந்நிதியெங்
கெங்கிலுமார் வுற்ற தினிது.

(வெண்பா)

1217. இமைத்து மிமையோரை யெண்ணுர் பொருளா
ரமணனை நோக்கி ரமித்தோர்—அமரர்க்
கரசனை நோக்கி யகமகிழ்ந்தோர் கண்ணுக்
கிரசனையுண் டாக்குவார் யார்.

1218. யான்புகலாக் கண்டவன்பா லென்னுளத்து மெய்ஞ்
ஞான நோன்பெளிதாக் கூடி நுனித்ததே—வான்பரவு
சன்னிதா னத்திலருட் சார்படையப் பெற்றுருக்
கென்னதான் கூடா தினிது.

(கொச்சகக் கலிப்பா)

1219. பந்திக்க லுற்றவெம் பாசமறக் காண்டலாற்
சந்திக்க வேண்டுவது சற்குருதன் சந்நிதியே
வந்தித்து வாழ்த்தியருள் வாலறிவன் மாணடியைச்
சிந்திக்குஞ் சிந்தை சிவமயமாப் பொங்குமே.

1220. பாழிலே யாழ்ந்து பதைத்து வருந்துங்கால்
ஊழிதோ றூழியெனக் குண்மைவாழ் வாகவுளத்
தேழைமைதீர்த் தாண்டபே ரின்ப வருட்பிரான்
சூழலில்வாழ் வார்க்குத் துறக்கஞ் சிறுதுரும்பே.

1221. அன்பறிவொன் ருக வகங்கிளரப் பொங்கும்பே
ரின்ப வுணர்வுருவா வென்னைக் கலந்தவிறை
தன்பதமெங் கெங்குந் தழைத்தலாற் றன்னடியேற்
கிம்பரும்ப ரெல்லாமவ் வெம்பிரான் சந்நிதியே.

1222. கார்சான்ற பாழிற் கலங்கலுற்றேர் கைவல்யச்
சீர்சான்ற சுத்த சிவானுபவந் துன்றுவார்
கூர்சான்ற ஞானக் குலாச்சேர் குருரமணப்
பேர்சான்ற வுண்மைப் பிரான்சந் நிதியுறிலே.

1223. ஏச்சரிய கீர்த்திசே ரெம்பிரான் யானெனும்பாழ்ம்
பேய்ச்சரியை மூற்றப் பிரிந்தொழிய வுள்ளம்புக்
காச்சரிய மாக வணைந்தபிரான் சன்னிதிச்சீர்
பேச்சரிய சுத்தப் பிரம்மபதப் பெற்றித்தே.

# 13. ஆண்டவன் சந்நிதியில் அநுபவம்

## க. அருட்பார்வை

(கொச்சகக் கலிப்பா)

1224. வித்தகமெய்ஞ் ஞான விலாசஞ்சேர் சந்நிதியில்
அத்தனடி சார வடைந்துமுன் னின்றேற்கு
மைத்த வகப்பாழ் மனங்கரக்கத் துன்றியது
சுத்தவெளி யான சொரூபவருட் பார்வையே.

## உ. தவம்

(கொச்சகக் கலிப்பா)

1225. இன்னு மயக்கிலுழன் றேங்கா திதயத்திற்
பொன்னனை சுத்தவருட் பூரணவாழ் வுற்றெளிர
என்னுலே தன்னியலே யெண்ணுவித்த வெம்பிரான்
முன்னுலென் னுருயிர்க்கு முற்றியது நற்றவமே.

1226. தீனச் செருக்கென்றுஞ் சேராது சுத்தவருள்
வானப் பரசொருப வாழ்வா வொளிர்தருமெய்ஞ்
ஞானத் தவமுளத்து நண்ணியது தன்னியல்பா
மோனப் பிரானை முத்தப்பன் முன்றிலிலே.

## ஈ. யோகம்

(குறள்)

1227. கோக விசாரங் கொளுவினன் சன்னிதியில்
யோகவுணர் வூறிற் றுளத்து.

## ச. நிட்டை

(கொச்சகக் கலிப்பா)

1228. பங்கமற்ற சுத்தப் பரசொருபன் சன்னிதியெங்
கெங்குமுற்ற வுண்மை யிதயத் தொளிர்தலால்
அங்கிங் கென நா னலமரா தன்பறிவாத்
தங்கலுற்றேன் சஞ்சலமோர் சற்றுமின்றித் தன்பாலே.

## ரு. அற்றவை

(குறள்)

1229. அகக்கலக்க மற்றேன் அறிவொளிசேர் மோனம்
முகக்கலுற்ற வாண்டான் முகத்து.

1230. அறிவு தெளிதலா லாண்டா னெதிரிற்
பிறிவுற்ற தாணவப்பாழ்ம் பேய்.

1231. சாந்தி விலாச சுதாசிவ மூர்த்திமுகக்
காந்தியிலே கற்பனைதீர்ந் தேன்.

(வெண்பா)

1232. ஒன்றே யுரைப்பா னொருசொல்லே சொல்லுவான்
என்றென்று மொன்று வியல்சொருபன்—முன்றில்வாய்
மற்றேது மற்றபெரு மாண்பதமே பற்றிமயற்
பற்றேது மற்றேன் பரத்து.

1233. பாதவொளி யானவருட் பார்வையாற் பாழிருள்சேர்
பேதமதி முற்றப் பிளந்ததே—சாதனையா
வொன்றுஞ்செய் யாதே னுளந்தேறத் தான்பரமா
நின்றகுரு தன்சந் நிதி.

(கொச்சகக் கலிப்பா)

1234. மருள்வடி வான மனத்தியை பற்ற
வருள்வடி வானசுத் தான்ம சொரூபன்
தெருள்வடி வாகத் திகழ்சந் நிதியி
லிருள்வடி வான வியற்கையற் றேனே.

1235. ஏமமோ ராதே னிதயம்புக் காண்டபரந்
தாமனூர் சந்நிதியிற் சற்றிருந்தேன் சிந்தையருட்
சேமமா வுள்ள சிவத்தி லழுந்தலாற்
காம வெகுளி மயக்கங் கழிந்தவே.

1236. ஆளுற் றவர்பா ழகந்தையைத்தன் மெய்ஞ்ஞானத்
தாளிற் சிதைக்குஞ் சதிராளன் சந்நிதியில்
நீளத் தொடர்ந்தொளிர்மெய்ஞ் ஞேயவருட் காட்சியால்
மாளுற் றதுமயக்க மாணுபி மானமே.

1237. எள்ளத் தனையு மிடர்ப்பாட் டுணர்ச்சியறத்
தெள்ளத் தெளிந்தவருட் சிற்பரமா நானுனென்
றுள்ளத் தொளிர்சொருப வுண்மைப் பிரான்றிருமுன்
கள்ளமனக் கற்பனு சத்தி கரந்ததே.

1238. விருப்புறு சாந்தி விலாச(ம்) மேன் மேற்பொங்
கருட்பர மாக வளைந்துமெய்ஞ் ஞான
நெருப்புறு தன்சந் நிதியா மிதயத்
திருப்பதா வில்லை மனக்கற் பனையே.

1239. தெள்ளத் தெளிந்தசிவச் சிற்பரமா மோனவருள்
வள்ளற் பிரான்றிருமுன் மாய மனத்தேனுக்
குள்ளத் துணர்வுருவா வுண்மை யொளிர்தலாற்
கள்ளமா மந்தமனக் கற்பனைதீர் வுற்றதே.

1240. எற்றேயெற் றேயென் றிதயம்பூ ரிக்கவெனைச்
சற்றே கடைக்கணித்த தம்பிரான் சன்னிதியிற்
பெற்றே மகிழ்ந்தவருட் பேரின்பப் பெற்றியா
லற்றே யொழிந்ததுபா ழாசாபா சங்களே.

1241. மூண்டமோ னுனுபவ முத்திப் பரசுகவாழ்
வீண்டவென் னுள்ளத் திருந்தொளிர்பெம் மானெதிரிற்
காண்டலுற்ற சுத்தவருட் கைவல்யக் காட்சியால்
மாண்டதெல்லா வித்தைகளும் மாயமயக் காகவே.

1242. மைக்கா ரிருளுலக மாயப் புணர்ப்பிலுழன்
றெய்க்கா தடியே னிதயத்திற் கைவல்ய
மெய்க்காட்சி யாக விளங்கலுற்ற வாண்டவன்முற்
பொய்க்காட்சி யாகப் புலம்பியது முப்புடியே.

### ௬. அகந்தை யழிவு

(குறள்)

1243. ஆண்டவன் முன்றி லடைந்தேற் ககந்துலங்க
மாண்டதகங் கார மயல்.

(வெண்பா)

1244. சாந்திப் பயனெனக்குச் சாரத்தன் சந்நிதியிற்
கூர்ந்தவருட் காட்சிக் குலாத்திறத்தால்—பேர்ந்ததகப்
பற்றுன மோகவறும் பாழறிவு சிற்பரமே
துற்றுக முற்றியது சூழ்ந்து.

குறிப்பு:- துற்று - அனுபவம்.

1245. அருட்குன்ற மாக வவதரித்த வாண்டா
னிருக்கின்ற மாட்சியா லென்பால்—உருக்கொண்
டுழன்ற வகந்தை யுணர்ச்சி யுளத்திற்
கழன்றதுமெய்க் காட்சி கலந்து.

1246. மருள்வல் லபநிற்க மாட்டுமோ தெய்வ
வருள்வல் லபஞ்சே ரகத்தே—வெருள்சே
ரகந்தை மயக்கமகத் தந்தரமாச் சார்பற்
றிகந்ததா லாண்டா னெதிர்.

(கொச்சகக் கலிப்பா)

1247. காண்டலரு முண்மைக் கதிரொளிசேர் கண்ணேக்கால்
ஈண்டவென் னுள்ளத் தியற்பரமா வாண்டவன்முன்
மாண்டதுநா னென்னு மயக்கப்பா ழாணவப்பேய்
மீண்டெழவொண் ணாது விசுத்தவருட் சிற்பதத்தே.

1248. தன்பதமே சற்கதியாச் சார்ந்த வடியேனுக்
கன்புசிவ மானஞா னுபவ மாட்சிசே
ரின்பவருள் வாழ்வா விதயத் தொளிர்சொருப
நம்பன்முன் ஞணி நசித்ததகப் பேய்முனைப்பே.

1249. சுட்டறிவைச் செற்றுத் துரிய சொரூபமா
வுட்டெளியப் பொங்கு முடையான் பரஞ்சோதி
வெட்டவெளி யாக விளங்கலுற்ற சந்நிதியிற்
பட்டதுநா னென்னும் பசாச வகந்தையே.

1250. ஊன வுடலுலகில் யானெனதென் றாழ்த்தொழிந்த
ஈனமட வேனை யினிதாண்டு சுத்தவருள்
வானமா முற்ற வசீகரித்த வாண்டவன்முன்
நானென்னு மூனமதி நாணிக் குலைந்ததே,

1251. அங்கலாய்த் துள்ள மழுங்கிக் கலங்கலுற்றேற்
கங்கப்ப ஞக வகத்தே யமர்ந்தபெருந்
துங்கப் பிரானுந் துரிய சொரூபன்முன்
மங்குற் றொழிந்ததுபுன் மாயவகப் பேயறிவே.

1252. சுத்தோக மாகத் துலங்கு சொரூபன்முற்
றத்தோ மசிமறையாற் சாரக் கடவபயன்
முத்தோக மாக முயங்கலுற்ற வுள்ளுணர்விற்
பொய்த்தோ டியதுமயற் பொக்கவகப் பேய்ப்பிழையே.

1253. மறப்புநினைப் பாமடுத்த மாயமனம் மங்கப்
பிறப்பிறப்பாச் சேர்ந்த பெருங்கலக்கம் பேரச்
சிறப்பென்னுஞ் செம்பொருளாஞ் சிற்சொருப மோனக்
குறிப்படர்வித் தான்முற் குலைந்ததகப் பேயே.
குறிப்பு:- குறிப் படர்வித்தல்-குறியிற் செலுத்துதல்.

1254. ஏன்றுகொண் டாண்ட விறைவன் றிருமுன்னர்ச்
சான்றான சுத்தவருட் சைதன் னியப்பார்வை
யூன்றலா லுள்ளத் தொழிந்ததகப் பேய்ச்சரியை;
தான்றானுந் தன்சொருபத் தன்மை தலைப்படவே.

1255. என்றுமொன் றாக வியல்சொரூப சற்குருதன்
முன்றி லடைந்து வணங்கிமுன் னின்றேற்கு
மன்ற விளங்குசிவ மாட்சியா லுள்ளத்திற்
குன்றியது நானென்னுங் கோசவகப் பேய்முனைப்பே.

1256. தொன்றுதொட்டென் னுருயிர்க்குத் தோன்றாத் துணை
துன்று சொரூபவருட் சோதிப் பிரான்றிருமுன் [யாக
மன்றவொன் றாக மலர்ந்தசிவ பூரணத்திற்
பொன்றியது நானெனும்பாழ்ம் பொய்க்கலக்க
[வாதனையே.

## எ. பிறவி யறல்

(வெண்பா)

1257. பிறந்திறத்த லில்லாப் பெருமா னடியோம்
பிறந்திறக்கும் பீழையறப் பேரப்—பிறந்தான்போற்
றோன்றினன் *முன்புவெறுஞ் சூதான மாயவித்தை
போன்றொழிந்த தெங்கள் பிறப்பு.

*முன்பு - சன்னிதியில்.

(கொச்சகக் கலிப்பா)

1258. ஊனவகப் பேயுணர்வாற் பாழிலுழன் றேனுக்கு
ஞானவருட் கண்ணளித்த நம்பன்முற் பேரின்ப
வானமே யாக மலர்ந்தியல்வாழ் வாலறிவிற்
போனதுநா னென்னுமயற் புன்பிறவித் துன்பமே.

1259. வினைக்கேட ஞான விசுத்தவருட் பார்ப்பான்
முனர்க்கே வலஞான முத்தித் தெளிவால்
மனக்கேத மான மயற்பிறவித் துன்பம்
எனக்கேது மில்லா திகப்பக்கண் டேனே.

அ. உலகக் கன வறல்

(குறள்)

1260. அருளே சதமா வடைந்தேன் மருள்சே
ருலகக் கனவொழிந் தேன்.

(கொச்சகக் கலிப்பா)

1261. *அறிவையே †கள்ளூற் றகல்வெளியா மோனச்
செறிவா லிதயமணிச் சிங்கா தனத்திற்
பிறிவறத்தான் வீற்றிருக்கும் பெம்மான்முற் காணேன்
குறிகுணங்க ளாமுலகக் கோலா கலமே.

*அறிவு– அகந்தை வடிவான மனவுணர்வு.
†கள்ளூற்று – கவர்ந்து.

௯. மெய்யுணர்வு

(குறள்)

1262. ஊனமற வுண்மையுணர் வுற்றதுளத் தாண்டபிரான்
மோனகம் பிர முகத்து.

1263. மோனகுரு மூர்த்தி முகத்தே விளைந்ததெனக்
கூனமற்ற வுண்மை யுணர்வு.

௧0. சொரூப சாட்சாற்காரம்

(கொச்சகக் கலிப்பா)

1264. தனுகரண மோகமனத் தாபமறத் தன்மெய்
யனுபவஞா னங்குளுவி யாண்டவன்முன் மாயக்
கனவெனவே யெல்லாங் கழன்றொழிய வுண்மை
நனவகமே யாவகத்து நண்ணிற் றுறைத்தே.

1265. அண்ணலைநான் சேவித் தமர்ந்தேற் கவன்றிருமுன்
எண்ணலையற் றேய விதயம் புளகமுறத்
தண்ணு ரமுதமாத் தங்கு சொரூபவியல்
வண்ண மௌனத்தன் வசமாக் கவர்ந்ததே.

1266. நேராக நின்றேனை நீயா ரெனக்கேட்ட
கூரான சுத்தவருட் கோமா னெதிரிலெனக்
காரேநா னென்றவிசா ரத்தா லகந்தைமயல்
பேர்வா லகத்திற் பிறங்கியதென் னுண்மையே.

1267. என்னத்த னை வியற்பிரான் யாதொன்றுந்
தன்னைத் தவிரமற்றென் றில்லான் அடியேனு
மென்னைத்தா னாக வியல்வித்தான் சந்நிதியின்
மன்னிப் பரசொருப மாத்திரமா வாழ்ந்தேனே.

1268. மெய்ஞ்ஞான வீரவருள் வெற்றியால் என்னகத்துப்
பொய்ஞ்ஞால போகமறப் போக்கினன் சந்நிதியில்
அஞ்ஞான வார்த்தைக்கோ ரர்த்தமற மெய்ஞ்ஞானச்
செஞ்ஞாயி றாகத் தெளிந்தேன் சொரூபமே.

1269. என்னை யறியே னெனும்பொய்த் தடுமாற்றந்
துன்னியதென் றென்றுமிலை சொந்த சொரூபத்தென்
றென்னையினி தாண்ட விறைவனருட் சிற்சொருப
சன்னிதியிற் கண்டதே தன்னியல்யான் சார்ந்ததே.

1270. சுத்தவருட் சொக்கன் சொரூபவிலா சத்திருமுன்
முத்தியுணர் வூற்றான மோனந் துலங்கலால்
எத்தகவு மில்லா விழிசினே னுள்ளத்தில்
வித்தகவாழ் வான விசுத்தவியல் பற்றியதே.

## கக. சிவ சாட்சாற்காரம்

(கொச்சகக் கலிப்பா)

1271. நோலறிவில் லாது நுடங்கினேற் காண்டவன்முன்
வாலறிவா வுண்மை மலர்தலா லென்னகத்து
மாலறிவாம் பேத மனக்கற் பனையகலச்
சாலவிளங் கென்னியல்பு சாந்த சதாசிவமே.

குறிப்பு:- நோலறிவு - அபரோக்ஷ ஞானம்.

1272. சார்ந்த பலப்பலவாஞ் சார்புகளோ டாணவப்பேய்
பேர்ந்தொழிய வாண்ட பிரானெதிரிற் றன்னியல்பா
வார்ந்த சிவத்துவஞா னனுபவத் தாலகத்திற்
சேர்ந்ததுகாண் சுத்த சிவாத்துவித வுண்மையே.

1273. அகத்தே பரசொரு பானுபவ மோன
சுகத்தேன் பிலிற்று துரியப் பதத்தான்
*முகத்தே யடைந்தமுழு மூடனேன் காண
மகத்தா விளங்கியது மன்னுசிவ மாண்பே.
*முகம் - முன்பு, திருமுன்பு.

1274. ஊனு ருடலா வுயங்கலுற்றே னுள்ளத்தா
டானு வருளாலென் னுணவத்தை யாவரித்துத்
தானேதா னுகத் தழைத்தொளிர்கின் றுன்றிருமுற்
றேனே யனைய சிவானந்தம் பொங்கியதே.

## கஉ. கடவுள் விளக்கம்

(கொச்சகக் கலிப்பா)

1275. பணித்தென்னை யாண்ட பரஞ்சோதி தன்பால்
அணித்தா வடைந்தேற் கருள்விலா சத்தால்
நணித்தா விளங்கிற்று ஞாலத் தினுந்தான்
கணிக்கலரு முண்மைக் கடவுட் பரமே.

குறிப்பு:- ஞாலத்தினும் நணித்தா எனக்கூட்டுக.
ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணிய துடைத்து. (குறள்-353)

## கங. பிரம்ம பதம்

(கொச்சகக் கலிப்பா)

1276. பார்வையா லென்னைப் பரிபாகஞ் செய்தவருட்
கூர்மைசேர் ஞான குருநாதன் முற்குலவு
சீர்மைசேர் சாந்தி திளைத்தலுற்ற வந்நிலையிற்
பேர்வரிய சுத்தப் பிரம்மபதங் கூடியதே.

### கச. கைவல்யம்

(கொச்சகக் கலிப்பா)

1277. ஊழ்வகையா லென்னைத்தன் னுண்மைத் திருவடியிற்
றூழ்வறவே சேர்த்த தரும தயாபரன்முன்
வாழ்வதனு லென்னகத்து மாயா விலாசமறக்
காழ்வளர்ஞா னுனுபவக் கைவல்யஞ் சார்ந்ததே.

1278. தொக்க சொரூபத் துரிய வொளிபரக்கச்
சிக்கெனவுட் புக்கவருட் சிற்பிரான் சன்னிதியிற்
புற்கெனமற் றெல்லாப் பொலிவுகளும் மங்கலாற்
கற்கவெனக் கொன்றுமிலேன் கைவல்யக் காட்சியிலே.

### கரு. பரவெளி

(கொச்சகக் கலிப்பா)

1279. ஒன்றுபட்ட வுண்மை யுணர்வொளியாங் கூர்வாளாற்
பொன்ற மயக்கவகப் பூட்டறுத்தான் சந்நிதியில்
துன்றுசற் போத சொரூபப் பரவெளியா
மன்ற மனந்தெளிந்த மாட்சியால் வாழ்ந்தேனே.

1280. பாழ்வளர்மோ கக்கற் பனையிற் படர்ந்துழன்ற
ஏழையே னூழ்வலியை யெள்ளிப் புறந்தள்ளி
வாழ்வொளியா வுள்ளத்தில் வைகுபரஞ் சோதியருட்
சூழல் பரவெளியாத் துன்றியது மன்றவே.

1281. மோனனு பூதி முகக்கவென் னுள்ளத்துத்
தானு வொளிர்சொருப சற்குருதன் சந்நிதியில்
யானேயா னுக விருந்தொளிர்சற் போதவருள்
வானே பரந்தாம வைகுந்த மானதே.

### கசு. அருள் வாழ்வு

(வெண்பா)

1282. தூண்டுசிவ ஞானவருட் சோதிப் பிழம்பாக
மூண்டகுரு மூர்த்திதிரு முன்னிலையிற்—பூண்ட
வருட்குறிப்பை யாய்ந்தாய்ந் தறிவுமலர்ந் துண்மைப்
பெருக்கமுற்ற வாழ்வுபெற் றேன்.

1283. போதவருட் பூரணனும் புண்ணியன்முன் னண்ணிய
பேதவகப் பேய்க்கலக்கம் பேர்தலால்—மேதகுசச் [தும்
சிற்பரமா மோன சிவானந்த வாழ்க்கையெனக்
கற்புதமா வுற்ற தகத்து.

(கொச்சகக் கலிப்பா)

1284. இன்பதுன்ப மான விரட்டையுணர் வற்றெளிர்பே
ரின்ப வியற்பரமா யான்யானென் றுள்ளுணர்வா
அன்புசெய லுற்ற ரகத்தே யவிர்சொருபன்
முன்புநா னுற்றேன் முழுமுதல்வாழ் வுற்றேனே.
குறிப்பு:- இயற்பரமா உள்ளுணர்வா அவிர்சொருபன்
என வியையும்.

1285. நானெனதென் றெண்ணி நலிந்த மயக்கமறத்
தானெனைநன் குள்ளத்துத் தற்பரமா வாண்டவன்முன்
நானதுவே யாகவொளிர் ஞானமோ னனுபவ
வானதிநீ ராடி மகிழ்வுறவாழ் கின்றேனே.

1286. பூரணசற் போதப் பொலிவான மோனவருட்
சீரணவு செல்வச் செழும்பிரான் சன்னிதியிற்
காரணவு சித்தக் கலக்கப் பிரமாத
மாரணமற் றோங்குபர வாழ்வு மடுத்ததே.

1287. சற்பனையாம் பாசமற்ற தன்மெய் யடியரோ
டற்பனு மென்னையுஞ்சேர்த் தாண்டபிரான் சன்னிதி
சிற்பரமா வுள்ளஞ் செழிக்கவுற்ற மோனத்தாற் [யிற்
கற்பனைதீ ருண்மைக் கடவுள்வாழ் வெய்தியதே.

1288. அற்படுபா ழாணவப்பே யாட்சியைச்செற் றுள்ளத்திற்
சிற்பரமாத் துன்றுசிவ தேசிகனார் சந்நிதியிற்
கற்பனையா தொன்றுங் கலவாத சுத்தவருட்
பொற்பதவாழ் வாலிதயம் பொங்கிப் பொலிந்ததே.

1289. வஞ்சவே தாளமன மாயையறப் பக்குவிடச்
செஞ்சவே சுத்தவருட் சிற்பரமா வாண்டவன்முன்
விஞ்சவே யோங்கு வியன்பரமோ னத்திறத்தாற்
றஞ்சனேன் வாழ்வு சதாசிவமாப் பொங்கியதே.

1290. ஒன்றுபட வுள்ளத் தொடுங்கலுற வென்னுணர்வில்
வென்றிசே ராட்சி விளைத்தவருள் வித்தகன்முன்
மன்ற விளங்குசிவ மாட்சியா வென்னகத்து
நின்றியல்வாழ் வான்ற நிரதிசயா னந்தமே.

1291. மெய்த்தவமா வென்னுள் விளங்கிறைவன் சந்நிதிநா
னெய்த்தொழிய வொண்ணுதெங் கெங்கும் பரந்தொளிர்
வித்தகமா வுள்ள விசுத்தமோ னனுபவப் [வால்
புத்தமுத வாழ்வு பொருந்தியதென் னைக்கெடுத்தே.

## கள. முத்தி
(கொச்சகக் கலிப்பா)

1292. ஏமவாழ் வானபே ரின்பவியல் காட்டுபரந்
தாமனு மோனகுரு சன்னிதிசார்ந் தேனுக்கு
நாமரூ பக்கற் பனைநழுவ வுள்ளத்திற்
சேமமா வார்ந்ததுசச் சிற்பரமா முத்தியே.

1293. முத்தன் குருரமண மூர்த்தி திருமுன்பு
சுத்தசத் தாகத் துலங்கு சொரூபவருள்
வித்தகக் காட்சியால் வீடு விளங்கலுற்றேன்,
பெத்தனுக் கற்பனையிற் பேதுற்ற பேயேனே.

1294. ஒன்றியா வுள்ளத் தொளிர்சொரூபன் சுத்தவருள்
வென்றியா லென்மெய் விளங்கலுற் றேனுக்குக்
கன்றியமோ கப்பாழ்ங் கலக்கமறப் பொங்குமவன்
முன்றிலே மிக்கசுப முத்தியென் னுருயிர்க்கே.

## கஅ. பேரின்பம்
(கொச்சகக் கலிப்பா)

1295. கள்ள வகங்கரக்கக் கண்டவருள் வித்தகமெய்த்
தெள்ளியோன் சந்நிதியிற் சேரத் தினைக்கவெனக்
கள்ளக் குறையா வனந்த சிவாம்புதியென்
னுள்ளத் தொளிவெளியா வோங்கக் கிளர்ந்ததே.

1296. உள்ளத் தொளியா வொளிர்சொருபன் சன்னிதியிற்
கள்ளமனங் காணுக் கரந்தொழியப் பெற்றதால்
எள்ளத் தனையு மிடர்ப்பா டிலாதசுக
வெள்ளத் தமிழ்ந்து விளையாடு கின்றேனே.

1297. உள்ளத் துணர்வு நவா வுள்ளபிரான் சன்னிதியிற்
கள்ள மனப்புன் கவலை கழன்றொழியத்
தெள்ளமுத மான சிவானுபவந் தேக்கலா
லுள்ளக் களிபொங் குபசாந்தி யுற்றதே.

1298. ஊனக் கலக்கமகற் றொள்ளியான் சந்நிதியுற்
றேனுக் ககப்பா ழிகப்ப விதயத்து
நானற்ற நானே நலஞ்சேர் பரமாக
மோனத் துலக்கமுற்றேன் மூண்டதுபே ரின்பமே.

1299. ஆன்ம சொரூப வறிவொளியா வுள்ளத்துத்
தான்மலர்த லுற்ற தனித்தலைவன் சந்நிதியில்
யான்மகிழ்பே ரின்ப வியல்வாழ்வே கைவல்ய
ஞானமோ ஞனுபவ நன்பயனுக் கண்டேனே.

1300. ஞான சொரூபகுரு நாதன் முகங்காண
மோன விலாசஞ்சேர் முன்றில் குருகலுற்றேற்
கூனக் கலக்கமற வுள்ளுணர்வு தெள்ளிதாத்
தேனெனவே பொங்கியது சித்தோப சாந்தியே.

கக. மோனம்

(குறள்)

1301. ஊனமற்ற வுண்மை யுணர்வொளியா வோங்குரூப
மோனமுற்றே னுண்டான் முகத்து.

(வெண்பா)

1302. அன்புணர்ச்சி கூர வருட்பதத்தே வாழ்தலால்
இன்புணர்ச்சி பொங்க விதயத்தே—தன்புணர்ச்சி
யான சிவோகஞா னுனுபவம் பெற்றுமனம்
மோனமுற்ற தாண்டான் முகத்து.
முகத்து - திருமுன்பு, சந்நிதியில்.

1303. சற்குருவாய் நின்ற சதாசிவத்தின் *முன்னிலையிற்
றற்குறியாய் மோனவருட் சால்புற்றேன்—கற்கவெனக்
கன்னியமொன் றேரே னகண்டாத் துவிதசிவம்
மன்னியதென் றென்றும் மனத்து.
*முன்னிலையில் - சந்நிதியில்.

(கொச்சகக் கலிப்பா)

1304. சித்தக் கலக்கச் செருக்கறச்செற் றுண்டவன்சிற்
சத்தி விலாசச் சதிர்நடன சந்நிதியிற்
புத்திக் கமுதமாப் பொங்கியது கைவல்ய
முத்தித் துலக்கமா மோனனு பூதியே.

1305. கர்த்தத் துவப்பாழ்ங் கலக்கஞ்செய் சிச்சடப்பேய்
செத்தொழியச் செற்றவருட் சிற்பிரான் அத்துவித
சுத்தப் பரசிவமாத் துன்றுங் குருரமண
முத்தப் பிரான்றிருமுன் மோனம் விளைந்ததே.

1306. ஊன்மருவு மோகமுனைப் போய்ந்தொழிய வுள்ளம்புச்
கான்ம சொரூபமா வாண்டபிரான் சன்னிதியிற்
றேன்மருவு சுத்த சிவானுபவச் சீர்மைசேர்
வான்மருவு மோன வசீகரவாழ் வுற்றதே.

1307. வீட்டின் குலாவா விரிந்தபிரான் யானெனும்பே
யாட்டங் கெடுத்தவல் லாளன் றிருமுன்பு
நாட்டம் பரவெளியா நண்ணலாற் கற்பனையின்
மூட்டங் குலைந்தொழிய மோனந் துலங்கியதே.

## 14. ஆண்டவன் விழி

(குறள்)

1308. வஞ்சக் கலக்கவகம் மாயமா மாயக்காண்
விஞ்சையே யாண்டான் விழி.

1309. உண்மைவாழ் வாக வொளிர்வதென் னுள்ளத்து
நுண்மைசே ராண்டவன்கண் ணோக்கு.

1310. அருட்சிற் பிரான்செய் யவலோ கனமே
இரட்சிப்ப தென்னை யினிது.

1311. சுத்தவருட் போத சொரூபமாத் துன்றியது
வித்தகமா வாண்டான் விழி.

(கொச்சகக் கலிப்பா)

1312. உண்ணெக் குருகுவார்க் குள்ளொளியா வுள்ளவருள்
வண்ணக் கலையால் வடித்தெடுத்தா லன்னமுகக்
கண்ணழகு நோக்கிமனக் கண்ணு ரமுதமா
வெண்ணக் கருத்திலெனக் கின்பமெழப் பொங்குமே.

1313. கள்ளங் கலந்த கடுங்கோரச் சிச்சடப்பே
யுள்ளந் திறக்கவுணர் வூடுருவிச் செற்றபிரான்
உள்ளங் கலந்த வுணர்வொளிப்பே ரின்பவருள்
வெள்ளந் திரண்டவிழி யெங்கும் வியாபகமே.

1314. உற்றறிய வென்னின்மற் றென்றுமிலா முற்றமுழுப்
பெற்றிசேர் சுத்தப் பெருவெளியே யென்னுருவா
அற்றமற்ற வுண்மைஞா னுனுபவ மோனநிலை
பற்றுவித்த வாண்டவன்கட் பார்வை பரவெளியே.

## 15. ஆண்டவன் புன்னகையால்

(கொச்சகக் கலிப்பா)

1315. ஈண்டியவெம் பாச விருட்பா ழகந்தைமனம்
மாண்டொழியத் தன்சொருப மாண்பதவாழ் வூட்டியது,
நீண்டநெடுங் கால நிறைதவத்தா லென்னையுவந்
தாண்டகுரு நாத னருட்புன் னகையொளியே.

1316. அறிவிலா மூட வகப்பட்டி யாக
மறதியாற் பாழ்ம்புலத்து மாழ்கவுற் றேனை
முறுவலால் வாரி முழுவியே முற்ற
நிறுவினுன் றன்சொருப நேயப் பதத்தே.

1317. நிசித்திர ளானவென் னீச மனத்தை
அசித்தபுன் மூரலா லாண்ட பிரான்பால்
விசைத்தெழு வேட்கைமீக் கூர்தலாற் பாசப்
பசைத்தடை பாறப் பரந்துலங் கிற்றே.

குறிப்பு:– இச்செய்யுள் அகப்பொருள் பற்றியதாகக் கொள்ளிற் பரம் பரானுபவத்துக்கு ஆகு பெயர்.

1318. நாத னருட்புன் னகையொளியால் யானெனும்பா
ழேதவிருள் பேர்ந்தாங் கெலாமே கரந்தொழிய
மீதமாத் துன்று வியன்பரமே யென்னுருவா
மோதவியல் சான்ற முழுமுதல்வாழ் வொன்றியதே.

1319. பசுத்துவமாத் தோன்றுமனப் பச்சைப்பொய் மெய்யாத்
திசைத்தலுற்ற மூடச் செருக்கனே னுள்ளத்
தசித்தலுற்ற வாண்டா னருட்புன் னகையால்
முசித்ததுநா னென்னும் முனைப்பாஞ் சுனைப்பே.

1320. தீனவுணர் வானமயற் சித்தக் கலக்கமற்றேன்
ஊனவகப் பேயை யுடற்றியென் னுட்சிவமாத்
தானவிர்மெய்ஞ் ஞான சதாசா ரியரமணன்
மோனவளஞ் சேர்ந்த முகப்புன் முறுவலிலே.

1321. இகத்தே பொருள்போ லெதிர்புலத்து மாழ்கா
தகத்தே சொரூப வறிவொளியா வாண்டான்
முகத்தே சுரந்தபுன் மூரலின் மூழ்கி
மகத்தான சாந்தி மடுக்கலுற் றேனே.

1322. ஆண்டவனை யன்றி யயலொன்றுங் காணாது
காண்டலரு கத்தவருட் கைவல்யக் காட்சியா
மூண்டகுரு நாதன் முகப்புன் முறுவலா
லீண்டியதென் னுள்ளம்பே ரின்ப வுவகையே.

1323. இகத்தே பரங்கண் டினிதுநான் வாழ
வகத்தே யகமா வவிர்சொருபப் பெம்மான்
முகத்தே யலர்ந்தபுன் மூரலா வான்ற
சுகத்தேன் பருகினேன் சோர்வகன் றேனே.

## 16. ஆண்டவன் முக விலாசத்தால்

(குறள்)

1324. மோனவருட் கோமான் முகவிலா சத்தகன்ற
தீனவகக் கோசு விருள்.

(வெண்பா)

1325. முத்தியொளி வீசும் முகவிலா சத்திலருட்
பக்தியுணர் வென்னுட் பழுத்தலால்—முத்தியெனக்
காவதுவே நின்றி யருட்பத்தி வாழ்வேயாக்
கூர்வதனு பூதிக் குலா.

1326. விசித்திரமார் சத்தி விலாசஞ்சே ராண்டான்
அசித்தநகை யாலென் னகத்தே—நிசித்திராளாங்
காரவிச்சை முற்றக் கழன்றொழியக் கற்பனைதீர்
பாரவிச்சை மூண்டதென் பால்.

1327. பள்ளி யெழுச்சிநான் பாடுமடப் பேதைமையை
யுள்ளிச் சிறுநகையுற் றுனுளத்தே—கொள்ளு
முறக்கமின்றி யென்று முணர்வுருவா வுள்ளஞ்
சிறக்கநின்று வாழ்தே சிகன்.

(கொச்சகக் கலிப்பா)

1328. மோனவருட் கைவல்ய மூர்த்தி முகப்பொலிவால்
ஊனக் கலக்கமற வுள்ளம் பரவெளியாய்
நானற் றொளிர்சொருப ஞானனு பூதியாற்
போனதுமா மோகமனப் புன்பிறவித் துன்பமே.

1329. ஈனக் களிசே ரெளியே னிதயத்து
மோனவருட் பெம்மான் முகவிலா சங்கிளர்வால்,
யானெனதென் றேங்கியிரங் கேசறவுக் கேதுவாம்
ஊனவகப் பாழ்ங்கா ரொழிந்து கரந்ததே.
குறிப்பு:- ஒழிந்து கரந்ததே - கரந்து ஒழிந்தது.

1330. மோனப் பரசொருப மூர்த்தி முகத்திலிருந்
தூனமற்ற வுண்மை யுணர்வொளிபாய் வுற்றதாற்
றீன மயக்கச் செருக்கான சிச்சடப்பா
ழீனமறப் பொங்கிற் றிதய வருள்வெளியே.

1331. வானவருங் காண்டலரு வாழ்வென் சொரூபமா
நானறிந்து மோனமெய்ஞ் ஞானனு பூதியுற்றேன்
ஞானகுரு வாநடந்த நம்பன் குருரமணன்
மோனங் கிளர்ந்த முகவிலா சத்தாலே.

## 17. ஆண்டவன் கழல்

(குறள்)

1332. சிற்பதமாத் துன்று சிவானுபவக் கைவல்யக்
கற்பகவாழ் வாண்டான் கழல்.

## 18. ஆண்டவன் மெய்

(குறள்)

1333. வித்தையெலாங் கற்பனையா வீயவிளங் கொட்பநுட்ப
*வித்தையொளி வீசுமெம்மான் மெய்.

வித்தை – ஆன்ம விசார வடிவான அருள் வித்தை.

1334. பின்னமில் லாத பிரம்ம சொரூபவருள்
வன்னமே யாண்டான் வடிவு.

## 19. ஆனேன்

### க. அன்பு மய மானேன்

(வெண்பா)

1335. சுரந்தெழுந்த மோனவருட் சோதிவெள்ளத் தூடு
கரைந்தொழிந்த மோகக் கருத்தால்—பரந்தொளிர்பே
ரின்பவெளி யாமவ் விதயத் தியல்பாம்பே
ரன்புமய மாயிற் றறிவு.

1336. பிறிவின்றி நின்றவொளிப் பெம்மா னருட்செந்
நெறிநின்ற வாழ்க்கை நிறைவால்—பொறியின்
வழிச்சென் றுழலா மகிழ்சேர்ந்த சாந்தி
செழித்தன் புருவமா னேன்.

1337. அன்புவிளை வாகவகத் தாண்டபிரான் றன்சொருப
வின்பவுணர் வூறிற் றிதயத்தே—அன்புசிவ
மானவவ் வுண்மை யகத்தே யனுபவமாத்
தானவிர வாவிதழைத் தேன்.

(கொச்சகக் கலிப்பா)

1338. அறிவோமெய் யன்போ வறவே யிலாத
வெறியேனை யாண்ட விசித்திரப்பே ராளன்
பிறியா வருள்வெற்றிப் பெட்பால் விளைந்த
வறிவோடு மெய்யன் பகத்தின்வே றன்றே.

## உ. அந்தமிலாக் கண்ணானேன்

(வெண்பா)

1339. மெத்தமெத்த வுண்மை விளக்கமாத் தன்சொருப
சித்தியெனக் குள்ளே சிறந்தொளிர—வித்தகமெய்க்
கண்ணதுதா னந்தமிலாக் கண்ணான சுத்தவருள்
விண்ணுருவா நான்விளைந் தேன்.

1340. மோனங் கிளர்தலான் முத்திப்பே ரின்பநறுந்
தேனங் களைந்ததென் சித்தத்தே—வானங்
கலந்தவருட் சிற்பரமாங் காட்சியே கண்ணு
வலர்ந்தபெரு வாழ்க்கை யது.

## ஊ. அருள் வெளி யானேன்

(வெண்பா)

1341. கோதகல்சற் போத குருமூர்த்தி பல்சமய
வாதமறக் காண்மவுன மாட்சியான்—பாத
வொளியா லுளத்தை யுருக்கினான் சுத்த
வெளியா விளங்கலுற் றேன்.

(கொச்சகக் கலிப்பா)

1342. தானேநா னாகத் தழைத்த சொரூபவுண்மை
தானே தெரித்தான்; சதாசார நிட்டையால்
ஊனே முதலியவற் றொன்றுமன்றாய் மிக்கவருள்
வானேயா வுள்ளம் மலர்தலுற்றேன் மாண்புறவே.

குறிப்பு:- நிட்டையால் மலர்தலுற்றேன் என வியையும்.

1343. களவான மோகமனக் கற்பனா பேதப்
பிளவா லழுங்குமகப் பேயறிவு நாணத்
தெளிவான சுத்த சிவாத்துவித வுண்மை
யளைவால் அகண்ட வருள்வெளியா னேனே.

(வெண்பா)

1344. பாழ்வளர்மோ கத்திற் பதைத்தேனைத் தன்சொருப
வாழ்வொளிர்மோ னத்தால் வளைத்தலுற்றான்—காழ்
தானுபவ வெள்ளத் தகந்தைமனப் பாசமற்று [வளர்சாந்
வானுருவா நின்றேன் மலர்ந்து.

### ௪. நானானேன்

(வெண்பா)

1345. உள்ள வுணர்வொளியே யுள்ளமாத் தேற்றினான்
உள்ளலற்ற சுத்த வுளத்திலே—கள்ளமற்ற
மோனக் கருத்தாலே முற்றமுழுப் பூரணமாய்
நானற்ற நானானேன் நான்.

1346. உள்ளமா வுள்ள வுடையா னெனதுணர்வவ்
வுள்ளமே யாக வொடுக்கலால்—உள்ளமாந்
தன்னிலே தானைத் தழைத்தொளிர்சுத் தாத்துவித
நன்னிலமே நானா யினேன்.

(கொச்சகக் கலிப்பா)

1347. வெளியாக வுள்ளலர்ந்த மெய்ப்பதத்திற் சாலத்
தெளிவாக வுள்ளதியற் சிற்பரமே யன்றித்
துளியும் பசுபாசத் தொந்தபந்த மில்லை
ஒளிசேர் வெளியாக வுள்ளதுநான் ருனே.

### ௫. இதயமானேன்

(வெண்பா)

1348. இதயமே யென்சொருப மென்னத் தெரித்தான்
இதயமா வுள்ள விறையோன்—இதய
வருட்சிற் பரத்தை யணைந்தேன் இனிநான்
மருட்கற் பனையின் மடேன்.

(கொச்சகக் கலிப்பா)

1349. அறிவு தெளிந்தேன் அறிவே சொரூப
நிறைவா நிகழ்மவுன ஞேயவுணர் வுற்றேன்
அறிவிலே யவ்வறிவை யன்றிமற்றொன் றில்லாச்
செறிவாஞ் சிதம்பரமாச் சேர்ந்தியல்கின் றேனே.

### ௬. பரமானேன்

(வெண்பா)

1350. மோனவருட் செம்பதமே முத்திப் பெரும்பதமாத்
தானருள்சற் போத சதாசிவத்துக்—கூன
முனைப்பா மகந்தைமுழு முற்றுமறப் போக்கித்
தனிற்பரமா நான்றழைத் தேன்.

1351. விலைப்பட்ட வென்னை விரும்பியுள் ளூரத்
தலைப்பட்ட தன்சொரூபந் தந்தான்—புலைப்பட்ட
வூத்தையுடல் வாதனையற் றெட்பங்கூர் சிற்பரமே
யாய்த்துயிர்ஞா னனுபவத் தாழ்ந்து.

1352. என்னையணைந் தாண்ட விறைவன் சொரூபவருட்
பொன்னியல்பா வென்னைப் புதுக்கினன்—என்னுயிரிற்
சேர்ந்த மலக்களிம்பு தீர்ந்தொழியச் சிற்பரமா
வார்ந்ததுநா னென்னு மறிவு.

1353. மோனம் பழுத்தபெரு மூதறிவாற் றன்னடிய
ரூனமறக் கண்ட வுலககுரு—ஞானமெனக்
குள்ளவுரு வாக வுணர்த்தினன் சிற்பரமே
யுள்ளமா வோங்கிற் றுணர்வு.

1354. ஒருத்தனு வாண்ட வுடையா னுளத்திற்
பொருத்தினு னத்துவித போதம்—விருத்தமாம்
பேதமகல் சுத்தப் பிரம்மமே யென்னுருவாச்
சேர்தலுற்றேன் மோனஞ் செழித்து.

1355. யானுக வென்னை யுடையா னியற்பதமெய்ஞ்
ஞானனு பூதிவளர் நாட்டத்தால்—ஆனு
வறிவான நானே யகிலமாத் தேர்ந்து
பிறிவில் பிரம்மமா னேன்.

(கொச்சகக் கலிப்பா)

1356. காலதே சக்கருமங் கற்பனையாத்தாங்கழியச்
சாலவே தற்பரமாத் தான்விளங்கு சிற்பரமே
ஏல விதயத் தியல்சொருப வுண்மையென
மூலமா வுள்ள முழுமுதலா வுற்றேனே.

1357. அடக்கி யகந்தைமுனைப் பற்றொழிய வுள்ளத்
தொடுக்கி யதிநுட்ப வொட்ப வுணர்வாக்
கடக்கவொணு மோனவியற் கைவல்ய வுண்மை
மடுக்கலால் யான்பரமா மாட்சிபெற் றேனே.

1358. நவமான சுத்தமெய்ஞ் ஞானத்தா லென்னுட்
பவமான மோகவகைப் பாழ்கடிந்து காத்தான்;
சிவமா வொளிர்சொருபச் செம்பிரான் பாதத்
தவிர்மோன வாழ்வா லகம்பரமா னேனே.

ஏ. அதுவானேன்
(வெண்பா)

1359. சுத்தசற் போத சொருபசிவ பத்தியிற்
புத்தித் தெளிவு புகட்டினன்—நித்தநித்தஞ்
செத்துமனக் கற்பனையிற் சீரழியா தொட்பங்கூர்
சத்துவமா ந் தன்மைசார்ந் தேன்.

1360. தன்பொருளே யானவென் றன்னைத் ததீயனுத்
தன்பதத்துக் கன்பளித்துத் தானேற்றான்—இன்பதுன்ப
மாதி யிரட்டை யனைத்துமொரு தன்மயமாம்
நீதி தழைத்ததென் னெஞ்சு.

1361. வெளியாக மோனம் விளங்கிலன்றி யாருந்
தெளிவாக வுண்மை தெரியார்—வெளியாக
மோனவொளி யென்னுளத்து மூண்டொளிரக் கூட்டி
யானதுவென் றுண்மையுணர்ந் தேன். [னன்

1362. இருப்பதே நானு யிருக்கையிலே நானென்
றுருப்பதே நான்போன் றுழன்றேன்—விருப்பதால்
என்னுருவாந் தன்மெய் யிலக்கினன் யான்கெட்டுத்
தன்னுருவா நின்றேன் றழைத்து.

(கொச்சகக் கலிப்பா)

1363. ஊனமறக் கண்டதோ ருண்மையின்வே றன்றுக
யானற் றெழுந்தே னிதயத் ததுநானு;
மோனப் பரசொருப முத்தித் துலக்கவியல்
வானமாத் தேற மலர்ந்ததனு பூதியே.

அ. சிவமானேன்
(வெண்பா)

1364. நோக்கா லகத்தென்னை நூக்கியதோ டன்றித்தன்
வாக்கானு மோர்சொல் வழங்கினன்—வாக்காலே
தாக்குண் டகந்தையறச் சாதலாற் சாந்தசிவ
மாக்கண்டே னென்னை யகத்து.

### ௯. புத்தனானேன்

(வெண்பா)

1365. மத்தனு மென்னை மலர்ந்தகடைக் கண்ணொளியாற்
புத்தனு வாழப் பொலிவித்தான்—சித்தமலங்
கெட்டடியே னுண்மைக் கிளரொளியாந் தன்பதத்திற்
கட்டறவாழ் கின்றேன் கலந்து.

## 20. ஆண்டவன் முன்னிலைக் கூற்று

### க. ஆண்டவன் மாட்சி கூறல்

(குறள்)

1366. உன்னுண்மை யெவ்வா றுணர்வேன் உணர்வோனு
மென்னியலே யுய்த்துணரா தேன்.

(வெண்பா)

1367 நீதா ரகமெனவே நெஞ்சிலெனக் கத்துவித
போதானு பூதி புகட்டினுய்—கோதாட்டி
யற்பரென் போல்வார்க் கபரிமித வாழ்வளிக்கு
மற்புதர்நின் போல்வா ரெவர்.

(கொச்சகக் கலிப்பா)

1336. சுரிந்தமனக் கற்பனு சொப்பனத்தி னின்று
பரிந்தென்னை யாண்டநின் பார்வையில்வாழ் கின்றேன்
விரிந்த சொரூப வெளியா வகத்து.
நிரந்தரமாப் பொங்கு நிராமயப்பெம் மானே.

1369. ஞானமன்றி ஞாதுருஞே யங்க ளிலாமையால்
யானற்ற மோன வியல்விளக்கத் தாலன்றி
ஊனமற்ற சுத்த வொளிவெளியா முன்னைமற்
றேனை யெதனு லெவர்தாங்காண் கிற்பரே.

1370. என்னிலே யானு விருந்தொளிர்சச் சிற்பரமாந்
தன்னை யயர்த்தொழிந்தேன் சாலத் துயருழந்தேன்;
உன்னருளா லென்னை யுணர்த்தியவ் வொண்பதத்திற்
பின்னமற வைத்தாய் பிரானுன்சீர் பேசரிதே.

குறிப்பு:- அவ் வொண்பதம் என்றது சுத்தான்ம சொரூப மான பிரஞ்ஞானப் பிரம்ம பதத்தை என்க.

1371. மானுபி மான மயக்கவிரு ளுக்கப்பாற்
றுனை மோனந் தலைப்படச்சச் சிற்பரமா
நானுனென் றுள்ளத்து நட்டமிடு கின்றுயை
யானு ரெதிரிட் டிரண்டுபடக் காணவே.

1372. வன்மயக்க மான மதோன்மத்தக் காரிருள்செற்
றுன்மயமா வென்னை யொளிர்வித்த சுத்தவருட்
பொன்மயமாம் போதானு பூதி புணர்தலால்
உன்மகிமை யோர்ந்தே னுடையா யடியேனே.

1373. என்னையே யுன்னையே யான்வேருக் காணவொண்
வன்ன வியல்பா லருள்வெளியாப் பொங்கலுற்றுய்
என்னுருவே யாக விதயத் தொளிர்சொருப
மன்னவநின் கைவல்ய மாட்சியையென் னென்பதே.

1374. *கோத்தைப் படாமெய்க் குணங்கூர் சிரவணமா
ஒர்த்துக் களிக்கநல் லூழ்வகையால் வாய்த்தநின்
கீர்த்திக் கனிரசம்என் கேள்வியா லுண்டுசுவைத்
தார்த்திக்க லூற்றதென் னுவிமேன் மேலதையே.
*கோத்தை-பழுது.

1375. கள்ளமற வுன்னைநான் காண்குறுமெய்க் கண்ணளித்த
தெள்ளமுத மானவருட் சிற்பரமெய்த் தற்பரா
உள்ளலற வுன்னைநா னுள்ளுமுப சாந்தவுணர்
வுள்ளமெழப் பொங்க வுதவியநின் மாண்பென்னே.

1376. உலைவிலா வுண்மை யுணர்வான மோன
நிலையிலே யென்னை நிறுவியநின் மாட்சி
மலையிலும் வானிலும் மற்றெதிலுங் காணேன்
அலகில் பராற்பரமா வார்ந்தவம் மானே.

1377. உன்னினின் றென்னையோ வென்னினின் றுன்னையோ
அன்னியமா வோரே னடியேனை யாண்டவா!
துன்னியவே கான்ம சொரூபமாப் பல்வகைய
மன்னுயிர்யா வற்றிலுஞ்சேர் மன்னவநின் மாண்
[பென்னே.

1378. உன்னையே நாயகமா வுற்றேனுக் குன்னையலா
லன்னியமோ ராமெய் யறிவளித்த வாண்டவா
பின்னியவெம் பாசப் பிணக்கறவென் னுள்ளத்துத்
தன்னியல்காட் டிக்கொடுத்த தற்பரநின்மாண்
[பென்னே.

1379. மன்றவெனக் குன்சொருப மாண்பளித்த வெம்பிரான்
என்று மெவர்க்கு மியல்பா விதயத்து
நன்றநீ தொன்று நலங்கிளர்மெய்ஞ் ஞானவருட்
குன்றமா முன்பெருமை கூறுகிற்பார் யாவரே.

1380. எத்தகைய தென்னின்மற் றத்தகைய தென்றல்லால்
வித்தகருங் கூறவொண்ணு வெற்றவெளி யானநின்
மத்தமனக் கற்பனையின் மாழ்கிக் கலங்குகின்ற [மெய்
வித்தமியோ மெவ்வா றிசைந்தறிய வொண்ணுமே.

1381. என்னேநா னெண்ணி யிசைத்தாலுஞ் செய்தாலும்
உன்னேய மான வுணர்வொழியா வுள்ளத்தால்
அன்னேநீ செய்த வருட்சீர் அனுபவமா
மன்னே விளங்கியது வாழியருட் சீர்மையே.

## உ. உன்னைப் புகழ்வேன்

(கொச்சகக் கலிப்பா)

1382. பேதியன்ற வாணவப்பாழ்ம் பேய்ச்செருக்கின் பீடையறக்
காதுகின்ற கண்ணேக்காற் கள்ளமனக் கற்பனையின்
சூதினின்று சுத்தத் துரியபதந் தோய்வித்தாய்;
ஓதுகின்றே னெம்பெருமா னுன்னருளின் மாட்சியே.

1383. ஊனவகப் பாழிருள்செற் றுள்ளத் தொளிர்சொருப
ஞான திவாகரா நானெழும்பா துன்னடிக்கீழ்
மோனஞா னுபவ முத்திப்பே ரின்பவருள்
வானமா வென்னை வளைத்தாயை வாழ்த்துவனே.

1384. சேட்டையற வென்மனத்தைச் செற்றுநின் கண்ணேக்
பூட்டியே சுத்தவருட் பொன்னடியிற் பேரின்ப [காற்
வீட்டியல்காட் டிக்கொடுத்த வித்தகமெய்த் தத்துவா!
பாட்டியலா லுன்னைப் பரவுகின்றே ேனாவாதே.

### ௩. பிறரைப் புகழேன்
(வெண்பா)

1385. ஆற்றப் பெருமிதஞ்சே ராண்டவா வற்பரைமிக்
கேற்றிப் பழிச்சி யிழிந்தவென்னு—மாற்ருே
டுரைகடந்த பொன்னு முனதடியிற் றேய்ப்புண்
டுரையடைந்த தாயிற் றுணர்.

### ௪. கவித் துவத்தை உனக்கே சமர்ப்பிப்பேன்
(வெண்பா)

1386. மனையைத் துறந்த மனத்தாற் கவிதை
தனைத்துறக்க மாட்டாத் தவற்றேன்—முனைவா
வுலோட்டனுளப் பான்மையா லுன்னடிக்குற் றேவ
விலோட்டிநான் சாந்தியடை வேன்.

### ௫. கழிந்தமைக் கிரங்கல்
(வெண்பா)

1387. ஒருமெய்க் கடவுளா முன்னிலே பல்வே
றுருவுகளைக் கற்பித் துறழ்ந்தேன்—பொருவிகற்பச்
சூதுசேர் சிந்தைத் தொடர்பா லடியனேன்
பேதுபட்டுச் செய்தேன் பிழை.

(கொச்சகக் கலிப்பா)

1388. தானென்ற சுத்த சதாசிவமா வாண்டவா
யானென் றெருருவ னுளன்போல வெண்ணிமருண்
டுனவகப் பாழ்ம்பே யுணர்வான பேதைமையால்
வானவியற் சிற்பரமெய் வாழ்வைக் கெடுத்தேனே.

1389. கருக்கெடலெவ் வாறெனநான் காணேன், கருத்தா
வுருக்கமொடு சேவடிநா ளுேரேன், உடையாய்
திருக்குறிப்பு யாதொன்றுந் தேரேன், திகழ்சற்
குருக்களா முன்னையென்னுட் கொண்டிருக்கின்
[றேனே.

1390. அந்தமிலாக் கண்ணு வகத்தில் விளங்கலுற்ற
சொந்தசொ ரூபாநின் னுண்மையைநான் சோர்ந்து
[போய்
உந்துமகங் காரப்பா ழூத்தைமுனைப் பால்வெருண்டு
பந்தமுற்றேன் பாசப் படுகற் பனையிலே.

1391. பொன்ருத வுண்மைப் பொருளாக வுள்ளத்து
நன்ரு வொளிர்சொருப நாதா நா னுன்னையன்றி
என்ரு யினும்வேரு வேய்ந்ததுண்டோ வேய்ந்தாற்போற
நுன்றினேன் வெம்பிறவித் துன்பமென்ன சொப்பனமே.

### சு சமர்ப்பணம்

(வெண்பா)

1392. இன்றுமுத லாகநா னென்றென்று முன்னடிமை
என்றெழுதி யென்ற னிதயமே—மன்றவோ
ராவணமா வொப்பினே னுகக்கை யொப்பமிட
யாவனவற் காண்கிலேன் யான்.

(கொச்சகக் கலிப்பா)

1393. மன்னும் பரமசிவ மாட்சிசே ராண்டவா
உன்னருளே தாரகமா வுள்ளத் துறைகின்றேன்,
என்னதுநா னென்பவெல்லா முன்னதன்றி யென்ன
என்னினதன் மேலுனக்கு யானென் னிசைப்பதே.[தில்லை

### எ. அருட்குடி யாதல்

(கொச்சகக் கலிப்பா)

1394. விடியா விருட்பாழ் விடிதலா லுள்ளத்
தொடியாப் பரமார்த்த வுண்மையா முன்சே
வடியே யடியேற் கருட்பரவீ டாகக்
குடியேற லுற்றேன் குருபரக்கோ மானே.

### அ. நீயே உறவு

(வெண்பா)

1395. அறிவுதெளிந் தேனுக் கனைத்துவிதத் தாலும்
உறவுபிறி தொன்றி லுருதே—நிறையறிவ!
என்னதுயா னென்னு மிரண்டுறவுங் காணிலெனக்
குன்னதுசிற் பூரணமே யோர்.

(கொச்சகக் கலிப்பா)

1396. உன்னருளா லுன்னை யுணர்ந்தேனுக் குன்னின்மற்
றன்னியமா நாஞே வயலோ சிறிதுமில்லை;
என்னியலா நீயே யிதயத் திலகலால்
என்னறிவோ வென்னுறவோ வெல்லாமு நீயன்றே.

### ௬. பிற விச்சை யிலேன்

(வெண்பா)

1397. ஐயனு வுன்னை யடைந்தேனைக் கண்ணேக்கி
உய்யநா னுள்ளத் துறுதிபெறப்—பொய்யனு
மாதனுக்கு நின்மெய் யறிவளித்த வாண்டவா
யாதெனக்கு வேண்டு மினி.

1398. பாரமுனக் கேயடியேன் பாதுகாப் பாகக்கொண்
டாரமுத மாகவென்னை யாண்டவா—வாரமுற்ற
வுன்பதத்துக் காமெய் யுணர்வா லுளத்திலிச்சை
பின்பெதற்கு மில்லை பெயர்த்து.

1399. ஆரவென் னுள்ளத் தளித்தநின் பேரருட்
சீரமுத முண்டு திளைத்தலாற்—பேரமற்
றின்ஞேர் சுவையிலெனக் கிச்சையெழா தாண்டவா
வுன்னே டொருங்கிற் றுணர்வு.

1400. என்னைநீ யாண்ட வியைபாலே யென்னிதயத்
துன்னைநா னுற்றே னுடையோனு—நின்னடிமைக்
கீரென் றிலாநின் னியற்பதப்பே றல்லதிங்கு
வேறென்று மில்லை விருப்பு.

(கொச்சகக் கலிப்பா)

1401. உன்னையே யுள்ளி யுணர்ந்துவத்த லல்லாது
பொன்னை மணியைப் *புலனை மகிழ்கிலேன்
என்னையுவந் தாண்ட விறைவாநின் செம்பதத்துக்
கன்னியமொன் றேரா வருட்சிவஞா னத்தாலே.

*புலன் -புலப்பொருள்.

### ௬0. என் விருப்பம் நீயே

(குறள்)

1402. எனக்கென்ன வேண்டு மெனிலோநீ தானே
எனக்கொன்று வேண்டு வது.

## கக. ஏகபக்தி

(குறள்)

1403. வாழ்வுசிவ மாக வகுத்தானே நானுனக்கே
ழேம்பிறப்புந் தொண்டுபட் டேன்.

1404. உன்னையே நானென் னுடையோனு முற்றமுற்றத்
துன்னியதா லுற்றேன் சுபம்.

(கொச்சகக் கலிப்பா)

1405. நீயே பரமா நிவந்தோங் குயர்தருமம்
நீயே குறையா நிறைசெல்வச் செம்பொருளும்
நீயே யொளிபெறவென் னெஞ்சத் துறுகாமம்
நீயே நிரதிசயா னந்த நிலைவீடே.

1406. உன்னையே நம்பினே னுள்ளத் துணர்வுருவா
மன்னியே யென்சொருப மாட்சியா லாண்டாய்க்கு
நன்னயமார் மோன நடையே தியானமா
அன்னியமல் லாதமெய் யன்புபட்டே னப்பனே.

1407. நாட லெனக்குன்மெய்ஞ் ஞான சொரூபமே
பாடலெனக் குன்னதருட் பாரப் புகழ்களே
ஊட லெனக்குலக வூத்தைப் புலன்களே
வீட லெனக்குலக வேட்கைமோ கங்களே.

1408. நினைக்கவொண் ணாத நினைப்புரு வாக
வினிக்கவென் னுள்ளத் தெழுந்தருளிச் சற்றுந்
துனிக்கவல்சே ராத சொரூபமா நின்ற
வுனக்கே யடியே னுருகுகின் றேனே.

1409. நற்று மரைப்பதத்து நண்ணியநான் அப்பதத்திற்
கற்றுவே போலக் கசிந்துருக வேண்டலன்றி
மற்றுர்பின் சென்று மறந்தேதும் வேண்டுகிலேன்
அற்றுருக் கற்ற வருளாளப் பெம்மானே.

1410. பொன்னியலே யான பொலங்கலம்போல் என்னகத்து
நன்னயமார் சுத்தமெய்ஞ் ஞானு பூதியா
லென்னைநீ யாக வியல்வித்த வெம்பெருமான்
உன்னையலால் யான்மற் றொருவரையும் பேணேனே.

1411. எல்லாப் பிழைகளுந்தோற் றீன வகங்காரப்
பொல்லாப் பிழைகெடவென் புத்திக்குட் போதமா
நல்லாங் கொளிர்சொருப நம்பாவுன் சிற்பதமே
யல்லாப் பதமொன் றறியே னடியேனே.

1412. தன்னையே யென்னகத்துத் தற்பரமாச் சார்வித்தாய்க்
குன்னையே யென்சொருப வுண்மையா வோர்த்துணர்ந்
உன்னையே யாவ ருபாசிப்பா ருண்மையா [தேன்
வன்னவரென் னுருயிருக் காரா வமுதமே.

1413. இன்னினிதா வென்னை யிதயம்புக் காண்டதா [டேன்
லுன்னையென் னுண்மை யுடையோனைக் கண்டுகொண்
மன்னியபே ரின்பவருள் வாழ்வுகாட் டிக்கொடுத்த
வுன்னையலால் யான்மற் றொருதெய்வந் தேறேனே.

## கஉ. பேரன்பு

(வெண்பா)

1414. மருளா லருளை மறந்த வடியே
னிருளைத் துரந்த விறைவா—மருளுமனப்
பாச விமோசனமாப் பற்றறநான் பற்றியநின்
நேசவுணர் வள்ளியது நெஞ்சு.

1415. பொன்னம் பலத்திலருட் பொற்பார் திருநடஞ்செய்
மன்னவா நின்னருட்சீர் மாட்சியால்—மன்னும்
பராமுதமா வோங்குசிவ பாக்கியஞ்சேர் பத்தி
நிராமயமா நின்றதென் னெஞ்சு.

1416. அன்பென் பதுதன் சொருபமே யாகவெனக்
கின்பவுணர் வூற விதயத்தே—நின்பதப்பேற்
றுக்கமளித் தாண்ட வருள்வாரி யானவுன்பா
லூக்கமே லிட்ட துணர்வு.

(கொச்சகக் கலிப்பா)

1417. வீணனெனச் சற்றும் வெறுக்காது மிக்கசுவை
யூணமா வென்னையுவந் துட்கொண் டருளியநின்
மாணடியிற் பேரின்ப வாழ்வுயிர்க்கு மல்கலால்
ஆணமெனக் குன்மாட் டமோகமாப் பொங்கியதே

குறிப்பு:- ஆணம்-அன்பு.

1418. அத்துவித வாழ்வா வடியே னுளம்பொங்கத்
தித்திக்க லுற்றவருட் சிற்பரா ! கற்பனைதீர்
சுத்தவெளி யான சொரூபமா முன்னடியிற்
பத்தி யெனக்குப் பராவமுத போகமே.

1419. தத்திக் கரைபுரள்சாந் தானுபவ சிற்பதத்திற்
சித்தக் கலக்கமறச் சேர்வித்த வாண்டவா
நித்தநித்த முன்னை நினைந்துநினைந் துள்ளத்து
மெத்தமெத்த வேட்கைமீக் கூர்கின்றே னுன்பாலே.

1420. கடனாக நாளுங் கழல்பணிந்தே னுள்ளத்
திடனாக நீவந் தினிதமர்ந்த வாற்றாற்
றிடமான பத்தித் தெளிவான கங்கை
தொடராக நீளச் சுரந்ததுமெய் யன்பே.

கங. மறவேன்

(கொச்சகக் கலிப்பா)

1421. உம்பரார் காண வொண்ணாத வொளிப்பிழம்பாஞ்
செம்பரா ! நின்சொருபச் சீர்மை சிதாபாச
வம்பனே னுள்ளத்து மாண வொளிர்வித்தாய் ;
நம்பனே நானுனையெந் நாளும் மறவேனே.

1422. திண்மைசே ரத்துவிதச் செம்பொருள்யா னுய்த்துணர
நுண்மைசேர் கைவல்ய நோக்கமளித் தாண்டவா
உண்மைக் கடவுளா வுள்ளத் தொளிர்சொருப
வண்மையா லுன்னை மறவேன் மறவேனே.

கச. சரண்

(வெண்பா)

1423. கண்ணே மணியே கதிரொளியே மெய்ஞ்ஞான
விண்ணே சொரூப வியன்பரமே—எண்ணே
எழுதா வெழுத்தா விதயத் தொளிர்மெய்ப்
பழமுதலே நானுன் பரம்.

1424. மெய்யான ஞான விபூதியருள் சற்குருவாஞ்
செய்யா பரம சிவசொருபா—பொய்யாப்
பரமார்த்த வாழ்வாம் பரமோப சாந்த
தருமாத்த பாதஞ் சரண்.

குறிப்பு :- ஆத்த பாதம் – ஆப்தமான பாதம்.

௧௫. **உன்னை யடைந்தேன்**

(கொச்சகக் கலிப்பா)

1425. எம்பிரா ஞக விதயத் தியல்சொருபத்
தம்பிரா னுன்னைத் தலைப்பட்டே னுன்னருளால்;
வம்பு பழுத்துமஞே மாயா விலாசத்திற்
பம்பலுற்ற மோகப் பசாசக் கடையேனே.

1426. அகம்புறமெங் கெங்கும் அகண்டமெய்ஞ் ஞான
சுகவாரி யாகத் துலங்க வுனை நான்
இகமே யிதயத்துன் னின்னருளாற் பெற்றேன்
முகம்புரிந் தாண்டவென் மோனப் பிரானே.

௧௬. **புகல்**

(வெண்பா)

1427. மயர்வகற்று மெய்ஞ்ஞான வல்லாண்மை யாலே
யயர்வடர்க்கு முன்மெய் யருளே—உயிருக்
குடையா யொரோர்கா லுளங்கலங்கி யுட்கு
மடியே னுயிருக் கரண்.

(கொச்சகக் கலிப்பா)

1428. உன்னடியின் போதமே சாவை யொழித்தலால்
உன்னடியே யென்னுயிருக் கோம்படையாப் பற்றி
[னேன்;
உன்னுருவே யென்னுருவா வுள்ளத் துணர்த்தியநின்
பொன்னடியே யல்லாற் புகலிடமொன் றில்லேனே.

1429. நீதமோ டுன்னை நினைந்திலா வாணவப்பா
ழாதனேன் பாலுன் னருள்விளங்கக் கூட்டியநின்
பாதமே சற்கதியாப் பற்றினேன் சுத்தசற்
போத சொரூபவருட் புண்ணியவண் ணக்கொழுந்தே.

1430. உன்னடியே யன்றியுயிர்க் குண்மைசேர் பற்றுக்கோ
டுன்னியுன்னி யோரினு(ம்)மற் றோர்சிறிது மில்லை
[யென்றுன்
சன்னிதிசே ரான்ம சமர்ப்பணசற் பக்தியோர்
என்னதியா னற்றெளிர்பே ரின்பவியல் காண்பரே.

1431. பேதங்க ளெல்லாம் பிழைபடவென் னுள்ளுணர்விற்
போத சொரூபானு பூதி புகட்டியவா!
பாதமே சற்கதியாப் பற்றினேன் சற்றுமனத்
தேதமில்பே ரின்ப வியைபா லடியேனே.

1432. ஊதியமா வுள்ள நின் னுண்மையுணர் வூன்றலாற்
போதசொரூ பத்திற் புகலடைந்து வாழ்கின்றேன்
சூதியல்பொய்ம் மாயமனத் தோற்றமாங் கற்பனையின்
மோதுமகங் கார முனைப்பற் றெழியவே.

1433. உன்பா லெனக்குமெய்யன் புள்ளதோ வில்லையோ
என்பா லுவந்தகம்புக் கென்னைநீ யாட்கொண்டாய்
இன்பா வியைந்த வியற்சிற் பரசொருப
நம்பாவுன் சேவடியே நம்பலுற்றேன் கண்டாயே.

## கஎ. உயிர்ப்பித்தாய்

(வெண்பா)

1434. என்னறிவை நம்பி யிறந்தொழிந்த வென்னைமற்
றுன்னறிவா லுள்ளத் துயிர்ப்பித்தாய்—என்னுயிர்க்குச்
சாவா மருந்தாத் தலைப்பட்ட வுன்னறிவே
ஓவாத வுண்மை யுயிர்ப்பு.

(கொச்சகக் கலிப்பா)

1435. சொந்த சொரூபமாத் துய்க்கநா னுன்னுருவை
விந்தையா லென்னை வெளியாக்கி யாண்டவா
புந்தியிலே சந்ததமும் பொங்குறுசற் போதவருட்
செந்தழலின் மூழ்கிச் செழித்ததென் னுருயிரே.

1436. ஒட்டியே யைம்புலத்தோ டோடோடி நாளும்
பட்டியாய் மோகவகப் பாழி லுழன்றேனை
நிட்டையிலே நன்கு நிறுத்தியநின் சொச்சொருப
திட்டியாற் சிற்பரமாச் சேர்ந்ததென் னுருயிரே.

### கஅ. உய்ந்தேன்

(கொச்சகக் கலிப்பா)

1437. தன்னையே யொத்த சரணியர்மற் றுருமில்லா
வுன்னையே யன்றியெனக் குண்மையுற வாருமில்லை
யென்னவே தேர்ந்தாங் கிதயத் திறுகிறுக
வுன்னையே பற்றிநா னுய்ந்தே னுடையானே.

1438. பாவமே செய்த பதகனேன் என்னைநீ
யாவவென் றன்பா லருளியவாற் றுலுய்ந்தேன்
ஏவலனு யென்னையடிக் கேற்றுப் பணிகொண்ட
பாவனு தீதப் பரசொருபப் பெம்மானே.

1439. மாயா விலாச மயக்கமற வென்னகத்து
நீயேதா னாக நிகழ்சொருபந் தேற்றியவா!
தீயா ரினத்திற் செருக்கலுற்ற மோகவகப்
பேயேனுன் காருண்யப் பெற்றியா லுய்ந்தேனே.

1440. நீதியா லுன்னை நினைந்தறியா வஞ்சமடப்
பேதையே னுள்ளத்திற் பேரின்ப மோனவருட்
சோதி சொரூபமாத் தோன்றலுற்ற வாண்டவா
வூதியமா வுற்றநின் னுண்மையா லுய்ந்தேனே.

1441. கொன்னே யுழன்ற கொடுங்கனியே னுள்ளத்திற்
பன்னலரு முண்மைப் பரமென் சொரூபமாத்
துன்னுமனு பூதி துலங்கக் கிளர்வித்த
வுன்னருளா லுய்ந்தே னுடையா யடியேனே.

### கக. உன் கண்ணேக்கால் அடைந்தவை

(வெண்பா)

1442. ஒக்க வொளிர்சொருப வுண்மையா முன்னைமறந்
தெய்க்கலுற்றேன் யானிதுவென் றெண்ணியே—
[தொக்கவருட்
பார்வையென்பால் வீசிப் படர்தலுமக் கற்பனைபோய்ச்
சேர்வுற்ற துண்மைத் தெளிவு.

(கொச்சகக் கலிப்பா)

1443. பொன்போ லொளிர்சொருபப் புன்னகைசே [ருன்ஞேக்கா
லென்பா லிரங்கியெனக் கின்னருள்பா லித்தவுனக்
கன்பாலே தொண்டுபட்டாங் காசாபா சங்கழல
வென்போத முன்போத மாக விளைந்ததே.

1444. உய்வுள்ளி யுற்ரு ருளம்பொங்கக் காண்குறு நின்
கைவல் லியசொருபக் காண்ஞேக்க மாட்சியாற்
பொய்வல்ல மாயைப் புணர்ப்பகலச் சிற்பரமெய்த்
தூய்யவருள் வாழ்வு சொரூபமாப் பொங்கியதே.

1445. ஐயா வடியனே ஞருயிருக் கோருயிரா
மெய்யா வெனையாண்ட வித்தகநின் கண்ஞேக்கால்
உய்யாநின் றேன்சொருப வுண்மையுணர்ந் துன்ன
மெய்யா தியல்பா லினிதுவாழ் கின்றேனே. [டிக்கீ

1446. கூகையே போலக் குருடுபட்டு நண்பகலே
மோகமனக் கற்பனையின் மூழ்கலுற்ற மூர்க்கனேற்
காகநீ முன்வந் தருள்விழியா லாணவப்பாழ்
வேகமறச் செற்றதால் வீணனே னுய்ந்தேனே.

1447. உயிர்க்குயிரா வுள்ளத் துணர்ந்துநா னுன்னை
நயக்கலுற்றே னுன்கருணை நாட்டத்தால் வஞ்ச
மயக்க வகந்தை மனக்கற் பனையிற்
றுயக்க முருத சொரூபப் பிரானே.

1448. நுண்மைசே ருன்னருட்கண் ணேக்கமென்பாற் [ருக்கலாற்
றிண்மைசேர் மோகச் செருக்கான சிச்சடங்கெட்
டுண்மைசேர் சுத்த வொளிவெளியே யென்னுருவா
வண்மைசேர் கைவல்ய வாழ்வடைந்தே னெம்மானே.

1449. பன்னலரு சுத்தப் பரமான வாண்டவா!
உன்னருளா லென்னு ருயிர்தழைக்க வுன்னடிக்கீழ்
என்னியல்வாழ் வாக விளைந்ததுநின் கண்ஞேக்காற்
றன்னியலே யான சதோதயமெய்ச் சிற்பரமே.

1450. உள்ளத்துத் திட்பமுற வோங்காரச் செம்பொருளைக்
கள்ளமறக் காண்சொருபக் கண்ணேக்காற் கட்டி
தள்ளற் கரியமெய்த் தத்துவமே தானகத் [வைத்தாய்
தெள்ளத் தெளிந்ததிடச் சிற்பரமாம் பெம்மானே.

1451. உள்ளத் தொளிர்சொருப வுண்மைப் பொருளேயாத்
தெள்ளத் தெளியவுனைத் தேறலுற்றேன்; கண்ணேக்
[காற்
கள்ளமனக் கற்பனையைக் கண்டித் தருள்வெளியா
வுள்ளும் புறமுமொருங் கொக்கவிளங் கொள்ளியனே.

1452. ஆதமிலி நாயேனை யன்புருவா வாண்டுகொண்ட
போத சொரூபவருட் புண்ணியநின் கண்ணேக்கால்
வேதமுடி யான விசுத்தப் பரசொருபப்
பாதவொளி யென்னுட் பகலாகக் கண்டேனே.

1453. தீனனே ஞன செருக்கனேன் சுத்தவருள்
வானமே யாக மலர்ந்துநின் கண்ணேக்கால்
ஈனமே யில்லா வியற்சிற் பரசொருப
ஞானமோ ஞனுபவ நன்னலவாழ் வுற்றேனே.

1454. கொட்பா ரகப்பேய் குலைந்தொழியக் கண்ணேக்காற்
பெட்பார் சொரூபவருட் பேறளித்த வாண்டவா!
தட்பான சாந்தி தழைத்தொளிரக் கூட்டியநின்
னட்பா லடைந்ததுமெய்ஞ் ஞானனு பூதியே.

1455. உன்பாலே தஞ்சமா வுற்றவென் னுருயிருக்
கின்பமே யன்றிமற் றெந்நாளுந் துன்பமில்லை;
நம்பா வடைந்ததுமெய்ஞ் ஞானனு பூதியெனக்
கன்பார்ந்த நின்மெய் யருட்கடைக்கண் ணேக்காலே.

1456. நாணற் குரியேனுன் னல்லடியார் கூட்டத்துட்
பேணக் கடவசிவப் பெட்பறியாப் பேதைமையால்;
மாணச் சிறந்தவருள் வள்ளாலுன் கண்ணேக்காற்
காணக் கிடைத்தேன் கடவுட் பெருங்கழலே.

1457. களிவளர்மோ கக்கனவிற் கட்டுண் டழுங்கா
தொளிவெளியா வென்னை யுடையாய்! சொரூபத்
தெளிவளர்கண் ணேக்காலென் சிச்சடம்பே தித்தாய்க்
கிளிவரல்சேர் யானெனது முற்றவிழந் தேனே.

1458. நீயேநா ஞனதிட நிச்சயஞா ஞனுபவந்
தோயாநின் றேன்சொருபச் சொக்கப்பா!
[உன்னடிமைப்
பேயேனுன் கண்ணேக்கம் பெற்றதா லுள்ளமெனக்
கேயே பரந்தபே ரின்பவெளி யானதே.

1459. கள்ளக் கலக்கமறச் செற்றநின் கண்ணேக்கால்
உள்ளத் தொளிவெளியா வுற்ற சொரூபவருள்
வெள்ளக் கடலில்யான் விம்மிதமா வாழ்கின்றேன்
தெள்ளத் தெளிந்த சிவானுபவம் பொங்கவே.

1460. உன்பாலே யென்னே யொடுக்கலாற் றன்மயமா
உன்பார மோனமெனக் குள்ளொளிரக் கூட்டியநின்
னன்பான சுத்த வருட்பார்வை யால்விளங்கிற்
றின்பவீ டான வியற்சிற் பரவாழ்வே.

1461. பிரானேயுன் கண்ணேக்கம் பெற்றதாற் பேயேன்
விராவியமெய் யன்புணர்வு மீதூர வுள்ளத்
தொராஞெருபே ரின்ப வொளிவெளியாப் பொங்கு
பரானுபவ மோனம் படைக்கலுற் றேனே.

உ0. **உன் கண்ணேக்கால் அற்றவை.**

**எண்ணமறல்**

(குறள்)

1462. உன்னுருவே யென்னுருவா வுன்னருளாற் றேற்றலால்
உன்னலற வோய்ந்தொழிந் தேன்.

**சலனமறல்**

(கொச்சகக் கலிப்பா)

1463. கற்றவித்தை யாலே யகங்கரித்துக் கற்பனேயிற்
சுற்றுமுற்று மோடிச் சுழன்றவகப் பேய்மனத்தேன்
உற்றதோ ருண்மையெனக் கோதியநின் சிற்பதத்திற்
பற்றலுற்ற நிட்டையாற் பட்டிமைதீர் வுற்றதே.

**கற்பனையறல்**

(கொச்சகக் கலிப்பா)

1464. கற்கெனநீ காட்டிக் கொடுத்தசிவக் கேவலமெய்
ஒற்கமற வுள்ளத் தொளிவெளியாப் பொங்கலின்யான்
சற்கதியாக் கூடிச் சதிர்த்த வருட்பதத்திற்
புற்கெனமற் றெல்லாம் பொலிவிழந்து போனதே.

1465. உன்னவிரண் டில்லா வொளிவெளியாப் பொங்கலுற்ற
வுன்னையே வாழ்வாக வுற்றேனுக் காண்டவா
என்னதுநா னாக வியன்றவெல்லாங் கற்பனையா
வுன்னி லொழிந்ததுகா ணென்னை யுடையானே.

1466. பேய்த்தேர் முகக்கலுற்ற பேதையே னுன்னருளா
லோர்த்துணர்ந்து நீத்தே னுலகுபொய்த் தோற்ற
[மென்று
சீர்த்தே விளங்குசிவச் சிற்பரமா முன்னிடத்திற்
சேர்த்த மனத்தாற் சிறிதுமில்லை கற்பனையே.

**பசுபாச மறல்**

(குறள்)

1467. நானுனக்கா ளாக நயந்தேற்ற வுன்னருளாற்
போனதுபா சப்பாழ்ம் புணர்ப்பு.

(வெண்பா)

1468. உன்னடியை யன்றி யுறுதுணைமற் றென்னுயிருக்
கென்னுடையாய் நான்கண் டிலாமையால்—
[உன்னடியே
முற்றமுழுத் தாரகமா(ம்) முத்திப் பெரும்பதமாப்
பற்றியயற் பாசமற் றேன்.

(கொச்சகக் கலிப்பா)

1469. எற்றென் றிரங்கற் கிடமின்றி யானுன்பா
லற்றொழிய வென்னைநன் காண்ட வருட்பரா!
முற்றுமா மோன முழுமுதற்பே ரின்பவியல்
பற்றலுற்றே னுன்னடிக்கீழ் பாசபந் தம்பரிந்தே.

1470. கண்டுகொளென் றென்னறிவிற் காட்டியநின் சேவடிக்
உண்டு திளேக்கவுளத் தூறியமோ ஞனுபவத் [கீழ்
தண்டருங்கா ஞத வருட்பெருவாழ் வார்தலால்
விண்டதுவெம் பாச விடாயாங் குதுகுதுப்பே.

1471. பாங்கனேன் பாலே பரிவுகூர் பார்வையால்
யாங்குமொன் ருக வியல்சிற் பரசொருபப்
பூங்கழல்காட் டிக்கொடுத்த புண்ணியா! உன்னருளால்
வாங்கியது மோக மனப்பசுபா சங்களே.

### இச்சையறல்

1472. தற்பரமா வென்னேத் தலேப்படுவித் தாண்டவா !
கற்பனு பேதங் கரந்தொழியக் காண்குறுநின்
னற்புதமா மோன வருட்பூ ரணவுணர்வா
லெப்பதத்து மிச்சையெனக் கில்லா தொழிந்ததே.

1473. வேண்டியெனே யாண்டவநின் வித்தகமெய்க் கண்
[ஞேக்காற்
காண்டகுசற் போதவருட் கண்ணுர் கழல்கண்டேற்
கீண்டியமெய் யன்பாற்பே ரின்பமெழப் பொங்கலால்
மாண்டதகங் கார மனேமயப்பா ழாசைகளே.

1474. மாயா விலாசத்து மாழ்கா தருள்சுரக்கும்
தாயே யனேய தயாசொருபத் தற்பரா !
நீயே யகத்தியல்பா நின்ருெளிர்வால் உன்னடிசார்
நாயேனுக் காசைமற் றன்னியத்து நண்ணுதே.

### வாதனேயறல்

1475. மாறிலா தாண்டவருள் வள்ளால் அடியனேற்
கீறிலா வின்பவுணர் வெய்த விதயத்துத்
தேறுவித்த நின்சொருபச் செம்பொருளின் சீர்மையாற்
பாறியது மோகவகப் பாழ்ங்கலக்க வாதனேயே.

### அகங்கதையறல்

1476. உள்ளவா காணவென் ளுள்ளத் தொளிர்சொருபத்
தெள்ளியாய்! கள்ளச் செருக்கா மகங்காரத்
துள்ளலற் ருேய்ந்தேன் சொருபானு பூதியால்
வெள்ளமா மோன வியற்சிற் பரத்திலே.

1477. மிக்கபர மார்த்த விளக்கமார் சற்குருவாப்
பொக்க மயக்கமறப் போக்குமுன் கண்ணேக்காற்
சிக்கெனவுள் ளத்திற் சிறக்க வொளிர்சொருபத்
துக்கதுநா னென்னும்பா மூத்தை யகந்தையே.

1478. என்னையே நானறியா வேழையேன் இற்றெனமற்
றுன்னை நா னேர்த்துணர வொண்ணுமோ? நீயளித்த
நன்னயமார் மோனமெய்ஞ் ஞானனு பூதியில்யா
னென்னலற லாலுன்னை யென்னியல்பாக் கண்டேனே.

குறிப்பு:-இற்றென-உண்மையில் இத்தன்மைத்தென்று.

1479. மாணக் கிளர்சொருப மாட்சியால் யாவருந்தற்
பேணக் கடவ பிரானை வுன்னை நான்
காணலுற்றுங் குண்மைக் கடவுளியல் காண்டலால்
ஆணவப்பா ழான வனர்த்தங் கழன்றதே.

1480. விராவியபல் பேத விகற்பமற நானுன்
ஞொரானொருபே ரோதி யுபாசித்தே னுள்ளத்
திராதகன்ற தாணவப்பா ழேசறவு, வானோர்
பராவலுற்ற வுன்னருட்சிற் பார்வைசேர் வானே.

## அபிமான மறல்

1481. நானுக வுன்னையே நன்கறிந்து சுத்தவருள்
வானு வியல்சொருப வைப்பிலே யான்றமைந்த
மோனனு பூதி முயங்கலா லற்றதுபொய்ம்
மானபி மான மயக்கக் கலக்கமே.

## மாயை யறல்

1482. மருண்டமனக் கற்பனையை மாற்றியென் னுள்ளத்
திரண்டற்ற வொன்று விருந்தொளிர்கின் றுய்பாற்
றிரண்ட சிவானுபவச் சீர்மைபெற வாழ்ந்தேன்
வெருண்டமனே மாயா விலாசமறப் பேர்ந்தே.

**மனமறல்**

(வெண்பா)

1483. இறையும் பிரியா திதயத் தறிவா
வுறையும் பெரிய வுடையாய்—நிறையும்
பரவெளியா முன்சொருபப் பார்வையால் வஞ்சக்
கரவொழிந்த தென்றன் கருத்து.

(கொச்சகக் கலிப்பா)

1484. பேதப் புலங்கடந்த பெம்மான்! சொரூபவருட்
போதங் கலத்தலாற் புத்தியிலே நாயேனுக்
காதங்க மார்ந்த வகப்பா முனர்த்தமனச்
சூதற் றொழிந்ததுகாண் சுத்தவொளிச் செம்பதத்தே.

1485. உள்ளதோ ருண்மையா வுள்ளத் தொளிர்சொரூப
வள்ளலா முன்பால் வளங்கிளர்மோ னனுபவத்
தெள்ளமுத வாழ்வு திளைத்தலால் யானெனும்பொய்க்
கள்ளமனம் பொன்றக் கரந்ததுகாண் சிற்பதத்தே.

1486. தஞ்சவடி யேனைச் சதிர்படநன் காண்டவா
விஞ்சைசேர் சுத்த வெளியான நின்பதத்திற்
செஞ்செவே வாழ்வு சிறக்கச் செழித்தலால்
வஞ்ச மயக்கமன மாசற் றொழிந்ததே.

**மனக்கலக்க மறல்**

1487. மன்னு சொரூபவியல் வாழ்வான சாந்தியுணர்
வுன்னருளா லுள்ளத் துறுதிபெறச் சார்ந்தேனுக்
கன்னையினு மிக்கநல் லாண்டவா சஞ்சலமாத்
துன்றுமனப் புன்கலக்கந் தோன்றுதென் றென்றுமே.

**கிலேசமறல்**

(குறள்)

1488. முகக்கலா லுன்சொரூப மோனவொளி மோக
வகக்கிலே சங்கெட் டது.

### வேசற வறல்

(வெண்பா)

1489. ஆவேச மான வகந்தைமுனைப் பற்றொழிந்து
தேவேச ஞன நின் சிற்பதத்தே—நீவேறு
நான்வே றெனுங்கருத்து நட்டமாய் மோனமுற்று
நான்வே சறவுதீர்ந் தேன்.

### புலக்கலக்கமறல்

(கொச்சகக் கலிப்பா)

1490. தோற்று புலங்களையே சுட்டிவறும் பாழுலகச்
சேற்றி லழுந்தாது சித்தத்துட் சிற்பரமாத்
தேற்றியநின் னுண்மைத் திருவடியைச் சோர்வறநான்
போற்றலால் வேற்றுப் புலக்கலக்கம் போனதே.

### மரணமறல்

1491. அறிவான வுன்னல் அகங்கார மோக
மறவியாஞ் சாவறவே மாற்றினேன்; ஆன்ற
நிறைவா வொளிர்சொருப ஞேயமன்றி மற்றோ
ருறவுநான் காணே னுடையாயென் முன்னே.

1492. பாழிலே வீழ்ந்தேன் பரமாவென் றோலமிட்ட
வேழையே னுள்ளத் தெழுந்த வொளிவெளியே!
ஊழிதோ றூழி யுலப்பிலா வுண்மையா
வாழலுற்றேன் கைவல்ய மாட்சிசே ருன்பதத்தே.

### பிறவியறல்

(குறள்)

1493. ஆண்டவா வுன்னை லடைந்தே னினியுலகத்
தீண்டவா ராமெய் யியல்.

(கொச்சகக் கலிப்பா)

1494. நிறைவான வுண்மை நிலைவிளங்க வுள்ளத்
தறிவே சொரூபமா வாண்டவா! உன்னாற்
பிறவா விறவாப் பெருவாழ்வு பெற்றேன்
மறலியா மூண்ட மயக்கமற் றேனே.

1495. அங்கணு ளுள்ளத் தருட்பரங்காட் டிக்கொடுத்த
செங்கணு தெய்வச் சிதம்பரா வுன்னடிக்கீழ்த்
தூங்கவாழ் வான சொரூபானு பூதியெழப்
பொங்கலான் மங்கியது புன்பிறவித் துன்பமே.

துயரறல்

1496. உள்ளத்தே யுணமை யுணர்வொளியா நானெனும்
[பொய்க்
கள்ள மயக்கங் கழன்றொழிய வாண்டநின்பாற்
றெள்ளமுத மானவருட் சிற்பரவாழ் வுற்றேனுக்
கெள்ளத் தனையு மிடர்ப்படவோ ரேதுவின்றே.

வேகமறல்

1497. வெளியாக வென்னை விழுங்கவுற்ற வுண்மை
யொளியான வுன்னொடுநா னேரியல்வாழ் வுற்றேன்;
தெளிவான சுத்த சிவானுபவ மோன
விளைவா விதயத்தில் வேகமற் றேனே.

## உக. எல்லாம் உன் மாயா விலாசம்

(கொச்சகக் கலிப்பா)

1498. எம்பிரா னுன விறைவா அடியனே
னுன்பதமே யன்றி யொழிந்தவற்றை யோர்கிலேன்;
இம்பரும்ப ராக வெதிர்தோற் றுபவனைத்தும்
வம்புசே ருன்மனோ மாயா விலாசமன்றே.

1499. உன்னிலே யென்னை யுணர்வோ டொடுக்கியநின்
றன்னுருவே யென்னுருவாச் சார்ந்தவனு பூதியாற்
பொன்னிலே பொன்னணிகள் போல வுணர்வுருவா
முன்னிலே யெல்லாமோ ருன்மயமா வுற்றனவே.

1500. கல்லாமை யானவகங் காரமற மாற்றினைக்
கெல்லாமே யுன்வடிவாக் கண்டுகொண்ட யான்சற்றும்
ஒல்லாமை யாலே யொழிந்திருப்ப தன்றிமற்
றெல்லார்க்குந் தொண்டுசெய்ய விச்சையுள்ளே
[னம்மானே

## உஉ. உன்னில் அழுந்தல்

(கொச்சகக் கலிப்பா)

1501. கழிந்தே மயக்கமனக் கற்பனையாம் பாசத்
தழுந்தா தடியே னகத்திற் சிவச்செங்
கொழுந்தாக நாளுங் குலாவு சொரூபா!
அழுந்தலுற்றேன் யானுன் னருட்சிற் பதத்தே.

1502. உன்பாலே யென்னை நா ஞெப்புவித்தே ஞுருயிரைப்
பொன்போலே யன்பாற் பொலிவித்த வாண்டவா
என்பா லுனையேநா னென்சொருப மாகவறிந்
தன்பான நின்பா லழுந்தலுற்றே னம்மானே.

## உங. ஊனுதல்

(குறள்)

1503. உனக்கே யெனையூனு வுய்த்தலா லுற்றேன்
மனக்கேத மற்ற மகிழ்.

(வெண்பா)

1504. காண்கிலே னென்னிலகங் கார மயக்கமுனைப்
பூண்கவள மாகநின் ஞெண்பதத்தே—மாண்புறுபே
ரன்புமய மாமவ் வருட்சிற் பரசொருப
வின்பவெளி யிற்கரந்த தாம்.

(கொச்சகக் கலிப்பா)

1505. கண்ணேயா வென்னைக் கலந்த சொரூபவருள்
விண்ணேநா னுன்னை விழுங்கக் கருதியவவ்
வெண்ணமே நான்கொண்ட வீற்றெண்ண மாகவகத்
துண்டொழித்தா யென்னையுனக் கூனுக முற்றிலுமே.

1506. உன்னை வணங்கலுற்றே னுள்ளத் தொளிர்சொருப
நன்னயமார் முத்தியா நண்ணலுற்ற வாண்டவா!
என்னை விழுங்கி யியற்சிற் பரவெளியாத்
துன்னியதுன் சுத்தத் துரீய சொருபமே.

1507. தனிக்கே வலசொருபத் தத்துவஞா னத்தான்
மனக்கேத மற்ற மகிழ்ச்சி யளித்தாய்
வினைக்கேட ஞைவருள் வித்தகா நானுன்
றனக்கே யெனையூணுத் தந்தே னுவந்தே.

## உ௪. ஒடுங்கல்

(கொச்சகக் கலிப்பா)

1508. என்னியலே தேருத வேழையேன் ஈசனு
முன்னியலெவ் வாற்று லுணர்ந்திசைத்த லாவதோ
என்னையினி தாண்ட விறைவா நமோநமவென்
றுன்னடியே தாரகமா வோர்ந்தொடுங்க லுற்றேனே.

1509. உன்சொருபத் தொன்று வொடுங்கிலன்றிச் சுட்டு
[ணர்வா
லுன்சொருப வுண்மையைமற் றியாரே யுணரவல்லார் ;
உன்சொருப வுண்மையுணர் வுற்றதெனக் குன்னருளா
லுன்சொருப மாட்சியில்யா னென்று வொடுங்கலுற்றே.

1510. இன்னருளா லுன்னை யிதயத் தொளிர்வித்த
வுன்னுருவா மோன வொளிவெளியிற் புக்கொடுங்கி
என்னுருநான் முற்ற விழந்தொழிந்தே னெம்பெரு
[மான்
உன்னியலே யென்னியலா வுற்றுளிர்மெய்த் தன்மை
[கண்டே.

1511. என்னைத் தவிரவிரண் டேதுமில்சச் சிற்பரமாந்
தன்னிற் பரமோப சாந்தி தழைக்கலுற்றேன்
வன்னப் பரவெளியா வைகுசிவக் கேவலவாழ்
வுன்னிற் பிறங்கலா லுன்னிலொடுங் குற்றேனே.

1512. உண்மையா வுள்ளானே பொய்ம்மையாப் பூத்தானே
வண்மைசே ரின்னருளால் வஞ்சனே னுள்ளம்புக்
கண்மையிலு மண்மையா வாண்டபரஞ் சோதிநின்
னுண்மையிலே யானொடுங்க லுற்றே னுணர்வோடே.

15

### உ௯. தன்னொழிவே என் பேறு

(வெண்பா)

1513. என்னுள்ளே யுன்னை யிருத்தினைய் போலேநின்
றுன்னுள்ளே யென்னை யொடுக்கினைய்—நின்னுள்ளி
நானற் றெழிந்ததை நான்கண் டமைந்ததே
நானுற்ற பேறுநின் னைல்.

(கொச்சகக் கலிப்பா)

1514. மாயா விலாச மயக்கக் கடலினின்று
நாயேனை யாண்டமெய்ஞ் ஞான வருட்கடலே
நீயேநா னைக நிகழ்சொரூ பானுபவத்
தேயேநா னென்னை யிழந்துவாழ் கின்றேனே.

1515. மனக்கேத மற்ற மகிழ்வாழ் விதயத்
தினிக்க வினிக்க வியைதலா லாழ்ந்தாழ்ந்
துனக்கேநா னற்றெழிந்தேன் ஒட்பநுட்ப மான
தனிக்கே வலமாத் தழைத்த பிரானே.

1516. தன்னியல்பாப் பொங்கு சதாசிவமோ னனுபவத்
தென்னையே நானிழந்தே னெம்பிரான்! யானைரென்
றுன்னருளா லுள்ளத் துசாவி யொளிவெளியா
முன்னுருவே யென்னுருவா வுற்ற வுணர்வாலே.

1517. வேணவா வாலே விரும்பிநா னுன்னடியைக்
காணலுற்ற வந்நாளே கண்ணேக்கா லென்னையுவந்
தூணமா வுன்னைடொன்ரு வுண்டொளிரவ் வுன்னை
[யன்றி
நாணலுற்றே னென்னையே நானெனநான் சாற்றவுமே.

1518. உருவா வருவா வுருவருவா வுன்னைக்
கருதலுற்ற மோகமனக் கற்பனைதீர்ந் தோய,
இருவே றிலாத வியற்பரமா வுள்ளத்
துருவலுற்ற வுன்மயமா வோய்ந்தொழிந்தேன் யானே.

1519. அறவே வுடையாய்க் கடியனே னற்றேன்
உறவோ வுலகோ டொழிந்தேன் இதயத்
திறவிலே சுத்தசிவச் சீர்மை விளங்க
வறிவே சொரூபமா வாண்ட பிரானே.

1520. தன்னையே யன்றித் தனக்கயலா வேதுமறத்
துன்னியசற் போத சொரூபமா வாண்டவா ;
உன்னதுசீ பாத வுணர்வொளியில் வாழ்கின்றேற்
கென்னதுநா னில்லை யிகம்பரமு மில்லையே.

1521. அனர்த்தக் கலக்கமற வன்புருவா வுட்புக்
கினித்தலுற வென்னோ டியைந்த விறைவா
உனைத்தவிரச் சற்று மெனக்கெனவோ ருண்மை
தனித்தின்மை கண்டு தரித்தேனுன் பாலே.

### உசு. உன் சொரூப தரிசனம்

(கொச்சகக் கலிப்பா)

1522. ஆன்ற விசுத்த வருள்வெளியா முன்சொருபந்
தோன்றி லெவரே தொழுவார் பிறிதொன்றை!
மான்றவகப் பேயேன் மனத்தேநீ வாலறிவா
வூன்றலுற்ற வாற்ற லுனைநா னுணர்ந்தேனே.

### உஎ. பரமார்த்த வுண்மை காணல்

(கொச்சகக் கலிப்பா)

1523. விழலே யனைய வெறுவியேன் உன்றன்
கழலே கருதலாற் கைவல்யங் கண்டேன் ;
சுழல்சேர் மனக்கற் பனைசொப் பனத்தா
டுழலேன் பரமார்த்த வுண்மைகண் டேனே.

### உஅ. யாவும் தானேயென அறிதல்

(கொச்சகக் கலிப்பா)

1524. மனதற்ற சுத்தவருள் வாலறிவா முண்மை
தனைப்பற்று வித்த தயாபரா ! யானென்
றெனதென் றெழுந்த வெலாக்கற் பனையுந்
தனதியலே யாகத் தழைக்கலுற் றேனே.

## உகு. அருட் செல்வம்

(கொச்சகக் கலிப்பா)

1525. ஓர்மையா லென்னுருவா வுன்னையே நானுவக்க
நீர்மையா லென்னகத்து நீங்கா துறையிறைவா!
கூர்மைசேர் சாந்திக் குலாச்சேர்நின் சந்நிதியிற்
சீர்மைசேர் சுத்தவருட் செல்வமெனக் கார்ந்ததே.

## ருய. அருட் பூரணம்

(கொச்சகக் கலிப்பா)

1526. தெருளாத மத்தச் செருக்கனேன் தெய்வ
வருளாலே யுன்னை யடைந்தேன் அகப்பா
மிருளா மவிச்சை யிகந்தொழிய வுண்மைப்
பொருளான சுத்தவருட் பூரணங்கண் டேனே.

1527. பொய்க்கனவிற் புக்கழுந்திப் புல்லியேன் மாழ்காது
சிக்கெனவென் னுள்ளுணர்விற் சேர்ந்துறையுஞ் [சிற்பரா!
மிக்க வருள்வெளியா விஞ்சிடுமுன் மெய்ப்பதத்திற்
பொக்கமற்ற வாழ்வெனக்குப் பூரணமாப் பொங்கியதே.

1528. எல்லே யிதயத் தியற்பரமா வாண்டவா
பொல்லே னெனினுநின் பொன்னடியே கைதொழலாற்
பொல்லாமை யற்றொழியப் புந்தியிலே புக்கதெனக்
கெல்லா நலனுமொருங் கேய்ந்தவருட் பூரணமே.

## ருக. அருள்வெளி வாழ்வு

(கொச்சகக் கலிப்பா)

1529. துன்னுபர மார்த்த சொரூபமா வுள்ளுணர்வு
டென்னையினி தாண்டசீ ரெம்பிரான் யானெனதென்
றுன்னுமஞ்ஞ வேகமற வுள்ளத் துபசாந்த
வன்ன வருள்வெளியா மன்னியதென் னுருயிரே.

1530. தானு வொளிர்சொருபத் தத்துவமே யென்னுருவா
ஞானு பூதி நலங்கிளர வாண்டவா
யானு ரெனவறியா வேழையே னுன்னருளா
லானு வமுத வருள்வெளியா வாழ்ந்தேனே.

1531. காரா ணவப்பாழ்ங் கலக்கமறச் செற்றவருள்
வீராவுன் வாள்விழியாற் சிச்சடம்பே தித்தலால்
ஆரா வமுத வகன்சிற் பரவெளியே
சீரார் சொரூபமாச் சேர்ந்த தனுபவமே.

1532. தண்ணளியா லென்னைத் தடுத்தாண்ட வுன்னருளால்
எண்ணரிதா முன்னையினி தெண்ணுகின் றேனுக்குக்
கண்ணதுதா னந்தமிலாக் கண்ணு வொளிர்சொருப
வண்ணப் பரவெளியா வாழ்வு மலர்ந்ததே.

1533. ஒளிவெளியே யென்னினுநின் னுண்மை மயக்கக்
களிசே ரகந்தைமனக் கற்பனையோர் காணார்;
தெளியநான் கண்டுகொண்டேன் சிற்பரமா மந்த
வெளியுருவை நின்னதருள் வித்தகநோக் காலே.

1534. உண்ண வுடுக்க வுணர்தலின்றி யுன்னையுவந்
தெண்ணி வழுத்தி யிறைஞ்சவோ யானறியேன்
தண்ணளியா லென்னைத் தடுத்தாண் டிதயத்தில்
வண்ணவருள் வாழ்வளித்தாய் மத்தக் கடையனுக்கே.

## ௯௨. ஒளி வெளி

(கொச்சகக் கலிப்பா)

1535. மான்ற வகங்கார மத்தனே னுள்ளம்புக்
கான்ற வருள்வடிவா வாண்ட பரஞ்சோதி!
நான்ற னெனும்பரிசு நட்டமாக் கெட்டொழியப்
பூன்ற வொளிவெளியாப் பொங்கியதுன் னுண்மையே.

1536. வெளியா விளங்கலுற்ற வித்தகா வுன்பாற்
றெளிவான சுத்தவருட் சிற்பரயோ கந்தேர்ந்
திளிவரல்சேர் யானெனும்பொய் யென்றுமறப் பொங்கவ்
வொளிவெளியா முன்மெய்யோ டொன்றலுற் றேனே.

## ௯௩. துரீய சொரூபமுறல்

(கொச்சகக் கலிப்பா)

1537. உன்னடியே நாளு முபாசித்த வுன்னடியேன்
பின்னியமா மோகப் பிணக்கா மகந்தையற
நன்னயமார் சுத்தமெய்ஞ் ஞானு பூதியாற்
றுன்னலுற்றே னுன்மெய்த் துரீய சொரூபமே.

1538. கற்பாலே வுன்னைக் கலந்தே னிதயத்துத்
துப்பாகத் துன்று சொரூபானு பூதியாற்
சொற்பால தல்லாத் துரீயவியற் செம்பதவாழ்
வப்பாலா வுள்ளதெனக் கிப்பால தானதே.

1539. சித்தத் திருந்தொளிர்சச் சிற்பரமா முன்னருளான்
முத்தித் துலக்கம் முகக்கவுளத் துள்ளபடி
சுத்தப் பரசிவமே துங்க சொரூபமாத்
துய்க்கக் கிளர்ந்த துரீய மதீதமே.

### சஅ. பிரம்மாநு பூதி

(கொச்சகக் கலிப்பா)

1540. உன்னருட்கே யென்னைமுற்ற வொப்புவித்த [வுன்னடியேன்
என்ன குறையுமிலா தெக்களிக்க வுன்னடிக்கீழ்த்
துன்னலுற்ற சொந்த சொரூபானு பூதிசற்றும்
பின்னமற்ற சுத்தப் பிரம்மானு பூதியே.

1541. என்னையே போன்ற விழிசினர்வே றுருமில்லா
வுன்னடியே னுன்னையே யுள்ளியுள்ளி யுள்ளத்திற்
பின்னமற்ற சுத்தப் பிரம்மானு பூதிபெற்றேன் ;
உன்னை யடைந்தா ரொருவரும்வீண் போகாரே.

### சகூ. பூமா

(கொச்சகக் கலிப்பா)

1542. அற்பசொற்ப மல்லாப்பே ராசையென் னுள்ளத்து
முற்படமீ தூரத்தன் மோனனு பூதியாற்
சிற்பரவாழ் வான சிவானுபவந் தேற்றியநின்
பொற்பதமே பூமாவாப் புந்தியிற்சேர் வுற்றதே.

1543. என்றுதை யான விறைவாநா னுன்னியைபாற்
பொன்றாத சுத்தவருட் பூமாவில் வாழ்கின்றேன்
தொன்றான ஞான சொரூபானு பூதியால்
இன்று வொழிந்ததுநா னென்னு மகந்தையே.

1544. அப்பாநா னுன்னை யடிபணிந்தே சுத்தவருட்
செப்பமா ருண்மைத் திறந்தெளிந்தே னுள்ளுணர்விற்
பொற்ப விளங்கலுற்ற பூமா புரத்திரயக்
கற்பனைதீர் சிற்பரமெய்க் கைவல்ய மானதே.

1545. உன்னையே யொன்ற வுபாசித்தே னுள்ளத்துத்
தன்னையே நானுகச் சாட்சாற் கரிப்பித்தாய்;
அன்னையே யாக வருள்சுரந்த வாண்டவநின்
பொன்னடியே பூமாவாப் புந்தியிற்பொங் குற்றதே.

1546. இருள்வழியே சென்றுநா னேங்கலுற் றேனுக்
கருள்வழிநீ தேற்றியவாற் றுலகத்து மோனப்
பொருள்வளமாப் பொங்குசிவ பூமாவில் யாதும்
மருள்வகையின் றுக மலர்ந்தது நின் மாண்பே.

1547. உன்னடியே யாருயிருக் குண்மைக் கதியாக
வுன்னருளா லுள்ளுணர்வூ றேற்றமாப் போற்றலால்
என்னதுநா னற்ற வியற்சிற் பரசொருபப்
பொன்னுலக வாழ்வகத்திற் பூமாவாப் பொங்கியதே.

## கூசு. மெய்யுணர்வு

(வெண்பா)

1548. அறியாது செய்த வடியேன் பிழையைக்
குறியா திரங்குகுணக் குன்றே—நெறிமுறையா
லன்றியே யுன்ற னருட்சித் திரச்செயலா
லொன்றியதவ் வுண்மை யுணர்வு.

(கொச்சகக் கலிப்பா)

1549. தன்னை யலாதபிற தத்துவப்பாழ்ங் குப்பைகளு
டென்னதுநா னென்னவினைந் தேங்குமகப் பேயேனுக்
குன்னதுமெய்ஞ் ஞான வொளிப்பிழம்பாங் கண்ணேக்
[கால்
உன்னுருவே யென்னுருவா முண்மையுணர்
[வூட்டினையே.

1550. நிறைவான மோனநிலை நெஞ்சமுறப் பற்ற
வறிவா விளங்கலுற்ற வாண்டவா ! உன்னால்
வெறிசே ரகப்பேய் விளிதலா லுள்ளத்
திறவாத வுண்மைவாழ் வெய்தலுற் றேனே.

1551. இதய வொளிவெளியா வெங்குங் கலந்த
நிதியமா மோன நிலயமே ! யாதோ
ருதயமோ டத்த முருதநின் னுண்மைப்
பதமடைந்தேன் மிக்கபர பாக்கியமாத் தானே.

## ௩எ. தன்னுண்மை யுணர்தல்

(கொச்சகக் கலிப்பா)

1552. செவ்வனே நன்கென்னைச் சீர்திருத்தி யாண்டவரு
ளையனே நானுன் னடைக்கலமாச் சேர்ந்ததற்பின்
பொய்யிலமுங் குற்றவென் புன்கலக்கந் தீரவகத்
தொவ்வவிளங் குற்றதெனின் னொட்பநுட்ப
[வுண்மையே.

குறிப்பு:- ஒவ்வ-எல்லா நிலைக்கணும் ஒக்க.

1553. ஒட்பநுட்ப வுண்மையா வுள்ளத் தொளிர்சொருபப்
பெட்பிலே சுத்தப் பிரம்மவியல் கண்டுகொண்டேன்
உட்புறமோ வன்றி யொளியிருளோ வாதியமற்
றெப்புணர்ப்பு மில்லா வியற்சிற் பரவெளியே.

1554. அம்மையோ டப்பனு யன்பார்ந்த சுற்றமுமாய்
இம்மையோ டம்மைமற் றெம்மையுமா யுள்ளத்திற்
செம்மைசேர் சுத்தவருட் சிற்பரமா வுள்ளாய்பால்
பொய்ம்மா லகன்றொழியப் பொங்கியதென்
[னுண்மையே.

## ௩அ. திருவடிப் பேறு

(குறள்)

1555. ஆன்ற சொரூபமே யாக வவிர்ந்தது நீ
யூன்றிநின்ற தாளென் னுளத்து.

(கொச்சகக் கலிப்பா)

1556. என்னியலோ வுன்னியலோ யாதுமே தேர்ந்தறியா
வென்னையுவந் தாண்டநின்பே ரின்பவருட் சேவடியிற்
பின்னியவென் சிந்தை பிருண்டுசற்றும் பேராது
தன்னியலின் மாட்சியிலோர் தன்மைத்தாத் தங்கியதே.
குறிப்பு:- பிற ஆண்டு-வேறெங்கும்.

1557. வேண்டாமை யன்ன விழுச்செல்வம் மீண்டில்லை
யாண்டு மதுவொப்ப தில்லென் றவாவறுத்த
வாண்டானே நானுன் னருட்பதத்தில் வாழ்தலுற்றேற்
கீண்டவே சூழ்ந்ததுபே ரின்பப் பரவெளியே.

1558. சொல்ல வொண்ணாத சொரூபானு பூதியெழப்
புல்லியே னுள்ளத்திற் புக்கொளிர்மெய்ப் புண்ணியா
நல்லதோர் சற்கதிநா னண்ணலுற்றே னுன்பதத்திற்
கல்லாத மோகவகைக் காரா ணவங்கெடவே

7559. ஆணிக் கனகமோ அல்லா நிதிகளோ
பேணிக் களிக்குமனப் பேதைமையிற் பேர்ந்ததனுற்
காணிக்கை யாகக் கருத்தை யுனக்களித்து
மாணிக்க மான நின் மாண்பதப்பே றுற்றேனே.

1560. வேண்டவே தக்க விழுப்பொருளா வுள்ளதுநின்
மாண்பதமே யல்லாது மற்றெதுவு மில்லையில்லை ;
ஆண்டவா சுத்த வருட்பரா வப்பதச்சீ
ரீண்டவே மூண்டா லிதயம் பரவெளியே.

## ௯. ௯. சொரூப வாழ்வு

(குறள்)

1561. உன்னருளா லுண்மையுணர்ந் துள்ளத் தொளிவெளியா
மன்னலுற்றேன் சொந்தவியல் வாழ்வு.

1562. உன்னினும்வே றற்றவென் னுண்மைநிலை காண்டலால்
மன்னியது நின்சொருப வாழ்வு.

1563. உன்னியுன்னி யுன்னுருவை யுன்னருளா
மன்னியதென் சுத்த மனம். [லென்சொருபம்

1564. ஓர்த்துணர்ந்தே னுன்ற லுணர்வே சொரூபமாப்
பேர்த்திமைக்க லில்லேன் பிறகு.

(வெண்பா)

1565. உள்ள பொருளுக் குறைவிடமா முள்ளத்தே
யுள்ளபொரு ளாகவுன்னை யுய்த்துணர்ந்தேன்—உள்ள
ளான சொரூப வருட்போத வாழ்வெனக்குத் [பொரு
தானமைந்த தன்பு தழைத்து.

(கொச்சகக் கலிப்பா)

1566. என்னையே யானறியா வேழையே னெம்பிரா
னுன்னை நா னெவ்வா றுணர்கிற்பேன் உன்னருளா
லென்னியல்யா னோர்ந்தாங் கிதயத் தொளிர்வதுநின்
றன்னுருவே யாகத் தழைத்தேன் சமாதியே.

1567. என்னருமை யான விறையோனே! சீர்மைசே
ருன்னருளா லுன்னடிக்கீ ழுற்றதெனக் கோர்பெருமை,
துன்னலரு சுத்தத் துரீய சொரூபவருள்
வன்னவெளி யாக மலர்ந்திடலா லென்வடிவே.

1568. நித்தமென் னுள்ளத்து நீங்கா தொளிர்சொருபத்
தத்துவமா வுன்னைநான் சாட்சாற் கரிக்கின்றேன்
மொய்த்தகா ரணவப்பாழ் மூட்டமறக் கண்டவருள்
வித்தகா வுன்னிலென்னை வேறறக்காண் குற்றேனே.

1569. கள்ளக் கருத்தாற் கடைப்பட்ட நாயேனைத்
தெள்ளத் தெளிந்தவருட் சிற்பரமாத் தேற்றியவா
எள்ளத் தனையு மிமையா வியற்பரமா
வுள்ளத் தொளிர்சொருப வுண்மைநிலை யுற்றேனே.

1570. கூற்றுன மோகக் கொடும்பிரமா தங்கெடநின்
னூற்றேற லுற்றேன்சுத் தான்ம சொரூபவுண்மை;
போற்றுநின் னுரிதயப் பூவிற்பே ரின்பவருட்
கோற்றேனூற் றுனசிவக் கோமளஞா னக்கொழுந்தே.

குறிப்பு:- கோற்றேன்—அதுபோன்ற வாரமுதத்துக் காரு
பெயர். பேரின்ப வருளா ரமுத வூற்று என்றபடி.

1571. பொன்றாத சுத்தவருட் பூரணமா வுள்ளத்து
நன்றாக வென்னை நயந்தாண் டருளியநின்
குன்றாத மோனக் குலாச்சேர் குருத்துவத்தாற்
றென்றான சொந்த சொரூபசித்தி யார்ந்ததே.

1572. உன்னிலென் புத்தி யுறைத்தலுற வுள்ளம்புக்
கென்னையினி தாண்ட விறைவா வியற்பரமா
முன்னையே நானென் னுயிர்க்குயிரா வோர்த்துணர்ந்து
மன்னலுற்றே னுன்சொருப மாண்பதத்தெந் நாளுமே.

1573. மூசுற்ற வாணவப்பாழ் மோசித்த நின்னருளால்
வேசைப் புகழ்ச்சிபால் வேட்கையறப் பெற்றேனுக்
காசைமற் றெல்லா மகன்றொழிய நின்சொருப
நேசப்பே ராசையே நெஞ்சமுற்றப் பற்றியதே.

1574. ஒன்றான வொட்பநுட்ப வுண்மைப் பரம்பரா!
வுன்றா ளடைந்தேனுக் குன்னருளா லுள்ளத்து
நன்றா விளங்குறுமெய்ஞ் ஞானானு பூதியாற்
பொன்றாத வுன்சொருபப் பூரணவாழ் வுற்றதே.

1575. கள்ள மனைமயப்பாழ்ங் கற்பனை சொப்பனத்துத்
துள்ளி யெழுந்துழன்ற சூதனே னுன்னருளாற்
றள்ளவொணா வத்துவிதத் தற்பரமாஞ் சிற்பரமா
வுள்ளதே யென்சொருப வுண்மையா வுற்றேனே.

1576. கள்ள மயக்கமனக் கண்கலக்கம் பேர்ந்தொழியத்
தெள்ளிதா வாண்டவருட் சிற்பரா நிற்பரவி
யுள்ளே னடியனே னுன்னடிக்கீ ழுன்னைநினைந்
தள்ளூ றமுதசொரூ பானுபவங் கூரவே.

1577. உன்றா ளடைந்த வுழையே னுளத்துறைத்த
நன்றான சுத்தமெய்ஞ் ஞானோப தேசத்தாற்
பொன்றாத வுண்மைப் பொருளா மனுபூதி
தோன்றான சொந்த சொரூபமே யாயிற்றே.

1578. பின்னமனக் கற்பனை பேதமறக் காண்குறநின்
னின்னருளே தாரகமா வேய்ந்ததுகொண் டுள்ளத்துத்
துன்னியமெய்ஞ் ஞான சொரூபானு பூதியால்
என்னதுநா னற்ற வியற்பரமா வாழ்ந்தேனே.

1579. உன்னோ டெனக்குள்ள வுண்மைத் தொடர்பான
நன்றார் தனைத்தேர்மெய்ஞ் ஞான விசாரத்தா
லின்றோ வகந்தையென் றென்றுமற வுள்ளத்துத்
துன்னுபர மார்த்த சொரூபானு பூதியே.

குறிப்பு:- நன்றார் அனுபூதியே என வியையும்.

### ௪0. ஆன்ம சாட்சாற்காரம்

(கொச்சகக் கலிப்பா)

1580. உய்த்துணர வேண்டுவதோ ருண்மையென் றொரு
மெய்த்துணையா நீயே விளக்கி யருளலாற் [யிர்க்கு
பொய்த்தொழிய மற்றனைத்தும் பொங்குமொரே
[முற்றமுழுத்
தத்துவமாந் தன்னைத்தான் சாதித்துக் கொண்டேனே

1581. சிற்பரா வுன்றனருட் செல்வக் குமாரனைத்
தப்பருமெய்ஞ் ஞானந் தலைப்படலா லுள்ளத்திற்
கற்பனை ஜீவக் கலக்கமற நானானென்
றற்புதமா வார்ந்தது நின் றன்ம சொரூபமே.

### ௪௧. கிரந்தி பேதம்

(கொச்சகக் கலிப்பா)

1582. எல்லாமொன் றாகவிளங் கெம்மானுன் கண்ணோக்காற்
கல்லா மனத்தாற் கடைப்பட்டே னுள்ளத்து
நல்லார் தலைப்படுமெய்ஞ் ஞானானு பூதியெழப்
பொல்லா மயக்கமனப் பூட்டுக் குலைந்ததே.

### ௪௨. பேரின்ப வாழ்வு

(வெண்பா)

1583. தாயேனாய் நானுனக்குத் தொண்டுபட நின்கருணை
நீயே யெனக்கு நிகழ்த்தினாய்—தொண்டுபட்
டாழ்வேனாய் நின்பதத்தா டற்றொழிந்த வென்ன
வாழ்வேகாண் பேரின்ப வாழ்வு. [கந்தை

1584. பவமாய மோகப் படர்ச்சிதீர் ஞானத்
தவமாக வென்னிதயஞ் சார்ந்தாய்—சிவமான
நின்பதமே பற்றி நிகழ்வுறுமென் னெஞ்சம்பே
ரின்பமய மன்றிமற் றென்.

1585. முகத்துதியா வொன்றும் மொழிகிலேன் மோன
சுகத்தியல்பா நின்ற சொரூபா—நிகழ்த்துந்
தரமன் றெனக்குநீ தந்தபே ரின்பப்
பரமான சாந்திப் பதம்.

(கொச்சகக் கலிப்பா)

1586. துன்ப மனக்கவலை தூர்ந்தொழிய வுள்ளம்புக்
கன்புமய மாக வடியேனை யாண்டவநின்
றன்பதமே கைவல்யத் தற்பரமா நாயேனுக்
கின்ப வுணர்வா லிதயம்பூ ரித்ததே.

1587. உள்ளத் துணர்வுருவா வுள்ள சொரூபமாத்
தெள்ளத் தெளியவெனைத் தேற்றலாற் பேரின்ப
வெள்ளத் தெனைமூழ்கு வித்தவருள் வித்தகா
தள்ளற் கரியவென்மெய்த் தத்துவமா வுள்ளாயே.

1588. கள்ள வுணர்வு கரைந்தொழியத் தன்மயமா
வுள்ளுணர்வில் வீற்றிருந்த வொள்ளியாய்! உன்ன
றள்ளரிய சாந்தித் தடங்கடலாப் பேரின்பத் [டியிற்
தெள்ளமுத வாழ்வு திளைக்கலுற்றேன் கண்டாயே.

1589. பாடினேன் பாடிப் பணிந்தேன் பணிந்தெழுந்து
தேடினேன் தேடிச் சிவோகமா நின்றேற்கு
நீடியது முற்ற நிரந்தரமா நானுன்னைக்
கூடியபே ரின்பவருட் கூட்டத்து நாட்டமே.

குறிப்பு:- அருட்கூட்டம்-அருட்சேர்க்கை.

1590. தன்பாலே யென்னைத் தடுத்தாண்டு கொண்டவா !
அன்பே சிவமா வகங்கிளரப் பொங்கும்பே
ரின்பவுணர் வாலடியேற் கெய்துமுளப் பூரிப்பால்
உன்பாலே சாந்தியுணர் வூறுகின்ற தோவாதே.

1591. அன்னையினு மிக்கமெய் யன்பா லறக்கடையா
மென்னை யிதயத் தியற்பரமாத் துன்றுவித்த
உன்னருளே யுள்ளலுற்றேற் குள்ளம் பரவசமா
மன்னியபே ரின்ப வசீகரவாழ் வுற்றதே.

1592. உன்னுருவே யென்னுருவா வுன்னருளா லுய்த்து [ணர்ந்து
தன்னிலே தானுத் தழைத்தொளிர்மெய்த் தன்மையால்
உன்னையே கண்டுகேட் டுண்டுயிர்த்துற் றைம்புலத்தும்
மன்னியபே ரின்பவருள் வாழ்வு படைத்தேனே.

1593. துனிக்கவலற் றேயத் தொழுகின்ற குள்ளத்
தினிக்க வினிக்கப்பே ரின்பஞ் சுரக்கும்
உனக்குரிமை பூண்டாங் குடையா யடியேன்
மனக்கலக்க மற்ற மகிழ்ச்சிபெற் றேனே.

## சஅ. அருள் வாழ்வு

(வெண்பா)

1594. வாழ்க்கைவீ ழுகை வறும்பாழ் படாதுதன்பாற்
கேட்கலுற்ற ஞானக் கிளர்ச்சியால்—தாழ்க்கையுறு
திம்மையே யின்னே யிதயத் தொளிர்சொரூபச்
செம்மைசேர் சீர்மையுற் றேன்.

குறிப்பு:—தன்பாற்கேட்கலுற்ற ஞானக்கிளர்ச்சி-உன்னி னிடத்து ஞானவிசாரஞ் செய்ததால் உள்ளத்தி லுண்டான கிளர்ச்சி பாழ்படாது சீர்மையுற் றேன் என வியையும்.

1595. செயிர்ப்படநான் மோகமுற்றுச் சீரழியா வாற்றல்
உயிர்ப்பிடமா வென்னுயிருக் குள்ளாய்—இயற்படநா
னுன்னருட்செம் பாத வொளிசே ருயர்வாழ்க்கை
மன்னலுறப் பெற்றேன் மகிழ்ந்து.

1596. உன்னைநான் நம்பி யுளத்தி லடைக்கலமாத்
துன்னியவப் போதே துறவியாய்ப்—பின்னும்
மயக்கவடி வானபொய்ம் மானுபி மானத்
துயக்கமறு வாழ்வுதோய்ந் தேன்.

(கொச்சகக் கலிப்பா)

1597. செம்பரமா வுள்ள சிவாத்துவிதச் சீர்மைசே
ரும்பரா! நானுன் ஞெளிவெளியா முண்மையிற்புக்
கம்பரமா மோன வருள்வாழ் வடைதலுற்றேன்
வம்பனே னைவுன் மத்தனே னுன்னாலே.

1598. நன்னயமா ருண்மையே நானா விளங்கவெனக்
கின்னருள்பா லித்த விறைவா! மறையாலும்
பன்னலரு சுத்தப் பரவெளியா முன்னடிக்கீழ்
மன்னியபே ரின்பவருள் வாழ்வு படைத்தேனே.

1599. ஆடவோ வன்றி யடங்கவோ நானூரென்
ரூடவா வுன்னை யடைந்தாங்கே யாய்ந்தறிந்தேன்
ஈடிலா வுண்மை யியற்பரவாழ் வுள்ளுணர்விற்
கூடவே யென்னைக் குறிகுணந்தீர்த் தாண்டவனே.

1600. நீதங்க ளாலே நிறைதலுற்ற நெஞ்சத்தால்
யாதுங் குறைவிலே னெம்பெருமான்; உன்னடிக்கீழ்
மோதங் கிளர்சொருப மோனனு பூதியால்
ஆதங்க மற்ற வருட்பெருவாழ் வுற்றதே.

1601. தள்ளலரு சொந்தமெய்த் தத்துவஞா னனுபவ
வெள்ளப் பெருக்கா விளைந்த திருவடிக்கீழ்த்
தெள்ளமுத வாழ்வு திளைக்கலுற்றேன் யானெனும்
[பொய்க்
கள்ளமனம் முற்றக் கரந்தொழியக் கண்டோயே.

1602. பின்னியமா மோகப் பிணக்காலே யாருமுனைத்
துன்னலரு சுத்தத் துரீய சொரூபமா
வுன்னையென் னுள்ளத் தொளிர்வித்த வுன்னருளான்
மன்னியபே ரின்பவருள் வாழ்வெனக்கு வாய்த்ததே.

1063. ஏழை யெளியனேன் எட்டிரண்டுந் தேருத
மோழையேன் பொல்லாத மூர்க்கனேன் மோகவகப்
பாழிலே வீழ்ந்து பதைத்தே னிதயத்தில்
வாழிநீ சுத்தவருள் வாழ்வு மலர்த்தினையே.

1604. விண்மையா மோக விகற்பமனக் கற்பனைசெற்
றுண்மையா மூன்னி லொடுக்கியெனை யாண்டாயைத்
திண்மைசேர் நிட்டையாற் செவ்வனுபா சித்தலால்
வண்மைசேர் சுத்தவருள் வாழ்வடையப் பெற்றேனே.

## ௪௪. சிற்பர வாழ்வு

(கொச்சகக் கலிப்பா)

1605. நீதொன்று தொட்டே நிராமயமா வுள்ளத்தில்
யாதொன்ற வேதுமியை பின்றியே வுள்ளவுன்றன்
மீதன் பெனக்கு விசைத்தெழலாற் றன்னியல்பாச்
சீர்துன்று சுத்தவருட் சிற்பரவாழ் வுற்றதே.

1606. தமியனேன் வெம்பிறவிச் சாக்கடலில் வீழ்ந்தேற்
கமுதவாழ் வாக வகம்புக் கமர்ந்தாய்;
இமையமா வூன்றி யிருக்கின்றேன் சற்று
மிமையா தொளிர்நின் னியற்சிற் பதத்தே.

1607. சுத்தசிவ மாட்சி துலங்கவென் னுள்ளத்தில்
வித்தகமா மோன வெளிகாட்டி யாண்டவா
அத்தகநிற் கின்ற வருள்வாழ் வளித்தாய்பாற்
சித்தங் கரைந்தொழியச் சிற்பரமா நின்றேனே.

1608. நாயேனை யாண்டமெய்ஞ் ஞானவென் னுருயிர்க்கு
நீயே சொரூப நிலையாக நெஞ்சுறைத்தாய்
நேயானு பூதி நிரம்பநின் சிற்பதத்தில்
வாயாத சுத்தவருள் வாழ்வு துலங்கியதே.

குறிப்பு:- வாயாத - வாய்க்காத.

## ௪௫. கைவல்ய வாழ்வு

(வெண்பா)

1609. யாசிக் கிலேனென் றெவரையுமே நின்சொரூப
நேசக் கிளர்ச்சிசேர் நெஞ்சகத்தாற்—பாசக்
கலக்கமில்சற் போதவருட் கைவல்ய வாழ்வே
இலக்கிதமாப் பற்றிற் றெனக்கு.

1610. வேதவே தாந்த விழுப்பொருளா முன்சொரூபப்
பாதமே சற்கதியாப் பற்றலுற்ற பாக்கியத்தாற்
பேதமில்சுத் தாத்துவிதப் பெற்றிசேர் கைவல்ய
போதமென் னுள்ளத்திற் பூரணமாப் பொங்கியதே.

1611. ஊனமற்ற வுன்னு னுதார சொரூபவருள்
வானமார் கைவல்ய வாழ்வு தழைக்கலுற்றேன்
தீனனு மென்பாற் றிருக்கடைக்கண் பாலித்து
மோனமா வென்னகத்து மூண்ட வருட்கடலே.

1612. பொற்புறுசீர் மோனனு பூதிப் புலந்துலங்கக்
கற்பனைதீர் கைவல்யக் காட்சியளித் தாண்டவா!
தற்பரமா வுள்ள நின் றுளேயென் னுருயிர்க்குச்
சிற்பரவீ டாகத் தெளிய விளங்கியதே.

1613. ஏமமற்றே னுள்ளத் திறைவநீ தேற்றியமெய்ச்
சேமநிதி யானசிவச் செம்பொருளா லுன்னடியேன்
காமனைக ளெல்லாங் கழன்றொழியக் கைவல்யத்
தேமதுர வாழ்வு திளைக்கலுற்றேன் சிற்பதத்தே.

**சகூ. ஐக்கியம் கூறல்**

(குறள்)

1614. உன்னினும்வே றல்லே னுடையாய்நான் ஆங்கேநீ
என்னினும்வே றல்லா யிரண்டு.

1615. உன்னையன்றி நான்மற் றுளேனல்லேன்; ஆங்கேமற்
றென்னையன்றி நீயு மிலாய்.

1616. என்னுவி யாக விறைவா வுனையேநான்
உன்னு லுணர்ந்தே னுளத்து.

(வெண்பா)

1617. நீயேநா னுக நிகழ்சொருப ஞானமளித்
தாயே யடியேனுக் காண்டவா—நாயேன்
அகப்பே யகன்றொளிர்சுத் தான்மீய வாழ்வால்
உகப்பேன்யா னுக வுனே.

குறிப்பு:- நாயேன் – உன் னடிநாய் ஆன அடியேன்.
ஆன்மீய வாழ்வு – ஆன்மானுபவ வாழ்வு.

1618 அன்னிய னல்லே னடியே னிதயத்து
டென்னுருவா நீயே யியல்கின்றாய்—முன்னிதனை
யோரா துழன்றநா னுண்மையுணர்ந் துன்னருளாற்
சீரா வமர்ந்தேன் *சிவத்து.

*சிவத்து – உன் பரமார்த்த சொரூபமான சிவத்தில்.

1619. உன்னிடமே யென்னிதயத் துள்ளமுழு நம்பிக்கை
யென்னிடமோர் சற்றுமிலை யெம்பெருமா—னென்னை
நீயேயென் னுண்மைநா ஞென நிஜானுபவம் [னிலோ
பேயேனு மிந்நான் பிழை.

1620. பிழைபட் டொழியவகப் பேயகந்தை யென்பா
லிழைவதுநீ யேயா மெனவே—யிழைவதுநா
னுன்னையே யொன்ற வொளிர்சொருப மானவவ்
வுன்னையன்றி நானெங் குளேன்.

1621. ஒன்றான வுண்மையா முன்னைத் தவிரமற்
றென்று மிரண்டா வில்லைநான்—என்றஞா
னனுபவ நல்கியவென் னம்மையப்பா தாயன்றித்
தானியல்சூ லுண்டோ தனி.

1622. என்னிலுன்னை நான்மற் றிரண்டுபட நோக்காது
மன்னியொரு தன்மயமா வாழவே—என்னிதயத்
தான்றிநின்ற நின்சொருப வுண்மையா மென்னுருவை
மான்றொழிவே னல்லேன் மனத்து.

1623. அத்துவித மானவே கான்ம சொரூபவருட்
புத்தமுத போதமாப் பொங்கிறைவ—மெய்த்த
வுனையன்றி நான்வே றுளேனல்லேன் காணி
லெனையன்றி நீவே றிலை.

1624. என்னறிவு தன்னின்மற் றெந்நினைவு மின்றியுளத்
துன்னுருவே யாக வொளிர்தலால்—உன்னுருவாஞ்
சிற்பரமே யாகத் தெளிந்தசிவ பூரணம்விட்
டற்பமு(ம்)நா னன்னியனல் லேன்.

(கொச்சகக் கலிப்பா)

1625. உன்னை நினையு முணர்வலான் மற்றையுணர்
வென்னிலெழா துள்ளத் தியற்பரமா வுற்றொளிர்வோய்
பொன்னையன்றி யில்லாப்பல் பொன்னணிபோல் யாவு
முன்னையன்றி யின்மை யுணர்ந்தே னருளாலே. [மோ

1626. அருமைசே ரான்ம சொரூபா வுடையாய்க்
கிருமைதீர் மெய்யன் பிதயத் தலர்ந்தேன்
பெருமைசேர் சுத்தப் பிரம்மானு பூதி
தருமையா வுன்சந் தரிசனத் தாலே.

1627. உன்னைநான் கண்டே னுனக்கேநா னட்பட்டேன்;
உன்னையே யென்னு ருயிராகப் போற்றலுற்றேன்;
உன்னையே யன்றிவே றொன்றுமில்சுத் தாத்துவிதத்
தன்னியலே யென்னியலாச் சாட்சாற் கரித்தேனே.

1628. அன்னியமொன் றற்ற வருட்சிற் பரவெளியா
முன்னை யடைந்த வுறுதிசேர் புண்ணியத்தா
லென்னுருவா நீயே யிருந்தொளிர்தல் கண்டுகொண்
டுன்னையே நானு வுவக்கலுற்றே னம்மா ன. [டாங்

1629. கடையனு மென்னைக் கடைக்கணித் தாண்டாய்க்
குடையவா நான்முற் றுரியேனாய் உன்னை
யிடையறு தெண்ணு மியல்பா லிதயத்
தடியனே னுற்றே னடிகள் வடிவே.

1630. மூடியபாழ் மோக முனைப்பறநா னுன்னருளை
நாடி நமோரம ணைய வெனவணங்கிப்
பீடிலா வந்தவகைப் பேயை யருள்வாளாற்
சாடியே நானுன்னைச் சாட்சாத் கரித்தேனே.

1631. நீயேநா னாகை நிகழ்சொருப மெய்யுணர்வு
நாயேற் குதவியமெய்ஞ் ஞான தயாபரா!
சாயாத சுத்தசிவ சாட்சாற்கா ரானுபவந்
தோயாநின் றுன்னடிக்கீழ்ச் சும்மாவாழ் கின்றேனே.

குறிப்பு:—சும்மா வாழ்தல்—ஜீவபோதச் சேஷ்டையறக் கிருத கிருத்தியானாக வாழ்தல்.

1632. வண்மைசேர் கைவல்ய வாழ்வொளிர வென்னகத்து
நுண்மைசே ருன்னருட்கண் ணேக்கமளித் தாண்டவா
கண்மயலா லேங்கிமனக் கற்பனேயின் மாழ்கியநா [யே
னுண்மைசே ருன்சொருபத் தூன்றலுற்றேன் கண்டா

1633. உன்னேயன்றி மற்றெதுவு முண்மையிலே யில்லதா
வென்னுளே யுன்மெய் யிலகுவித்த சிற்பரா !
துன்னருமெய்ஞ் ஞான சொரூபானு பூதியெழ
வுன்னுருவே யென்னுருவா வோர்ந்து தரித்தேனே.

1634. சித்தம் பரவசமாச் சேர்தலா லுன்னடிக்கீழ்ப்
புத்தம் புதியவருட் போதானு பூதிபெற்று
மத்தனே னுன்புகழை வாழ்த்தவுளத் தூறியது
நித்தமெனக் குன்னெடுமெய்ந் நேய வொருப்பாடே.

1635. உன்னருளா லத்துவித வுண்மை யொளிர்தலாற்
பின்னமா நானுன்னேப் பேணேன் பெரும்பிரான் ;
உன்னிலே நானுமற் றென்னிலே நீயுமோர்
வன்னமா வாழ்சொருப மாட்சியொளிர் வுற்றதே.

1636. உன்னேடென் னுருயிருக் குள்ள தொடர்பினேத்தென்
றென்ன விசைக்க வியலுமோ வெம்பெருமான் !
பின்னியசுத் தாத்துவிதப் பெட்பான வுண்மையா
லுன்னினின் றென்னேயா ரும்பிரிக்க வொண்ணுதே.

1637. உய்வுள்ளி யுற்ற வுழையேனுக் குன்சொருபக்
கைவல் லியமெய்க் கழல்காட்டி யாட்கொண்டாய் ;
பொய்யுளே மாழ்கிப் புலம்பா தருளமுதக்
கைவள்ள மாகக் கலந்தாய் கருணேயன்னே.

1638. துன்னியமெய்ஞ் ஞான சொரூப குருநாதா
உன்னடியே தஞ்சமா வுற்றேற்குன் கண்ணேக்கால்
அன்னியமன் றுக வருள்விளங்கப் பெற்றவகத்
துன்னியலோ டென்னியல்வாழ் வொன்று
வொளிர்ந்ததே.

1639. இன்னருளா லுள்ளம்புக் கென்னையினி தாண்டவா
உன்னுபதே சத்திறத்தா லுள்ளாழ்ந் துசாவினேற்
குன்னியலே யென்னியலா வுற்ற வனுபவத்தாற்
பின்னமிலா முற்றமுழுப் பெற்றிசேர் வுற்றதே.

## சஉ. ஞானநுபூதி

(வெண்பா)

1640. உள்ளத் தொளிர்ந்தநின் னுண்மையைநா னேரமனக்
கள்ளமற மாற்றிக் கழற்கணே—தெள்ளத்
தெளிந்தசிவ நேசத் திறமளித்தாய் ஞான
வளந்ததும்பிற் றென்றன் மனத்து.

1641. வாலறிவா லென்னை மடமகற்றி யாண்டவருட்
கோலவொளிப் பாத குருநாதா—மாலகல்சற்
போதானு பூதியகம் பொங்கலாற் பொங்கியது
நீதா னெலாமா நிலை.

1642. உன்னைநா னண்மி யொழுகலா லுன்னடிக்கீழ்
நன்னயமெய்ஞ் ஞானநிலை நண்ணலுற்றே னண்டவா
உன்னடியே னுக்கோ ருயர்பெருமை யுண்டாக
வென்னே யருட்பே றிவனடைந்த தென்னவே.

குறிப்பு:—என்ன நண்ணலுற்றேன் எனவினையயும்; என்ன—என்று உலகோர் வியக்க.

1643. தெளிவான சுத்த சிவத்துவஞ்சேர் போத
வெளியாக வென்னை விளக்கியநின் னுண்மை
யளியா லுயிர்தழைத்தே னண்டவா பொய்க்கா
ரிளிவரல்சேர் பாச மெதிரக்கா ணதே.

குறிப்பு:—போதவெளி - அருள்வெளி, பரவெளி.

1644. தெழிக்கவே தக்க செடத்தையே நானென்
றிழுக்கினே னுள்ளத் தியற்பரங் காணச்
செழிக்கவே நோக்கிய செங்கண ! தாட்கீழ்
விழிக்கலுற்றேன் சுத்த வெறுவெளியாத் தானே.

1645. கோட்டமுற்ற புன்புலப்பாழ்ங் கொந்தளிப்பின் மாழ்
நாட்டமென் னுள்ளத்து நண்ணலுற வாண்டவா! [காது
கேட்டலரு நுட்பவொட்பக் கேள்விநின்பாற் கேட்டலால்
வேட்டலரு மெய்ஞ்ஞான வேள்விநான் வேட்டேனே.

1646. இன்பமழை பெய்யு மியற்சிற் பரமுகிலா
முன்பதத்து வாழ்தலா லுள்ளக் கவலொழிந்தேன் ;
அன்புசிவ மானஞா னனுபவப் பேறளித்த
நன்பரம நின்னருட்சீர் ஞாலமெங்கும் பொங்கவே.

1647. உன்னை யலாம லுலகெனவொன் றில்லையென்ற
அன்னபர மார்த்தஞா னனுபவம் பாலித்தாய் ;
என்னுருவா வுள்ளத் தினிதுவிளங் கொட்பநுட்பப்
பொன்னடியே சுத்தவருட் பூரணமாத் தேர்ந்தேனே.

1648. கடலே யனையவருட் கண்ணோக்கால் வல்வெந்
திடராமென் னுள்ளஞ் செழிக்கநீர் பாய்ச்சி
அடமான நானெனும்பா ழாசையறச் செற்றுத்
திடஞான போகந் திளைக்கவிளைத் தாயே.

1649. என்பந்த பாச மிகப்பநின் சீபாத
சம்பந்தஞ் செய்வித்த சற்குருநா தாசிவப்பே
ரின்பருளி யென்னை யிரண்டறவாழ் வித்தநின்மெய்
யன்புசிவ மானஞா னனுபவ மார்ந்ததே.

1650. தான்றோன்றி யான தலைவாநா னிவ்வுலகத்
தேன்றோன்றி னேனென் றினைந்து வருந்தாது
வான்றனே யென்னுருவா மல்குஞா னனுபவத்
தூன்றுநின் றென்னை யுயர்பதத்திற் சேர்த்தாயே.

1651. என்னையா ளாக விறைவாநீ யேற்றுக்கொண்
டன்னையினு மிக்கமெய் யன்பா லருளியதால்
உன்னடிக்கீ ழென்னுயிருக் கூதியமா வெய்தியது
நன்னயமார் சுத்தமெய்ஞ் ஞானனு பூதியே.

1652. உன்னருளா லுன்னை யுணர்ந்ததன்றி யாண்டவா,
என்னிருள்சேர் புன்மதியால் யானுனையெவ் வாறறி
துன்னியமோ காணவப்பொய்ச் சூனியத்திற் [வேன்?
[பாழ்த்தேற்கு
நன்னயமார் சுத்தமெய்ஞ் ஞானவெளி காட்டினையே.

1653. நாணுக வுன்னை நயந்தேனே சுத்தவருள்
வானு வென்னைநீ வளம்பட நன் காண்டுகொண்டாய்
ஆனுத சுத்தனு னுனுபவத் தாலகத்துத்
தானேதா னுகத் தழைத்தொளிரு மாற்றுலே.

1654. உன்னையே யன்றியெனக் குற்ரு ரொருவரிலர்
என்னவே முற்றமுற்ற யானுன்னையே தஞ்சமுற்றுங்
குன்னருளா லுள்ளத் தொளிர்ந்ததுசுத் தாத்துவித
நன்னயமார் மோனமெய்ஞ் ஞானுனு பூதியே.

1655. குன்ருத மோனக் குலாச்சேர் குருபரா!
உன்ரு ளடைந்தேனுக் குன்சோரூப வீட்சணத்தாற்
பொன்ருத சுத்தவருட் பூரணமாப் பொங்கியது
நன்ரு வொளிர்சொருப ஞானுனு பூதியே.

1656. உன்னருளா லென்னையுணர்ந் துன்னுருவே யென்னு [ருவாத்
துன்னருமெய்ஞ் ஞான சொரூபானு பூதிபெற்றேன்;
பன்னருநின் சுத்தவருட் பார்வையென்மேல் வீசலுற்ற
வுன்னருமை யெண்ணியெண்ணி யுள்ளமுவக் கின்றேனே

1657. தன்னைத் தவிரமற் றெல்லாந் தணந்தொழிய
வென்னையுன் ளேடிதயத் தேற்றுக்கொண் டாண்டவா
பின்னமில்பே ரின்பப் பெருவெளியாப் பொங்கியது
நன்னர்த் தெளிந்தமெய்ஞ் ஞானுனு பூதியே.

1658. உன்ருளே தாரகமா வுன்னை யுபாசித்தேற்
கொன்ருக வுள்ளத் தொளிர்சொருபச் சிற்பதத்து
நன்ருன மோனமெய்ஞ் ஞானுனு பூதியாற்
பொன்ருத சுத்தவருட் பூரணவாழ் வுற்றதே.

1659. உன்பதமே தஞ்சமா வுற்றடைந்த நாயேனுக்
கன்புருவா வென்னகம்புக் காண்டாய்நீ கூரருளாற்
றுன்பமில்பே ரின்பஞ் சுரக்கவுளத் தூறியது
நன்பதவாழ் வானசிவ ஞானுனு பூதியே.

1660. வியத்தக்க சான்றோய்நின் மெய்ப்பதத்தில் யானன்
பியற்றப் பெறலா லிதயத் தியல்பா
நயத்தக்க சுத்தமெய்ஞ் ஞானனு பூதி
முயற்றியற்றே நின்றிருமுன் முற்றலுற் றேனே.

1661. ஆதார மாக வகத்தகமா வுற்றொளிர்மெய்ந்
நீதா ரகமான நிண்ணயத்தாற் சிச்சடப்பொய்ப்
பேதாடு வஞ்சவகப் பேயறிவற் றுன்றவருட்
போதானு பூதிப் புலங்கிளரப் பொங்கியதே.

1662. சிற்பரமே யாவென்னைத் தேற்றியசற் போதவருட்
கற்பகமே நானுன்மெய்க் கைவல்யங் கண்டுகொண்
[டேன்
தற்பரவாழ் வாகத் தழைத்ததுமெய்ஞ் ஞானநிட்டை
பொற்ப விளங்குசிவ பூரணமாம் பொற்பதத்தே.

1663. திட்டியே சிட்டியாத் தேருது சுற்றலுற்ற
பட்டிமனப் பான்மையறப் பற்றியது மெய்ஞ்ஞான
நிட்டையென் னுள்ளத்து நின்றவருட் பார்வையால்
வெட்டவெளி யாக விளங்கு சொரூபனே.

1664. இருக்கின்றே னென்னு மியல்விளக்கஞ் சான்ற
வருக்கனு வாணவஞ்செற் றுண்டவா! உன்னு
லிருக்கின்றே னுன்னுருவே யென்னுருவா நன்கு
தரிக்கலுற்ற ஞான சமாதிப் பதத்தே.

## சஅ. அத்துவிதம்

(கொச்சகக் கலிப்பா)

1665. உன்னலால் யானுமிலேன் உண்மை யுணர்ந்தபின்மற்
றென்னலால் நீயுமிலாய் என்றுநான் கண்டதனுல்
துன்னுமா பாசத்திற் றேற்றினும்பல் பொய்த்துவிதம்
தன்னலால் யாதுமிலாத் தன்மைமெய்த் தன்மையே.

1666. ஓரானொருபே ரத்துவித வுண்மையா முன்னின்
ஓரானொருமற் றேதுமின்மை யுன்னருளா லோர்ந்தேன்
ஓரானொருநீ யாநா னுளத்தொடுங்கி நிற்கை
பிரானுனக்குத் தக்க பெருவணக்க மாமே.

1667. தன்னொடு மென்னைத் தகவுறநன் காண்டுகொண்ட
வுன்னோ டொருமையுணர் வுள்ளமெழப் பொங்கலாற்
பின்னோட நானெனும்பொய்ப் பேயுணர்வு நீயென்னின்
முன்னே முழுமுதலா வென்றுமொளிர் கின்றாயே.

1668. என்றேனு மென்னை யிகவாத வுன்னியல்யா
னின்றே யறிந்தேன் இதயத் தியற்பரமா
நன்றே யொளிர் சொரூப ஞானனு பூதியா
லொன்றேயா வென்னை யுணர்வித்த வொள்ளியனே.

1669. அண்ணா லடியேனை யாண்டவா நின்னுருவை
யெண்ணலோ விந்தை! இதயத்தே சுத்தவருள்
விண்ணா விளங்குறுநின் வித்தகசுத் தாத்துவிதத்
தெண்ணுவோ னற்றெளிர்வ தேகபரி பூரணமே.

1670. உன்னையே யன்றி யுறுதிவே றில்லையெனக்
கென்னவே நாயே னிதயத் தியற்பரமாத்
துன்னு துரீய சொரூப சுயஞ்சோதீ!
என்னிலே யுன்னை யிரண்டறக்காண் கின்றேனே.

## சுக. சிவாத்துவித மடைதல்

(கொச்சகக் கலிப்பா)

1671. அறிவே வடிவா வகத்தே யமர்ந்த
விறைவா வுனை யன்றி யில்லே னடியேன்;
பிறிவேது மற்ற *பிரம்ம சொரூபச்
செறிவே சிவாத்துவிதச் சீர்மைதேர்ந் தேனே.

*பிரம்ம சொரூபச் செறிவே என்பது விளி.

1672. தற்பரமா வுள்ள சதாசிவா! சந்ததமுன்
னற்புதச்செம் பொன்னடிக்கே யாட்படலாற் பொய்ம்
கற்பனையி னின்று கழன்றடியேன் கைவல்யச் [மாயக்
சிற்பரமா வுள்ள சிவத்துவஞ்சார் வுற்றேனே.

1673. நித்தமா முண்மை நிலைகாட்டி யாண்டவருள்
வித்தகா! நானுன்னின் வேறல்லாத் தன்மைகண்டேன்
சுத்தமா மந்தத் துரீயசொரூ பானுபவப்
புத்தமுத வாழ்வுசிவ பூரணமாப் பொங்கியதே.

1674. வெங்களவார் மாயா விலாசச் சிறையினின்று
மங்களமா வுள்ளசிவ மாண்பதச்சீர் வாழ்வுறநன்
கெங்களைநீ யாண்ட வியைபா லடியோங்கள்
பொங்குசிவ பூரணத்திற் பொற்புறவாழ் கின்றோமே.

1675. அற்புதமா வுள்ள வருட்பிரான்! உன்சொருபச்
சிற்பதமென் னுள்ளத்திற் சேர்தலால் ஆணவப்பாழ்ங்
கற்பனைதீர் சுத்தவருட் கைவல்ய மாட்சிசேர்
பொற்புறுவாழ் வானசிவ பூரணம்பொங் குற்றதே.

1676. தாகமா வுன்னடியைச் சார்ந்தேன் மகிழவகத்
தேக சொரூப வியல்பா விளங்கலுற்றாய்;
ஆகமக மென்றபா ழாணவமற் றுன்றவகம்
*போகமார் சுத்தசிவ பூமியாப் பொங்கியதே.

*போகம் – சற்போகம், சிவபோகம்.

1677. சுத்தமா வுள்ள சொரூபானு பூதிவளர்
முத்தியென் னுள்ளத்து மூண்டொளிரக் கண்டவருள்
வித்தகா! வுன்னால் விளங்க நுகர்தலுற்றேன்
புத்தமுத மாகவகம் பொங்குசிவ போகமே.

1678. சுத்த வறிவுத் துலக்கத்தா லுள்ளத்து
மத்தமனக் கற்பனையை மாற்றியவென் னாண்டவா!
புத்தமுத மானசிவ போகம் பொருந்தவுளத்
தத்தகநிற் கின்றே னடிக்கீ ழடியேனே.

1679. மத்தனே னுள்ளத்து மாண்புறப்புக் காண்டுகொண்ட
வத்தகவே மோன வருட்பதங்காட் டிக்கொடுத்தாய்;
புத்தமுத வாழ்வாகப் பொங்குசிவ போகவுனர்
வெத்தனே னுள்ளத் தியல்பா வெழுந்ததே.

1680. யானற்ற தன்மெய் யியலறிவே யென்னகத்து
மோனப் பொருளாக முற்றுவித்த வாண்டவா!
ஈனக் கலக்கமென் றென்றுமற்ற சுத்தவருள்
வானப் பதவொளியால் வாழ்வுசிவ மானதே.

1681. அம்மானே நானுன் னடிபணிந்த பாக்கியத்தாற்
பொய்ம்மா னுைகாப் புரணவருட் சிற்பதத்திற்
செம்மாக்க வாழ்கின்றேன் சித்தஞ் சிவமாகச்
சும்மா துலங்கு சொரூபானு பூதிபெற்றே.

1682. சிற்பரமா வென்னைத் தெளிவித்த சுத்தவருட்
கற்பகமே! நானெனும்பாழ்ங் காரா ணவமிடிதீர்ந்
தற்பனே னுன்னால் அனந்த சிவாம்புதியாப்
பொற்புறவாழ் கின்றேன் புடித்திரய பேதமற்றே.

1683. மரமா வளர்ந்த மனத்தேன் அருளாற்
*பரமா வுனையோர்ந்து பற்றினேன்; உள்ளத்
துரமான வுண்மை யுணர்வொளியால் முற்றத்
திரமான சுத்த சிவத்துவஞ்சேர்ந் தேனே.
*பரமா - பரமாக.

1684. உள்ளத் தியல்பா வொளிர்தலுற்ற வுன்னருளாற்
கள்ள மனைமயப்பொய்க் கற்பனை பேதமறத்
தெள்ளத் தெளிந்த சிவானுபவ வாழ்வெனக்கு
வெள்ளப்பே ரின்ப வெளியுருவா மேவியதே.

1685. எம்பெருமா னென விறைவா நா னுன்னையன்றிச்
செம்பரமா மற்றெதுவுந் தேர்கிலேன்; கற்பனையா
விம்பரும்ப ரெல்லா மிகந்தொழிய வுன்பதத்திற்
செம்பரவாழ் வான சிவானுபவந் துன்றியதே.

## ௫௦. பரந்தாமம்

(வெண்பா)

1686. கொழுத்த வவிச்சைக் குலங்கெட் டுடையத்
தழைத்தவருட் பார்வைநீ தந்தாய்—எழுத்தறியா
மூடக் கசடனேன் மோனப் பரந்தாம
வீடெளிதிற் கண்டுகொண் டேன்.

(கொச்சகக் கலிப்பா)

1687. காம வெகுளிமயக் கங்க ளறக்கெடுக்குஞ்
சேமவுணர் வுள்ளத்திற் சேர்த்தென்னை யாண்டவருட்
கோமளமெய்ஞ் ஞான குருபரா மிக்கபரந்
தாமமுன் பாதத் தலத்திற்சார் வுற்றேனே.

## ௧௧. முக்தி

(கொச்சகக் கலிப்பா)

1688. செப்பமா மோனவருட் செல்வமளித் தாண்டுகொண்ட
வப்பனே நானுன் னடிக்கீ ழுறைதலாற்
கற்பனை மோகக் கலக்கமென் றென்றுமற்ற
சிற்பரமா முத்தி செழிக்கத் திளைத்தேனே.

1689. நீக்கமற்ற வுண்மை நிறைவா மொளிவெளியாத்
தாக்கற் றியல்சொருபத் தத்துவா! உன்னருளாற்
போக்குவர வற்றவருட் பூரணமோ னனுபவ
மோக்கமே யென்னுருவா முற்றியதுன் சிற்பதத்தே.

1690. ஊனமொன் றில்லை யுடையாய் உனையடைந்த
தீனனேன் வாழ்வுசிவச் சிற்பரமாப் பொங்கலால்;
மோனஞா னனுபவ முத்தித் துலக்கவியல்
வானமே யாக மலர்ந்ததக மாட்சியே.

1691. குருவடிவா வந்தவருட் கோமானுன் செல்வத்
திருவடியை யென்றுநான் சேவித்தேன் அன்றே
மருவு பிறப்பிறப்பு மாற்றியே சொந்தப்
*பெருவடிவா முத்திநலப் பேறுபெற்றுய்ந் தேனே.

*பெருவடிவு - பிரம்ம சொரூபம்.

1692. நேரிதா வுள்ளத்து நீபேநா னகவிளங்
கோரியல்சா லுண்மை யுணர்வளித்தாட் கொண்டஞா
னரியனை முன்னடியே யற்புதமோ னனுபவ
வீரியஞ்சால் வாழ்வா விமுத்திசித் தித்ததே.

1693. கூர்ந்தநின் னேக்காற் குருபரா சூனியப்பாழ்
தூர்ந்தொழிய முற்றத் துரீய வருள்வெளியா
ஆர்ந்த சொரூபஞா னனுபவத் தாலகத்திற்
சார்ந்த தெனக்குள் சதாமுத்தித் தன்மையே.

குறிப்பு:- அருள்வெளியாத் தூர்ந்தொழிய எனவியையும்.

1694. ஆண்டவனை நீயே யடியேன் சொரூபமா
வீண்ட வியல்வதுநின் னின்னருளாற் றேர்ந்தேற்கு
மூண்டமோ னனுபவ முத்திப் பெருவாழ்வு
வேண்டவே றில்லா விசுத்தப் பரவெளியே.

1695. தித்தியா நின்ற திருப்பாத சாதனையாற்
புத்தியிலே சுத்தசிவ போகமெழத் தூண்டியவா!
மத்தனே னுருயிர்க்கு வன்பிறவித் துன்பமற
முத்தியா மூண்டதுநின் மோனவருட் பார்வையே.

1696. கற்பனைதீ ருண்மைக் கழல்காட்டி யுள்ளத்திற்
சிற்பரமா நாளுஞ் சிறக்கலுற்ற வாண்டவா!
தற்பரவாழ் வான சதாமுத்தி கண்டுகொண்டே
னற்புதமா மோன வருட்சிற் பதத்திலே.

1697. கற்பனைதீ ருண்மைக் கடவுளா முன்னடியிற்
றற்பரவாழ் வான சதாமுத்தி கண்டுகொண்டேன்
அற்புதமா மோன வருள்வெளியா வுள்ளம்புக்
கற்பனே னுக்கோ ரரணாக வுள்ளோயே.

1698. அற்பனே னுன வடியனே னுன்னருளாற்
கற்பனையா வெல்லாங் கழிந்தொழியக் கைவல்யச்
சிற்பரமா வென்னுட் சிறக்கவிளங் குன்பதத்திற்
றற்பரவாழ் வான சதாமுத்தி சார்ந்தேனே.

1699. பந்தமுத்தி யற்றவருட் பாரவெளி யானவுன்னைச்
சொந்த சொரூபமாத் துய்க்க வருளியவா!
அந்தமில்பே ரின்ப வருட்கடலா முன்சொருபச்
சந்தமுற்ற வாழ்வு சதாமுத்தி யானதே.

## ௫௨. என்னுயிர்க் குறுதி

(கொச்சகக் கலிப்பா)

1700. வன்பாலே மாழ்கியபுன் மாய மயக்கமனத்
துன்போடச் செற்ற சொரூபப் பரஞ்சோதீ
அன்பாலே யென்னையினி தாண்ட வருட்கடலா
முன்பாலே யாயிற் றுறுதியென் னுருயிர்க்கே.

1701. தன்னிலே தானுத் தழைத்தவருட் சிற்பரமா
முன்னிலே நானென் னுயிர்க்குறுதி கண்டுகொண்
என்னிலே நாளு மிருப்புணர்வு மாத்திரமாத் [டேன்
துன்னுமே கான்ம சொரூப விறையோனே.

1702. உனையே யலாதென் னுயிர்க்குறுதி யில்லை
யெனவேநா னுன்னை யிறுகப் பிடித்தேன்
தனியான சுத்தசிவ தத்துவமாத் தன்னிற்
பினையாதும் பேதமற்ற பேரொளிப்பெம் மானே.

1703. ஆதனேன் பாழி லமிழ்ந்தொழியா தான்றவருட்
போத சொரூபமாப் புந்தியிற்புக் காண்டவா
காதலா வுன்னைக் கருதிநா னுன்றிருப்பே
ரோதலா லுற்றே னுறுதியென் னுருயிர்க்கே.

### ௩௩. இகமே பரமாயிற்று

(கொச்சகக் கலிப்பா)

1704. கடந்தபர மார்த்தக் கடவுளே நின்மெய்
தொடர்ந்தென் னகத்தே சொரூபமாப் பொங்க
நடங்குயிற்று கின்றநின்மெய்ஞ் ஞான விலாசம்
படர்ந்திவ் வுலகு பரவெளியா யிற்றே.

1705. காண்ட லருசொருபக் கண்ணுர் கழல்காட்டி
யாண்ட பிரானே யடியேனுக் குன்னடியில்
வேண்டவொன் றில்லா விசுத்தவருட் சிற்பரவாழ்
வீண்டலா லுள்ளத் திகம்பரமாத் துன்றியதே.

### ௩௪. பிறவிப்பயன்

(கொச்சகக் கலிப்பா)

1706. வாணுள்வீ ணுக வதைப்பட் டழுங்காது
மாணு வகந்தை மணங்கெடச்செற் றுண்டவுனக்
கூணு வொழிந்தாங் குபசாந்தி துன்றவுளத்
தாணுப் பிறந்தே னடைந்தே னரும்பயனே.

1707. நன்றே பிழைகளோ நண்ணு வதீதசிவத்
தென்றுமோர் பெற்றித்தா மென்னியல்யான் காண்குற [லால்
என்றேநா னுன்னைத் தரிசித்தே னெம்பெருமான்
அன்றே பிறவிப் பெரும்பயன்யா னுர்ந்தேனே.

## ௫௫. அருட்பர சாம்ராச்சியம் அடைதல்

(வெண்பா)

1708. அன்றே யடியேனை யாண்டுகொண்ட ஞானவருட்
குன்றேசொ ரூபசிவக் கோமளமே—ஒன்றான
மோனகதி கண்டேன் முழுமுதலாஞ் சிற்பதத்தில்
யானகதி யல்லே னினி.

1709. அன்னதா லுன்னை யடிபணிந்த நாயேனுக்
கென்னகுறை தானுமினி யில்லையே—வன்னமணிச்
சிங்கா தனமாச் சிறந்த வுளத்தவிசில்
மங்கா தமர்ந்தேன் மகிழ்ந்து.

(கொச்சகக் கலிப்பா)

1710. தன்னையே யல்லாமற் சற்றும்வே றில்லாத
வுன்னையே யென்னுருவா வுன்னருளா லுற்றேனுக்
கன்னியந்தோன் றாத வருட்பரசாம் ராச்சியவாழ்
வென்னியல்பா வுள்ளத் திடைவிடா துற்றதே.

1711. சிந்தா குலமற்ற சித்தோப சாந்தமகிழ்
எந்தா யுனதருளா லெய்தித் திளைக்குமுளத்
தந்தமில்பே ரின்ப வருட்பரசாம் ராச்சியம்என்
சொந்தவியல் பாகத் துலங்க வமைந்ததே.

1712. அனைக்கேயு மிக்கநல் லாண்டவா வுள்ளத்
துனக்கேநா ளுட்பட் டொழுகலா லுற்றேன்
மனக்கேத மற்றபெரு வாழ்வான சுத்தத்
தனிக்கே வலசொருப சாம்ராச் சியமே.

## ௫௬. தவிசிட்டாய்

(கொச்சகக் கலிப்பா)

1713. நீயேநா னாக நிகழ்வித்த நின்னடியிற்
பேயேன்யா னென்னுமகப் பேய்த்தன்மை பேர்ந்தொழிந்
ஏயேநா யேனை யிதயச்செம் பொற்றவிசிற் [தேன்
*சாயேற வைத்தாய் சதாசிவமாத் தற்பரனே.

*சாய் – ஒளி, புகழ்

### கஎ. ஆராதிக்கின்றேன்

(வெண்பா)

1714. என்னையகத் தாண்ட விறைமையா லெம்பெருமா
னுன்னை நான் கண்டே னுயிர்க்குயிரா — உன்னைத்
தொழலே யெனது சொரூபமுன் செம்பொற்
கழலே யெனது கதி.

(கொச்சகக் கலிப்பா)

1715. புக்கே யுளத்திற் புரணமா நின்றுவிளங்
கக்கார மான வருட்சிற் பராவடியேன்
எக்கா லமுமென் னியல்பா வுனைப்பரவிச்
சொக்கா நின் றேனுன் சொரூபப் பதத்திலே.

1716. அள்ளூறு மாற்று லகத்தே சிவானந்தத்
தெள்ளாறு பாய்ச்சித் திருவருட்கண் ணோக்கத்தாற்
பிள்ளாத சுத்தப் பிரம்மமா வாண்டாயை
உள்ளாதே யுள்ளுகின்றே னெள்ளியபே ரம்மானே.

1717. விள்ளரிய வுண்மை விளக்கமா வாண்டவா
தெள்ளமுத மாகத் திளைத்தே சுவானுபவ
வெள்ளமா வென்னுள் விளைந்தநின் சிற்பதத்தை
யுள்ளலற வுள்ளுகின்றே னுள்ளுணர்வா லோவாதே.

1718. நோற்றிலே னுன்னருட்கண் ணோக்கா லிதயத்துத்
தேற்றியே சுத்தவருட் சிற்பதமாம் பொற்பதத்தைப்
போற்றியோ போற்றியெனப் போற்றியே யெப்பொழுது
மாற்றுகின்றேன் பூசையுனக் காண்டவா வீண்டவே.

1719. கள்ளமா மோகவகங் காரமற நானுனென்
றுள்ளமே யாக வொளிர்சொருபத் தெள்ளமுத
வெள்ளமாத் தாப விடாய்தணித்த வாண்டவா
உள்ளலற வுன்னருளை யுள்ளுகின்றே னோவாதே.

1720. சேற்றுலகப் பாழிற் சிதையவிடா தன்பர்பால்
வீற்றிருக் கின்றவருள் வித்தகா நானுன்னைப்
போற்றியோ போற்றியெனப் போற்றலா லுள்ளத்துத்
தேற்றினேன் சுத்தவருட் செல்வத் திருவடியே.

1721. பாழிலே யாழ்ந்து பசாசாக் கலங்கலுற்ற
வேழையேன் பாலிரங்கி யேற்றஞ்சால் சிற்சொருப
மாழை யெனக்கு மகிழ்ந்தளித்த நின்னருட்சீர்
வாழியோ வாழியென வாழ்த்திவாழ் கின்றேனே.

1722. சூதோர்வார் காணுத் துரியவருள் வாழ்வொளியால்
யாதோர் மனக்கவலை யின்ருக வென்னகத்து
மீதூர் சிவானுபவ வெள்ளமா வுள்ளாயை
ஆதரமெய் யன்புணர்வா லாராதிக் கின்றேனே.

1723. உன்னையே நம்பினே னுற்றதுணை வேறில்லேன்;
என்னை நின் ஞேக்கா லிதயத் தொளிவளரத்
துன்னியே சொந்த சொரூபமா நானுனென்
றன்னியமோ ராதஞா னுனுபவ மார்த்தாயே.

1724. சாந்தி யுணர்வே சதாசிவசற் போகமா
யாந்திளைக்க வுள்ளத் தெழுந்தருளி யாண்டவா!
மாய்ந்தவகங் கார மனத்தா லடிகளை நன்
கேய்ந்துபா சிக்கின்றே னெக்காலு மொக்கவே.

1725. சிற்பரவாழ் வாகத் தெளிந்த வனுபூதி
யற்பனே னுள்ளத் தருளியவென் ஞண்டவா!
தற்பரமா வென்னுட் டலைப்பட்ட நின்பதத்து
நிற்பதா லுன்னையென் னெஞ்சாரப் போற்றுவனே.

1726. முற்பிறப்பில் யாது முயன்றேனே நானறியேன்
கற்பனு பேதமொரு காலுமில்லாக் கைவல்யச்
சிற்பதத்தி லென்னைச் சிறைப்படுத்தி யாண்டபெருந்
தற்பரா நானுன்னைத் தன்மயமாப் போற்றுவனே.

1727. மோகமனக் கற்பனையான் மூடுண்ட வென்னறிவூ
டேக சொரூப வியற்சிற் பரந்துலக்கித்
தேகமகம் புத்தித் தெருமரலைச் சேதித்த
நீகடவு ளாக நிதம்பரவு கின்றேனே.

1728. தெரிய வொண்ணு த சிவக்கே வலமாய்ப்
பிரிய வொணுதவோ ரத்துவிதப் பெட்பால்
அரியாய் சொரூபமா வாண்டாய் பிரம்மப்
பெரியாய்நீ யே நானுப் பேணுகின் றேனே.

## ௫௮. தன்னியலுறுதல்

(கொச்சகக் கலிப்பா)

1729. தன்னை நான் விட்டாலுந் தானென்னை விட்டொழியா
உன்னை நா னுற்ற வுணர்வாலே யுள்ளத்திற்
பின்னியமா மோகவகப் பேய்முனைப்பாம் பாசமறத்
தன்னியலு வுள்ளேன் சதாமுத்தித் தன்மைகண்டே.

1730. என்னையே நானறியா வேழையேன் பாலிரங்கி
என்னுருயா தென்றிதயத் தென்னை யுசாவுவித்தாங்
குன்னுருவே யென்னுருவா வுய்த்துணர்வித் [தாண்டவுன்பாற்
றன்னியலு வாழ்வு தழைத்தேன்யா னற்றெழிந்தே.

1731. என்னை நா னுறென் றிதயத் துசாவுவித்தாய்க்
குன்னையே நானு வுணர்ந்தொழுகு மவ்வாற்றுல்
அன்னையினு மிக்க வருளுடையா யுன்னடிக்கீழ்த்
தன்னியலு வாழ்கின்றேன் சாந்தி சுகந்திளைத்தே.

## ௫௯. குறைவின்மை

(குறள்)

1732. உன்பொறுப்பே யல்லா லுடையாய் அடியேனுக்
கென்பொறுப்போ யாது மிலை.

1733. ஆண்டவவுன் னேடென்னை யைக்கியமாக் [கண்டவெனக்
கீண்டலெவன் சிந்தைக் குறை.

(கொச்சகக் கலிப்பா)

1734. என்னதுநா னற்றெழிய வென்னையினி [தாண்டுகொண்ட
வுன்னருளா லுள்ளத் தொளிர்சொருப வாழ்விலெனக்
கென்ன குறையுமிலை யெம்பெருமான் என்னதுண்மை
வன்ன வருள்வெளியா வைகலுற்ற வாற்றுலே.

1735. உன்னையே நம்பி யுறுதுணையாப் பற்றினேற்
கென்ன குறையு மிலாதபே ரின்பநிறை
வுன்னருளா லுற்றேன்; உளத்தூ டொளிர்சொருப
வன்னமன்றி யானெனவோர் வன்னமெனக் [கில்லேனே.

1736. அந்தகனுக் காளா வழிந்திடா துள்ளத்திற்
சொந்த சொரூபந் துலக்கியவா! உன்னடிக்கீ
ழந்தமில்பே ரின்ப வருள்வெளியா வாழ்கின்றேற்
கெந்தவிதத் தாலும்யா தோர்குறையு மில்லையே.

1737. அன்பருக்கா ளாக வடைவித்த வவ்வாற்று
லுன்பணிக்கே யென்னை யுறுவித்த வாண்டவா
நன்புலமாத் துன்றுமெய்ஞ் ஞானனு பூதியா
லுன்பதத்தோ டொன்றலுற்றேற் கொன்றுங்
[குறைவின்றே.

## ௯௰. சாந்தியுறல்

(வெண்பா)

1738. நின்னருளென் னெஞ்சகத்து நிற்றலா லாண்டவா
துன்னிருளு டுண்மையொளி தோன்றியதே—
[வன்னவொளிப்
பார்வையாற் பொய்ம்மாயப் பற்றெழிந்து நின்
சீர்மைசேர் சாந்திதிளைத் தேன். [சொருபச்

1739. என்னாலே யாது மியற்றற் கிலாமலெல்லாம்
நின்னாலே நேரா நிகழுமுண்மை — நின்னருளாற்
றேர்ந்தே னகந்தைச் செருக்கற் றுபசாந்தி
யார்ந்தே னருட்செம் பதத்து.

(கொச்சகக் கலிப்பா)

1740. மூழ்கா நின் றந்தந்தோ மோகமனக் கற்பனையின்
மாழ்கா தடியனேன் மாட்டிரங்கித் துங்கவருள்
வாழ்வா வகத்தே வழங்கியநின் சிற்பதத்திற்
பாழ்வா தனையழியப் பற்றியது சாந்தியே.

1741. விண்ணு வகத்தில் விளங்கு சொரூபவருட்
கண்ணனை வுன்னைநான் காணுதே கண்டுமகிழ்ந்
துண்ணு ரமுத வொளிப்பிழம்பா முன்னடியிற்
றண்ணு ரமைதி தழைத்தலுற்றே னம்மானே.

1742. சுத்தப் பரவெளியாத் தொக்கசிவக் கைவல்ய
முத்திப் பதமெனக்கு முற்றுவித்த வாண்டவா!
மத்தக் கலக்க மனக்கற் பனையறலாற்
புத்திக் கமுதமாப் பொங்கியது சாந்தியே.

1743. ஞானக் குறியாலே நானெனும்பொய் யாணவப்பா
ழீனப் பிழையறச்செற் றென்னையினி தாண்டவா!
மோனப் புலந்துலங்க முற்றியதுன் பொன்னடிக்கீழ்
வானப் பரசொருப வாழ்வான சாந்தியே.

1744. அதிட்ட வசத்தா லடியடைந்தேன் சற்றுஞ்
சதுட்டய சாதனஞ் சாராதேன்; கண்ணு
லதட்டியென் மோக வகப்பேயைச் செற்றுய்
பதட்டமில் சாந்திப் பதம்படைத் தேனே.

1745. அடியேன் றெருழுகுலமா வாகத் திலகும்
உடையாயுன் கண்ணொளியா லொட்பநுட்பங் [கண்டேன்
தடையாது மற்றபெருந் தற்பரவாழ் வுள்ளத்
தடைவா லடிக்கீ ழமைதியார்ந் தேனே.

குறிப்பு:- (ஆகம்) மனம், உள்ளம்.

1746. மெய்யான சுத்தவருள் வேட்கையா லுன்னைநினைந்
தையாவை யாவென் றரற்றலுற்றே னுள்ளத்திற்
பொய்யான மோகவகப் புன்கலக்கப் பூசலற,
செய்யாய் செழித்ததருட் சித்தோப சாந்தியே.

குறிப்பு:- செய்யாய் என்பது விளி.

1747. மோக வகப்பேய் முனைப்பறச்செற் றுள்ளுணர்வூ
டேக சொருபமா வேய்ந்த பரஞ்சோதி;
யோகவுணர் வூட்டியநின் னொள்விழியா லான்றசிவ
போகமார் சாந்திப் புணரியின்மூழ் குற்றேனே.

1748. ஆசை யகல வருள்வெளியா வுள்ளம்புக்
கீசனு முன்னடியில் யானொடுங்கக் கண்டாய்பாற்
பேச வொணுதவருட் பேரின்ப வாழ்வான
நேசமார் சாந்திநிலை நெஞ்சுருவப் பற்றியதே.

## ௯௧. அருட்பெருமிதம்

(வெண்பா)

1749. ஏலமிகமுற்ற வெளியையா யற்பனேன்
பாலமர்ந்த தெய்வவருட் பண்பாளா—சாலப்
பெரியோயை யென்னுட் பெறலா லடியேன்
பெரியேன் சிறியே னலேன்.

(கொச்சகக் கலிப்பா)

1750. பொங்குசிவ பூரணமாம் புண்ணியா வுன்னருளால்
எங்குமொளிர் நின்மெய் யியல்பறிந்தேன்; [சிச்சடப்பா
ழங்கமகம் புத்தியைச்செற் றுண்ட சொரூபவருட்
புங்கவநின் பொன்னடிக்கீழ்ப் பூரிக்க லுற்றேனே.

குறிப்பு :- அருளால் அறிந்தேன் என வியையும்.

1751. உன்னைத் தொழுவெற் குதவியவென் சென்னிக்கும்
உன்னைத் தொழுவெற் குதவியவென் ஞவுக்கும்
உன்னைத் தொழுவெற் குதவியவென் சிந்தைக்கும்
பன்னிப்பன் னிச்சொல்கின் றேனடியேன் பாராட்டே.

## ௯௨. இறைபணி

(கொச்சகக் கலிப்பா)

1752. எஞ்சியவெப் பைத்தியமு மெய்தா திதயத்து
நின்சொருபப் பைத்தியமா நிற்பித்த வாண்டவா
வஞ்ச வகப்பேய் வழக்கா றெழிந்தமையா
லென்செயலெல் லாமு மிறைபணியா வேய்ந்தவே.

1753. தொன்றுதொட் டுள்ள சொரூபமா வாண்டவா !
ஒன்றும் பரசிவ யோகவுணர் வுன்னருளால்
என்று மிதயத் தியல்வதா லூற்றுக
நின்றனடித் தொண்டு நிகழ்த்துவேன் பேதமற்றே.

## ௬௩. மோனம்

(கொச்சகக் கலிப்பா)

1754. எம்பிரா ஞனை விறைவா நா னுன்னடிக்கீழ்ச்
செம்பரவாழ் வான சிவானுபவந் துய்த்தலால்
உம்பரார் காணுவவ் வொட்பநுட்ப மோனநிலே
இம்பரே யுள்ளத் தியல்பா வியன்றதே.

1755. உள்ளதே போதுமென வுன்னருளா லுள்ளத்துத்
தெள்ளத் தெளிந்தேன் சிவத்துவமா மோனநிலே
அள்ளக் குறையா வருட்பெருவாழ் வாகவிளங்
கொள்ளியநின் னுண்மையுளத் தூன்றலுற்ற வாற்றுலே

1756. தன்னிலே தானுத் தழைத்தொளிர்மெய்த் தத்துவா!
என்னிலே யுன்னே யிரண்டறநான் போற்றுகின்றேற்
குன்னுருவென் னுள்ளே யொளிவெளியாப்
மன்னியது சுத்த மவுனு பூதியே. [பொங்கலான்

1757. ஊன வுலகப்பா ழோகையற வுள்ளத்து
ஞானவருட் பேரின்ப நாட்ட மெனக்கருளி
வானப் பரவெளியா வைகு சொரூபாநின்
மோனப் பரகதிநீ முற்றுவித்தாய் முன்னின்றே.

1758. அன்பு சுரக்க வடியேனுக் குன்பாற்பே
ரின்பநிதி யாக வெழுந்தருளி யுள்ளத்து
நன்பரமா மோன நடுநிலேகாட் டிக்கொடுத்தாய்;
என்பரமோ வன்றன்றவ் வேமப் பெருவாழ்வே.

1759. உன்னருளா லென்னே நா னுள்ளுணர்வா [லோர்ந்தாங்கே
என்னதுநா னென்னுமுணர் விற்றெழிய வென்னுரு [வாப்
பொன்னடியாம் போதவருட் பூரணமே பொங்கலாண்
மன்னியது வாழ்வா மவுன விலாசமே.

1760. கற்பனையை மாற்றிக் கடவுளியல் வாழ்வளித்த
சிற்பரா ! நானுன்னைச் சேவித்த நாண்முதலா,
அற்புதமா வுள்ளத் தவிர்சொருப சன்னிதியிற்
பொற்புறுமோ னுனுபவப் பூரிப்பால் வாழ்ந்தேனே.

1761. உன்னையே யன்றியெனக் குண்மை பிறிதில்லை
யென்ன வுணர்ந்தாங் கிதயத் தியற்பரமாத்
துன்னுமோ ளனுபவந் துய்த்தேன்சுத் தாத்துவித
வன்னமா வென்னுள் வளர்சொருபச் சிற்பரமே.

1762. பொற்புறுசீ பாதப் புகலடைந்த புண்ணியத்தால்
அற்புதமா நின்னடியே னரத் திளைக்கின்றேன்
சிற்பரவாழ் வாகத் தெளிந்தமோ னனுபவம்
கற்பனைதீர் சுத்தவருட் கைவல்ய பூமியிலே.

1763. உள்ளமே கோயிலா வுற்ருய் அருட்கூளுக்
கள்ளமனம் முற்றக் கழிந்தொளிர்மெய்க் காட்சியாற்
றள்ள வொணுத சதாசிவமோ னனுபவ
வெள்ளமா வுள்ளம் விளைந்ததுமீப் பொங்கவே.

குறிப்பு:- காட்சியால் விளைந்தது என வியையும்.

1764. பாதங் கதியாகப் பற்றினே னுள்ளத்து
நீதுங்க ஞான நிதியா நிறைதலால்,
ஆதங்க மற்ற வருட்பரமோ னனுபவச்
சீர்தங்கு வாழ்வு சிறக்க விளைந்ததே.

1765. வெளியே யுளமா விளங்கு சொரூபா
களிசே ரகப்பேய் கழன்றொழிய வுள்ளத்
தொளிர்தருநின் னுண்மை யுணர்வால் அடியே
னளையலுற்றே னற்புதமோ னனுபவ வாழ்வே.

1766. என்னப்ப னை விறைவாநீ யென்னுளிருந்
தென்னைப் பணித்தபடி யானியங்கு மெய்யுணர்வா
லுன்னிற் பதிந்தவுணர் வுன்னுருவே யாவுளத்திற்
பொன்றவொளிர் மோனனு பூதியையென் சொல்வதே.

1767. நானு ரெனவகத்து நாடுவித்த வுன்னருளாற்
றூனே பரமார்த்த தத்துவமா நான்றேறத்
தேனே யனையவருட் சித்துவமாம் புத்தமுத
மோனனு பூதி முகக்க விளைந்ததே.

1768. கட்புலமெய்த் தத்துவமாங் கைவல் லியசொருப
விட்புலமா வென்னை விழுங்கலுற்ற வாண்டவா !
எட்பகவும் யானுனைவிட் டில்லா திதயத்து
நுட்பவொட்ப மோனமெய்ந் நோக்கங் கிளர்ந்ததே.

1769. தடையான பாசந் தகர்த்தருளி யுள்ளத்
தடியேனை யாளாக வாண்டாயைச் செஞ்சொற்
றொடையாலர்ச் சித்துத் தொழுதெழலாற் சாலப்
படையாநின் றேன்றற் பரமோனப் பண்பே.

1770. இதயத் தியற்பரமா வீண்டலுற்ற வுன்னை
யெதிர்ந்தடைந்த வவ்வளவில் யானெனும்பொய்ம் [மாயச்
சதியகலத் தன்னியல்பாச் சார்ந்ததுபே ரின்ப
நிதியமா மோன நிரதிசய வாழ்வே.

### ௬௪. முற்றவத்தை வியத்தல்

(வெண்பா)

1771. இந்தப் பிறப்பி லிடைவிடா துன்பதத்தைப்
புந்திப் பொலிவுபெறப் போற்றுவது—முந்திப்பற்
பல்பிறப்பும் போற்றிப் பயின்றதவஞ் சேர்ந்தெனக்கு
நல்கியதெய் வீக நலன்.

(கொச்சகக் கலிப்பா)

1772. உன்னையே நாளு வுவக்கவென் னுள்ளத்துத்
துன்னியே நின்ருய் சொரூபமா வாண்டவா !
தன்னிலே தாளுத் தழைத்தசிவக் கேவலமெய்
யென்னில் விளங்கயா னென்னதவஞ் செய்தேனோ.

### ௬௫. அருள்வியப்பு

(வெண்பா)

1773. தனியனு நின்றசிவ தற்பரா வுன்னை
நினையநான் வல்லனோ நெஞ்சால்—அனையினுமெய்
யன்புபா ராட்டி யகம்புக்காய் நின்கருணை
யென்பா லிருந்தவா றென்.

1774. வெளியா வொளிர்சொருப வேட்கைமீக் கூர்ந்த
அளியனே ஞைசைநிறை வாக—விளைவித்
தருளியநின் சுத்தமோ ஞனுபவ மாண்பே
அருளியலா மன்று பிற.

1775. நின்னுருவென் னெஞ்சி னிறுத்தினய் நீக்கமற
என்னுயிர்நின் ருட்கீ ழிருத்திஞய்—பின்னும்
சிதானந்த வெள்ளமுளந் தேக்கினய் நின்பே
ருதாரந் தனக்குண்டோ வொப்பு.

1776. ஓலமிட்டுக் கூவி யுலறி யலறிநாட்
காலமெல்லாஞ் சிந்தை கரையுமன்பர்—ஞாலமேற்
பல்லோ ரிருக்கநின் பாரபட்சம் முற்றமுழுப்
பொல்லேன்பாற் சார்ந்ததிறும் பூது.

குறிப்பு:- இறும்பூது—ஆச்சரியம்.

(கொச்சகக் கலிப்பா)

1777. மருவுமெய்ஞ் ஞான வளந்தருகண் ணேக்கால்
வருகவென் றென்னை யழைத்துநின் மாட்டுப்
பெருகு சிவானுபவப் பேறளித் தாண்டாய் ;
திருவருளின் சீர்மையென்ஞற் செப்பற்பாற் றன்றே.

1778. பின்னியமா மோகப் பிணக்கான சிச்சடஞ்செற்
றென்னையே போன்ற விழிசினர்மற் றுருமில்லா
வென்னையினி தாண்ட விறைவாநான் காண்கிலேன்
உன்னையே போன்ற வுதாரப் பெரியரையே.

1779. தளைந்தவெம் பாசத் தடையறக்கூர் நோக்கால்
விளங்குறுமெய்ஞ் ஞானவருள் வித்தகா ! உண்மை
வளங்குலவு வாழ்வு வரையிலதா நாயேற்
குளங்குளிர நல்கியநின் ஞெட்பநுட்ப மென்னே.

1780. உன்னை யனையா யுயர்சிறப்பால் அஃதேபோ
லென்னை யனையே னிழிசிறப்பால் ; விந்தையன்றே
பன்னரிய சுத்தப் பரமார்த்த வொற்றுமையவ்
வுன்ஞே டெனக்குமற் றென்ஞே டுனக்குமே.

1781. நன்னயமா ரேகான்ம ஞானு பூதியால்
உன்னையே நாஞ வுணர்ந்துவக்கு மாறிதயத்
தென்னைநீ யாக வியல்வித்துக் கொண்டபெரு
மன்னவா நின்னருட்சீர் வண்மையையென்
[வாழ்த்துவதே.

1782. நிந்தைசேர் நானெனும்பொய்ந் நீச வகந்தையறப்
புந்தியிலே சுத்தவருட் பூரணமெய் வாழ்வொளிர
அந்தமிலாக் கண்ணு வடியனை நீ யாண்டுகொண்ட
விந்தையைநா னெங்ஙன் வியக்கேன் வியக்கேனே.

1783. உன்னடியேன் பாசத் துழன்றுழியா துன்சொருப
சந்நிதியென் னுள்ளுணர்விற் சார்வித்த வாண்டவா
என்னதுநா னற்ற வியற்சிற் பரசொருப
வன்னவருள் வாழ்வளித்த வள்ளாலுன் வண்மை
[யென்னே.

1784. தன்னந் தனிப்பர தத்துவமா முன்சொருபத்
தென்னையொன் ருக வியைவித்த வாண்டவா !
உன்னுந் தரமோ வுடையா யடியேனுக்
குன்னருளா லுற்ற வுயர்பெருமாண் போதவே.

1785. கண்ணுன வுண்மைக் கடவுளே ! சுத்தவருள்
விண்ணுக வென்மெய் விளங்கலுற்றே னுன்னருளால்;
உண்ணு ரமுத வொளிப்பிழம்பா வுள்ளத்திற்
றண்ணு ரமைதி தழைக்கநோக் குற்றுயே.

1786. அன்பிலா வேழை யடியே னுளத்திற்பே
ரின்பஞ் சுரக்க வினிதமர்ந்து, வாலறிவாந்
தன்பாலா வென்னைத் தடுத்தாண்ட நின்னருளைப்
பொன்போலே போற்றிப் பொதிந்துவைத்தே
[னம்மானே.

1787. எல்லாமா வுள்ள விறைவா வுனையன்றி
நல்லதோ கெட்டதோ நானறியா தாண்டாய்க்குச்
சொல்லவோ யாதுமிலேன் சுத்தப் பரவெளியா
வெல்லையில்பே ரின்ப வியற்பதத்தில் வைத்தாயே.

1788. வெவ்வா தனைகளால் வெந்தழுங்கா தென்னகத்திற்
செவ்வே சிவானுபவந் தேற்றியநின் பொன்னருளை
எவ்வாறு போற்றுவே னெண்ணும லெண்ணலன்றித்
தவ்வாத சுத்த சதாசிவமெய்த் தத்துவனே.

1789. மாலடைந்த சித்தத்துள் வாலறிவாப் புக்கவருட்
சீலமே யெண்ணியெண்ணிச் செம்மாந் திருக்கின்
ஏலவோர் பக்குவமு மில்லாதே னுள்ளத்துட் [றேன்
சால விளங்குமுப சாந்த சிவக்கடலே.

1790. நீயே சரணென்று நின்றருட் புகலடைந்த
நாயேனுக் குன்னதமெய்ந் நன்னலமா வுள்ளத்து
நீயேநா னாக நிகழ்சொருபந் தேற்றுவித்தாய்க்
கேயே யயலார்போல் யானென் னிசைக்கேனே.

## ௬௬. கைமா றின்மை

(வெண்பா)

1791. ஊனவகங் காரமா மூத்தைச் சிறைவிடுத்து
ஞானவெளியாக நடப்பித்தாய் — வானவா
நீயேயா னாக நிகழ்வாய்க்கு மாறுதவி
ஏயேயா னுற்ற லெவன்.

(கொச்சகக் கலிப்பா)

1792. என்னே ரிலாத விழிசினேன் கண்டுகொள்ளத்
தன்னே ரிலாத தனிப்பரங்காட் டிக்கொடுத்தாய் ;
உன்னே ரிலாத வுயரியபே ரொள்ளியாய்க்
கென்னே நினையினு நான் யாதுமிலேன் கைமாறே.

1793. மறைக்கலுற்ற வாணவத்தான் மாழாந்து நின்னை
மறக்கலுற்ற வென்னைநின் மாணடிக்கீழ் மாண
வுறைக்க வொடுக்கி யுதவியநின் னுட்சிக்
கிறக்கலன்றி யான்மற் றியற்றுவதோ ரேனே.

1794. உன்னாலே யென்னுண்மை யோர்த்துணர்ந்து [கொண்டேனுக்
கின்னமை யெல்லா மிகந்ததுகாண் ; சுத்தவருட்
பொன்னாக வென்னைப் பொலிவித்த நின்கருணைக்
கென்னா னியற்றுகே னெம்பிரான் சாற்றாயே.

1795. இன்பப் பிரானுனை யெம்மானே நானுன்மெய்
யன்புக் குரியேனு வாதரங்கூர்ந் தாண்டவுனக்
கென்புகல்வே னென்னகைம்மா றெவ்வாற்று
[லாற்றுவேன்
உன்புகழே யோதிநினைந் துன்மயமா வுள்ளேனே.

1796. என்னையுன் ஞேடே யிசைவித்துக் கொண்டவுனக்
கென்னநான் கைம்மா றியற்றுகே னெம்பெருமான்
துன்னு துரீய சொரூப வொளிவெளியா
முன்னடியி லென்மனத்தை யூன்றுவித்த லன்றியே.

1797. நாயே னகத்துமெய்ஞ் ஞான வருட்பிழம்பா
நீயே யமைந்துநின் றுய்க்குநா னென்னசெய்வேன்
பேயேன் பிரமாதப் பீழையறப் பேணுகுணத்
தாயேசே யோமுக்குத் தாரகமாந் தத்துவனே.

1798. நீயேநா னாக நிகழ்சொரூ பானுபவத்
தேயே யழுத்தியநின் னின்னருளுக் கென்கடவேன்
தாயே யனையபெருந் தண்ணளியா லுன்னடிக்கு
நாயேனை யாண்டகுரு நாதா வடியேனே.

1799. தன்மைபிற ராலறியாத் தத்துவா ! சுத்தவருட்
பொன்மயமாப் பொங்குசிவ பூரணமா முன்னையெனக்
கென்மயமா வுள்ளத் திலகுவித்தாய்க் கென்கடவேன்
புன்மையே னுக்குப் புகலிடமா வுற்றாயே.

1800. ஒளிவெளியா முன்னிலே யுன்னருளா லூத்தைக்
களியனேன் முற்றக் கரையலுற்றேன் கண்டாய்
வெளியொளியா மந்த விமுத்திப் பெருவாழ்
வெளியனே னுக்களித்தாய்க் கில்லேன்கை மாறே.

1801. உன்ன வொணுத வுதாரப் பரவெளியா
வென்னி லிருந்தொளிர்கின் றுய்க்குநா னென்கடவேன்
பின்னமில்பே ரின்பவருட் பெற்றிசே ருன்பதத்தா
டென்னதுநா னற்றொழிந்த வேழை யடியேனே.

1802. பொன்றாத வுண்மைப் பொருளா வொளிர்சொருப
நின்றாளென் னூடு நிரந்தரமா நின்றொளிர
நன்றா வருளியநின் னன்றிக்கோர் நாயடியே
னென்றா னியற்றுகே னுன்னையன்றி யில்லேனே.

1803. அன்புசிவ மாக வவிர்சொருபச் செம்பதப்பே
ரின்பவருள் வாழ்வா விதயத் தியல்கின்றாய்க்
கன்பிலு லென்புருகேன் ஆசாபா சங்கழலேன்
வன்புசேர் வஞ்ச வறும்பாழ் மனத்தேனே.

1804. தன்னையே யல்லாமற் றத்துவம்வே றில்லாத
வுன்னையே யென்னுருவா வுள்ளந் திளைத்தலுறு
நன்னயமார் சுத்தமெய்ஞ் ஞானானு பூதிதந்தாய்க்
கென்னையோ கைமா றியற்றுகே னெம்மானே.

1805. வென்றிசேர் சுத்தவருள் வித்தகா வுன்னையுள்ளி
முன்றி லடைந்தவிம் மூர்க்கனே னுள்ளத்து
மன்ற விளங்குசிவ மாண்பதங்காட் டிக்கொடுத்தாய்க்
கென்றனது நன்றியுணர் வென்றென்றும் பொன்றாதே.

1806. நீதியா லுன்னை நினைக்க வறியாதேன்
மாதிமைசேர் வஞ்ச மயக்க மனத்தையழித்
தூதியமா வுள்ளத் தொளிர்சொருபப் பேறளித்தாய்க்
காதனே னென்னகைம்மா றுற்றுவே னுண்டவனே.

1807. பொன்னின்வே றல்லாப்பொற் பூண்போலே சச்சித்தா
முன்னினும்யான் வேறல்லா வுண்மை வுணர்த்தினாய்க்
கென்கடவே னேழை யெளியனு முன்னடியேன்
மன்னவா வுன்னிலெனை மாய்த்தொழித லன்றியே.

1808. அம்மையப்ப னாக வகத்தே யமர்ந்தருளித்
தன்மயமா மோனவருட் சத்திநிபா தத்தெளிவாற்
செம்மைசேர் சுத்த சிவாத்துவிதச் சிற்பரவாழ்
விம்மையே நல்கினாய்க் கியானென் கடவேனே.

1809. நீதியா லுன்னை நினைய வறிகிலாப்
பேதையேன் மோகமனப் பீழைகெட நல்லருளாற்
றீதிலா வுண்மை தெரித்தா யனுபவமா
யாதொருகைம் மாறு மிலேன்கண்டாய் நானுனக்கே.

1810. ஆற்றப் பெரிய வருள்வெளியாப் பொங்கலாற்
சாற்றற் கரிய சதாசிவமெய்த் தற்பரா
தோற்ற வொடுக்கமறத் துன்றுமோ னானுபவத்
தேற்ற மளித்தாயைச் சிந்திப்ப தெவ்வாறே.

1811. சோகாக்க வென்னைத் துயருறுத்த நானெனும்பாழ்
மோகா ணவப்பேய் முரண்கெடச்செற் றுண்டவா
நீகாத் தருளியதை நெஞ்சார நன்றிகூர்ந்
தேகாக் கிரமா விடைவிடா தெண்ணுவனே.

## சுஎ. அன்ப ரடைவர்

(கொச்சகக் கலிப்பா)

1812. தொல்லாங்கே தோன்றலுற்ற சூனியப்பாழ்ந் [தோற்றங்க
ளெல்லாங் கழன்றொழிய வெல்லேயென் னுள்ளத்து
நல்லாங் கொளிர்சொருப நாதாநின் றுளடைந்தார்
பொல்லாங் கிலாதசிவ பூரணத்தில் வாழ்வரே.

## சுஅ. போற்றி

(வெண்பா)

1813. போற்றிநின் பொன்னருட்குப் போற்றிநின் பொன்- [மொழிக்குப்
போற்றிநின் பொன்னடிக்குப் புண்ணியா—போற்றி
சுத்தவருட் போத சொரூபப் பரவெளியென் [நின்
சித்தமுறச் சேர்த்தொளிர்நின் சீர்க்கு.

1814. போற்றியருட் புங்கவநின் பொன்னுரர் சிவசொருபம்
போற்றியருட் பாதசற் போதவொளி—போற்றிவிழி
போற்றியருட் புன்முறுவல் பூத்த முகாரவிந்தம்
போற்றியருட் செம்பொன் மொழி.

1815. ஏழையேன் வாழப்பே ரின்பவியற் செம்பதத்தென்
பாழிருள்சே தித்தவருட் பார்வையோய்—சூழொளியாய்
வாழிநீ யென்னுளமே மன்னுபெருங், கோயிலாய்
ஊழிநீ டூழி யுவந்து.

(கொச்சகக் கலிப்பா)

1816. எங்குற்று யென்னில்யா னிங்குற்றே னென்றகத்துத்
தங்குற்றுய் சாதித்த சாட்சாற்கா ரத்திறத்தாற்
பொங்குற்ற சுத்தவருட் போதானு பூதியில்யான்
மங்கலநீ ராடி மகிழ்தலுற்றேன் பெம்மானே.

## 21. முடிவுரை

(வெண்பா)

1817. வாயிலே வந்தபடி வாழ்த்தினே னென்னிதயங்
கோயிலா நண்ணிக் குலாவிநின்று—வாயிலா
மோனமே வாழ்த்தும் முறையென் றுணர்த்திய
ஞானகுரு மூர்த்தியை நான். [மெய்ஞ்

1818. பற்று மகந்தைமனப் பாசமாங் கோசமறச்
செற்றுவெளி யானவருட் சிற்பரமாய்—முற்ற
வகமகமென் றுள்ளத் தவிர்சொருபன் பாலே
முகமனேவன் செய்யும் பயன்.

1819. என்மா லகற்றி யிதயத் தொளியாலே
சன்மார்க்க பத்தியருள் சாமிக்குச்—சொன்மாலை
கைங்கரிய மாகக் கடவதுகாண் கற்பார்க்கு
மங்கலமுண் டாக மனத்து.

(கொச்சகக் கலிப்பா)

1820. கள்ளக் கவிதையோ சிந்தைகசிந் தூறுசிவ
வெள்ளக் கவிதையோ வேற்றுமைபா ராட்டாது
வள்ளற் குருரமணன் மார்பில் வனைந்ததாற்
றெள்ளத் தெளிந்தவருட் சீர்த்திபெற வாழ்ந்தேனே.

முற்றிற்று.